விநாயகர் துணை

# கொங்கு நாடு

முதலாவது

## தோற்ற இயல்

### தேவாரம்

ஆதி யாயவ னாரும் யாதவன்
போது சேர்புனை நீண்முடிப் புண்ணியன்
பாதி பெண்ணுரு வாகிப் பரஞ்சுடர்
சோதி யுட்சோதி யாய்நின்ற சோதியே

திருக்கோயி லில்லாத திருவி லூரும்
திருவெண்ணீ றணியாத திருவி லூரும்
பருக்கோடிப் பத்திமையாற் பாடா ஊரும்
பாங்கினொடு பலதளிக ளில்லா ஊரும்
விருப்போடு வெண்சங்க மூதா ஊரும்
விதானமும் வெண்கொடியு மில்லா ஊரும்
அருப்போடு மலர்பறித்திட் டுண்ணா ஊரும்
அவையெல்லா மூரல்ல அடவி காடே.

### திருவாசகம்

சிரிப்பார் களிப்பார் தேனிப்பார் திரண்டு திரண்டுன் திருவார்த்தை
விரிப்பார் கேட்பார் மெச்சுவார் வெவ்வேறிருந்துன் திருநாமம்
தரிப்பார் பொன்னம்பலத்தாடுந் தலைவா என்பார் அவர் முன்னே
தரிப்பாய் நாயேன் இருப்பேனா நம்பி இனித்தான் நல்காயே

உலகத்தே நாகரிகர் எனப்படுவோர், அறிவு, ஆற்றல், கல்வி செல்வமுடையோரே ஆவர். தேச முன்னேற்றத்துக்கு தேச சரித்திரம் இன்றியமையாதது. நமது முன்னோர்கள் தேச சரித்திரத்தைக் காலமுறையாக எழுதவில்லையென்பார்கள். அவாவுள்ளவர்களுக்கு நூல்களியற்றப் போதுமான ஆதாரங்கள் கிடைக்கின்றன. அவை சாசனங்கள், இலக்கியங்கள், கர்ண பரம்பரைக் கதைகளாகும். இவை மூன்றும் ஒவ்வாது முரண்படுமாயின் நன்கு ஆராய்ச்சி செய்து

உண்மை காணல் அறிவுடையார் கடன். உணர்ச்சியுள்ள மாந்தர்கள் தங்கள் பூர்வ சரித்திரத்தை நன்கு அறிய வேண்டும். அவ்வாறு அறிந்து கொள்ளாதார், தன்னைப் பெற்றோரை அறியாதவரினும் கீழ்ப்பட்ட வராவர். ஒரு நாட்டார் , தம் பூர்வ சரித்திரத்தைக் காவாது,தவிர விடுவது அவர் தமது பெருமையை இழந்ததாக முடியுமன்றிப் பிறிதன்று. நம்முள் பலர்க்கு அதன் அருமை இன்னும் தெரிந்த தில்லை. நம் கொங்கு நாட்டின் பழமையான உண்மைச் சரித்திரத்தைத் தெரிவிக்கும் ஒரு நூல் இல்லை. இது பெருத்த குறையே ஆகும். சற்று அறிவுள்ள மாந்தர்களெல்லாம் தங்கள் நாட்டின் சரித்திரங்களைத் தேடி எழுதி இன்புறுகிறார்கள். ஒரு சரித்திரம் தங்களைச் சார்ந்ததாகக் கேட்டால் பெரும் புதையல் கண்டதாக வியந்து பாராட்டுகிறார்கள். ஆதலின் நம் கொங்கு நாட்டுப் பழைய சரித்திரங்களையும், புதிய சரித்திரங்களையும் துருவி ஆராய்ந்து எழுத வேண்டுமென்ற ஆசை கொண்டு இதை ஆரம்பித்துள்ளேன்.

## தமிழகம்

கொங்கு நாட்டுப் பழைய சரித்திரங்களைச் சொல்வதன் முன் அது நன்கு விளங்கும் பொருட்டு, இந்நாடு திகழ்கின்ற தமிழகத்தின் தன்மையை ஒருவாறு சுருக்கமாக விசாரித்தல் இன்றியமையாதது. தமிழகம் என்பது தொன்று தொட்டுத் தமிழ் மொழியையே பேசிவந்த தமிழர்கள், பிறந்து வளர்ந்து ஆண்ட இடம். தமிழ் வாழும் வீடு என்றும் பொருள்படும். அது ' சம்புத் தீவினுள் தமிழக மருங்கில்' என மணிமேகலையிலும், ' இமிழ் கடல் வேலித் தமிழகம் விளங்க' எனப் பதிற்றுப் பத்திலும், ' இமிழ் கடல் வரைப்பிற் றமிழக மறிய' எனச் சிலப்பதிகாரந்தும் செவ்வனே விளங்கக் குறிப்பிடுவதால், இத் தமிழ் தேசமானது தமிழகம் எனப் பழைய காலத்தே வழங்கி வந்தது என்பது நன்கு தெரிகின்றது. இத் தமிழ் என்னும் பெயரைத்தான் 1755 வருஷங்களுக்கு முன் இத்தேசங்களுக்கு வந்துபோன, தூர தேச யாத்திரீகனான டாலமி (Ptolemy) என்னும் யவன பண்டிதர் குறிப்பில் லிமிரிக் (The lost lemuria) எனவும், 1600 வருஷங்களுக்கு முன் வரையப்பட்டதென்னும் பியூடெஞ்சர் படங்களில் டிமிரிக் எனவும் மாறுபட்டு அந்த அந்த பாஷைகளில் எழுதப்பட் டிருக்கிறது. ஒரு காலத்தே தெற்கே கடல் கொள்ளப்பட்ட குமரி (லெமூரியா) கண்டத்தின் தென்கோடியி லிருந்து விந்தமலை வரையில் தொடர்ந்து கிடந்த பெரு நிலப் பரப்பாகும் என்று இப்பொழுதைய ஆராய்ச்சி வல்லார் கூறுகிறார்கள். இதனால் நம் தமிழ்நாட்டின் ஆதிப் பெயர் தமிழகம் என வழங்கினதாக அந்நிய தேச சாக்ஷியமும் சொல்லப் படுகின்றது.



## தமிழக வரம்பு

இத்தகைய தமிழகம் என்னும் நாட்டின் எல்லை எதுவரையுள்ளது என்பதைப் பற்றி ஆராய்ந்து பார்ப்போம். ' குணகடல் குமரி குடகம் வேங்கடம் எனு நான்கெல்லையி னிருந் தமிழ்க் கடலுள்' எனப் பவணந்தியார் நன்னூலிலும், ' வேங்கடங் குமரி தீம்புனற் பௌவத் தின்நான் கெல்லையினிருந்தமிழ் பயின்ற' எனச் சிலப்பதிகார உரைப்பாயிரத்தும், ' தென் குமரி வட பெருங்கற் குண குட கடலா வெல்லை' எனப் புறநானூற்றிலும், ' வடவேங்கடந் தென் குமரி யாயிடைத் தமிழ்கூறு நல்லுலகத்து' எனத் தொல் காப்பியத்தும், பிற்காலத்தில்,

' வடதிசை மருங்கின் வடுகு வரம்பாகத்
தென்றிசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும்
வரை மருள புணரி

என சிறுகாக்கை பாடினியார் எல்லை வகுத்தார். மற்றெல்லோரும் வேங்கடமென்று வடக்கெல்லை கூறியுளர். சிறுகாக்கைபாடினியார் மாத்திரம் வடுகு என்றது, இவர் காலத்தில் வடக்கெல்லையில் ஆந்திர தேசத்தாராகிய வடுகர் பரவி இருந்ததைக் குறிக்கின்றது. இவ்வாறாகத் தெற்கில் கன்னியாகுமரியும் வடக்கில் திருவேங்கட மலையும், மேற்கிலும் கிழக்கிலும் சமுத்திரமுமான எல்லையுடையது எனத் தெரிகிறது. செந்தமிழ்நாடு, ' குமரி வேங்கடங் குண குடகடலா மண்டினி மருங்கிற் றண்டமிழ் வரம்பிற் செந்தமிழ் கொடுந்தமிழ் என்றிரு பகுதியின்' எனச் சிலப்பதிகார ஈற்றுக் கட்டுரையிற் சொல்லியபடி செந்தமிழ்நாடு, கொடுந்தமிழ் நாடு எனத் தமிழ்நாடு இரண்டு பகுதியாகிறது. அவை, கருவூரின் கிழக்கு, மருவூரின் மேற்கு, வைகையாற்றின் தெற்கு, மருதையாற்றின் வடக்கு இதனிடையே உள்ளது செந்தமிழ்நாடு என்பர்.

தென்பாண்டி குட்டங் குடங் கற்கா வேண்பூழி
பன்றி யருவா வதன் வடக்கு - நன்றாய
சீத மலாதி புனநாடு செந்தமிழ்சேர்
ஏதமில் பன்னிரு நாட்டெண்,

தென்பா"ண்டி குட்ட நாடு, குடநாடு, கற்கா நாடு, வேணாடு, பூழி நாடு, பன்றி நாடு, அருவா நாடு, அருவா வடதலை நாடு, சீத நாடு, மலையமானாடு, என்னும் பன்னிரண்டு நாடுகளும், செந்தமிழ் நாட்டுத் தென்கீழ் பால் முதலாக வடகீழ்பால் இறுதியாகச் சூழ்ந்துள்ள கொடுந்தமிழ் நாடுகள் எனத் தொல்காப்பியம் எச்சவியல் ' செந்தமிழ் சேர்ந்த' என்னும் சூத்திரத்துக்கு, சேனாவரையர், நச்சி:னார்க்கினியர் எழுதிய உரைகளால் தெரிகிறது.

தென் மதுரை கபாடபுரம் தென்சமுத்திரத்திருந்த பாண்டி நாட்டில் தென்பாலி முகத்துக்கு வடவெல்லை யாகிய பஃறுளி என்னும் ஆற்றுக்கும், இடையே எழுநூற்றுக்காவதவாறும், இவற்றின் நீர்மலி வானெனமலிந்த , ஏழ் தெங்க நாடு முதலிய நாற்பத்தொன்பது நாடுகளும், தடநீர்க்குமரி வடபெருங்கோட்டின் - காறும் கடல் கொண்டு விட்டதால் சமுத்திரமாய்விட்டது. இதனைத் திரு. ஹெக்கல் என்னும் ஜர்மனி தேசத்துச் சிறந்த ஆராய்ச்சியாளர் தம் ஆராய்ச்சியால் கண்டு கூறுவது 'இந்து மஹாசமுத்திரம், முன்பு ஒரு கண்டமாக விளங்கியதென்றும், அது சந்தா தீபந்தொடங்கி ஆபிரிகாவின் கீழ்வரை எட்டி இருந்ததென்றும், அதுவே மனித வர்க்கத்தின் உற்பத்தி ஸ்தானமாக இருந்திருக்கலாமென்றும், பின்னரே அது கடலில் மூழ்கியதென்றும் கூறியுள்ளார். திரு ஸ்காட் எலியட் என்பவர் எழுதிய மறைந்த குமரிக்கண்டம் என்னும் புத்தகத்தில் தென்கடற் பகுதியில் விசாலமான நாடு இருந்ததென்றும், அது நீராக மறைக்கப்பட்டதென்றும் குறிப்பிட்டிருக்கிறார். திரு ஈடெண்டு என்பவர் எழுதியுள்ள சிலோன் என்னும் புஸ்தகத்தில் கூறியுள்ளதாவது: - கிறிஸ்து பிறப்பதற்கு சுமார் 280 வருஷங்களுக்கு முன்பு கடலோரத்தில் உண்டாகிய கொந்தளிப்பின் காரணமாக இலங்கை இந்தியாவினின்றும் வேறுபட்டிருக்க வேண்டும். இதே மாதிரி பிளவுபட்டதென பௌத்தர்களும் கூறுகிறார்கள். கிறிஸ்து பிறப்பதற்கு 500 வருஷங்களுக்கு முன்பும் மீண்டும் ஒரு கொந்தளிப்பு ஏற்பட்டது. கிறிஸ்து பிறப்பதற்கு 300 வருஷங்களுக்கு முன்புகூட மூன்றா முறையாகக் கடற் கொந்தளிப்பு ஏற்பட்டது. இப்போது இந்தியாவின் பெரும்பாகம் கடலுள் ஆழ்ந்து மறைந்து போயிற்று என்று விவரிக்கிறார்கள்.

## காவிரிப்பூம்பட்டினம்

கீழ் கடற்கரையில் காவிரி சங்கமமாகும் இடத்தில் உள்ளது. சம்பாபதி, புகார் என்னும் பெயர்களுள்ளது காவிரிப்பூம்பட்டினம். இது 1800 வருஷங்களின் முன் ஆண்ட, கரிகால் வளவன் கட்டியது. இலங்கை, பர்மா முதலிய தேசத்துக்கும் சோழ தேசத்துக்கும் இக் காவிரிப்பூம்பட்டின மூலம் நல்ல வியாபாரம் நடந்தது. ரோம் தேசக் குடிகளும், யவனர்களும் குடியேறினர்.

'நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகடற் றுகிரும்
கங்கை வாரியும் காவிரிப்பயனும்
ஈழத் துணவும் காழகத் தாக்கமும்'

கொண்டு வந்து நிரப்பினார்கள்.



'பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்
கட்டு நுண்வினைக் காருக மாக்களும்
கஞ்ச காரரும் செம்புசெய் குநரும்
மரங்கொல் தச்சரும் கருங்கைக் கொல்லரும்
கண்ணுள் வினைஞரும் மண்ணீட்டாளரும்
பொன்செய் கொல்லரும் நன்கலந்தருநரும்
துன்ன காரரும் தோலின் றுன்னரும்
கிழியினும் கிடையினும் தொழில்பல பெருக்கிப்
பழுதில் செய்வினைப் பால்கெழு மாக்களும்'

என்றும் அரேபியர், கிரேக்கர், ரோமர் முதலாயினோர் தமிழ்நாட்டில் விற்றற்பொருட்டு குதிரை கொண்டுவந்திறக்கிய காட்சியினை,

'விழுமிய நாவாய் பெருநீ ரோச்சுநர்
நனர்தலைத் தேயத்து நன்கலந் தூய்ம்மார்
புணர்ந்துடன் கொணர்ந்த புரவி

என்று மதுரைக் காஞ்சியினும் உரைக்கின்றது

மரக்கலந்தருஞ் செல்வத்தின் பொருட்டுத் தாம் பிறந்த நிலத்தை விட்டு வந்த பல தேசத்தார் ஒரு நிலத்தாரைப் போல இங்கே கலந்து வாழ்ந்து வந்தனர். இவர் பல பாஷைகளைப் பேசுவர். (பட்டினப் பாலை 126) புகாரின் கப்பற் சுங்கச் சாலையில் ஏற்றுமதி இறக்குமதிச் சரக்குகளின் மீது சோழனது புலி முத்திரை பொறிக்கப்பட்டது. (120-136) - வருங் கப்பல் திசை தப்பிப் போகாது கலங்கரை விளக்கம் இருக்கும் இந்நகரை ராஜதானியாகக் கொண்டு ஆண்டு வரும் நெடுமுடிக்கிள்ளி என்னும் அரசன் காவாது தன் முன்னோர்கள் நடத்திவந்த இந்திரவிழாவைச் செய்யாது விடுத்தனன். இந்திரன் ஏவலால் சமுத்திரம் பொங்கி அதனைச் சோ்ந்த பிறவிடமும் அதனைத்தலைநகராகக் கொண்டு ஆண்ட நெடுமுடிக்கிள்ளி என்னும் அச்சோழ அரசன் காலத்து கடல் கொள்ளப்பட்டது என மணிமேகலையிற் கூறப்படுகிறது.

இவ்வாறு கீழ்கடலும் தென்கடலும் கொள்ளப்பட்ட இடம்போக எஞ்சி நின்ற நிலப்பரப்புத்தான் தமிழகமாக இருக்கிறது. கோடாகோடி பொருள்கள் எல்லாம் போனதன்றி தமிழில் இருந்த அதிமேன்மையுற்ற எண்ணூல், பொருள்நூல், பல்லுயிர் நூல், விண்ணூல், விஞ்சை நூல் ஆதியாய தெய்விக நூல்களெல்லாம் கடல்வாய் மூழ்கின.

'ஏரண முருவம் யோகம் இசைக்கணக் கிரதஞ்சாலம்
தாரண மறமே சந்தந்தரும்ப நீர்நிலமுலோகம்
ஆரணம் பொருளன் றின்ன மானநூல் யாவும்வாரி
வாரணங் கொண்ட தந்தோ வழிவழிப் பெயருமான்

## தமிழ்

தமிழ் என்பதுதான் என்ன? என்பதைப் பற்றிச் சிறிது விசாரிக்கலாம். திராவிடமென்ற பெயர், காலஅளவில் திரமிள என்றாகிப் பின்னர் தமிழ் என்றாயிற்று என்பர் சிலர். தமிழ், தெலுங்கு, கன்னடம், மஹாராஷ்ட்டிரம், கூர்ச்சரம் என்னும் இந்த ஐந்து பாஷைகள் வழங்கும் இடத்துக்குத் திராவிடம் எனப் பெயராக வழங்குகிறது. இவற்றைப் பஞ்சத் திராவிடமென்கிறார்கள். பொதுப் பெயராக வழங்கும் திராவிடமென்பது சிறப்புப் பெயராக எவ்வாறு மருவித் (தமிழ்) என்னும் ஒரு பாஷைக்கு வழங்கக்கூடும் என அதனை மறுப்பர் சிலர். தமிழ் என்பது மதுரம் இனிமை மென்மை எனப் பொருள் கொண்டு விளங்குகிறது. 'இனிமையுந் நீர்மைய தமிழேனவாகும்' (பிங்கலந்தை) 'தமிழியன் மென்னடை மடந்தையர் சார' (பெருந்திரட்டு) தெலுங்கு முதலிய மற்றை வடபுல எழுத்துக்களைப் போல உந்தல், உறத்தல், முதலான கடின சத்தமின்றி மென்மையாய் இனிமையோடு கூடக் கேட்போர்க்கும், உச்சரிப்போர்க்கும் மதுரம் விளைவிக்கத்தக்கது ஆதலின் தமிழ் என்ற பெயர் தமிழேயாகும். சமஸ்கிருதம் வடநாட்டிலும், தமிழ் தென் நாட்டிலும் வழங்குதல் நோக்கி, சமஸ்கிருதத்தை வடமொழி என்றும், தமிழைத் தென்மொழி என்றும் கூறுவர். வடக்கின் கண் வழங்கும் பற்பல மொழிகளுக்கு ஆரியம் (சமஸ்கிருதம்) பிறப்பிடமாகும். தென்னாட்டில் வழங்கும் தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு முதலிய மொழிகளுக்குத் தென்மொழி (தமிழ்) பிறப்பிடமாகும். இதனால் வடமொழி தென்மொழி என்னும் இரண்டு பாஷைகளும், இங்கு வழங்கும் மற்றை மொழிகட்கெல்லாம் பழைமைப் பெருமையுள்ளனவாம். இவ்விரண்டு பாஷைகளும் தெய்வத் தோற்ற மு[illegible]-யனவாய்த் தெய்வத்தன்மையுடைய ரிஷிகளால் வழங்கப்பட்டன வென்பது தெரிகிறது. அகத்தியர் தமிழிலக்கணம் செய்தார். அது அகத்தியம் ஆம்.

'ஆயுங் குணத்தவலோகி தன்பக்க லகத்தியன் கேட், டேயுமவனிக் கியம்பிய தண்டமிழ்' (வீர சோழியம்) இதனால் அவலோகிதனார் அகத்தியர்க்கு ஆசிரியராதல் தேற்றம். அகத்தியருக்கு மாணாக்கர் தொல்காப்பியர். இவரது காலம் இடைச்சங்க காலத்தின் பிற்பகுதியாகும். அதுவும் இன்றைக்கு 8000 - ஆண்டுகட்கு முந்தியது என்பர். அகத்தியருக்கு பன்னிருவர் மாணாக்கர். திரண தூமாக்கினி, தொல்காப்பியனார், அதங்கோட்டு முனிவனார், துராலிங்கனார், செம்பூட்சேயனார், வையாபிகனார், காய்ப்பியனார், பனம்பாரனார், கழாரம்பனார், அவிநயனார், காக்கை பாடினியார், நற்றத்தனார், வாமனனார் என்னும் பன்னிருவர்.



## தமிழகத்தின் தொன்மை நிலை

பாரத காலத்தில் சேரபாண்டிய நாடுகள் மிகுந்த மேன்மை நிலையிலிருந்தன. பாண்டு மகனான அர்ச்சுனன் பாண்டி நாட்டரசன் மகளை மணம் செய்து கொண்டான், பாரதப் போரிலே. மூவேந்தரும் பாண்டவர்க்குத் துணையாய் நின்று போர் புரிந்த விவரம் பாரதத்திலே அறியலாம். உதியன் சேரலாதன் என்னும் சேர மன்னர் போர் முடிகிற வரையில், பாண்டவர் சேனைக்குப் பெருஞ்சோறு அளித்துக் காத்து பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் என்று வழங்கப் பெற்றான். 'பாரதப் போர் செற்றானும் கண்டாயிச் சேய்' (நள வெண்பா). சோழன் ஒருவன் பாண்டவ சேனைக்கு முழு உதவியும் புரிந்தனன் என்னும் செய்தியை

'தாங்கள் பாரத முடிப்பளவு நின்று தருமன்
தன் கடற்படை தனக்குதவி செய்தவவனும்'

என்று கலிங்கத்துப் பரணி கூறுகிறது.

இராமாயண காலத்திலும் மூவேந்தர் நாடுகள் மேன்மையுற்றிருந்தன. பாண்டியரது தலைநகரம் கபாடபுரமெனப் பெயர் சிறக்குமாறு அதன் கோட்டை வாயிற் கதவு பொன்னாற் செய்யப்பட்டு, முத்தாலும் மணியாலும், அலங்கரிக்கப் பெற்று விளங்கியதனை வான்மீகி முனிவர் தம் ராமாயணத்துக் கூறவரேல் அக்காலத்துத் தமிழகம் அடைந்திருந்த மேன்மைக்கு வேறு சான்று என்ன வேண்டும்.

பாடலிபுரத்தில் அரசாண்ட, கிறிஸ்துவுக்கு முன் 269 வருஷத்தில் சிம்மாசனமேறிய மௌரிய வமிசத்து அசோகச் சக்கரவர்த்தி, தன்னுடைய நியமனங்களில் தமிழகத்தின் மூவேந்தரைக் குறித்துள்ளார் என்பது எவ்வளவு மேன்மையைக் கொடுக்கிறது.

கி.மு. 47-ல் ஜூலியஸ் சீசர் வீரரின் கீழ் ரோமர் செங்கடல் வியாபாரத்தை விருத்தி செய்ய ஆரம்பித்தார்கள். கிறிஸ்தவ சகாப்தம் முதல் நூற்றாண்டின் ஆரம்பத்தில் எகிப்து தேசத் துறைமுகப் பட்டணங்களுக்கும், இந்நாட்டுக்கும் பெருத்த வியாபாரங்கள் நடந்தன. மலையாளத்திலிருந்த மிளகும், கொங்கு நாட்டுப் படியூரிலிருந்து கோமேதகமும் இலங்கையிலிருந்து முத்துங் கோமேதகமும் ரோமர்களுக்கு வியாபாரம் செய்யப்பட்டது. அக்காலத்து ரோமர்களுக்கு கோமேதகம் மிக்கப் பிரியமான இரத்திலம்.

### வர்த்தகம்

முன் கூறிய கடற் துறைகளாகிய காவிரிப்பூம்பட்டின முதலிய இடங்களில் பலவகையான பொருள்கள் வர்த்தகம் நடந்தன. அவைகளில் அருமணவன், தக்கோலி, கிடரராவன், எனப்பட்ட துகிலின் தொகுதியும், மலையாரம், திமுரன், பச்சை கிழான் பச்சை

முதலிய ஆரத் தொகுதியும், அம்பரேச்சம், கஸ்தூரி, சவ்வாது முதலிய வாசத் தொகுதியும், மலைச் சரக்கு, கலையடைவுச் சரக்கு, சூடன், சீனச்சூடன் எனப்பட்ட கருப்பூரத் தொகுதியும் வாணியம் செய்யப் பட்டவாதல் ஒருதலை.

## கல்வி

இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழ்க்கும் இலக்கணமாகிய அகத்தியமும், தொல்காப்பியம், மாபுராணம், பூதபுராணம், பனம்பாரம், பன்னிருபடலம், அவிநயம், காக்கைப்பாடினியம், இறையனார் களவியல் முதலிய இயற்றமிழ் நூல்களும், பெருநாரை, பெருங்குருகு, இசைநுணுக்கம், பஞ்ச மரபு முதலிய இசைத்தமிழ் நூல்களும், பரதம், குணநூல், கூத்த நூல் முதலிய நாடகத் தமிழ் நூல்களும் தழைத்து விளங்கின. எண்ணிறந்த பரிபாடல், முதுநாரை உள்ளிட்டன தலைச்சங்கத்தாராலும், கலி, குருகு என இத் தொடக்கத்தார் இடைச்சங்கத்தாராலும், நெடுந்தொகை நானூறு, நற்றிணை நானூறு, புறநானூறு, ஐங்குறு நூறு, பதிற்றுப்பத்து, நூற்றைம்பது, கலி எழுபது, பரிபாடல், பத்துப்பாட்டு, முத் தொள்ளாயிரம், கூத்து, வரி, சிற்றிசை, பேரிசை என்னும் இத் தொடக்கத்தன கடைச்சங்கத்தாராலும், பாடப்பட்டு விளங்கின. தெய்வப்புலமைத் திருவள்ளுவ தேவர் திருக்குறளும், சேர முனிவராகிய இளங்கோவடிகளால் சிலப்பதிகாரமும், கூலவாணிகன் சாத்தனாரால் மணிமேகலையும்; கபிலர் முதலிய நல்லிசைப் புலவர்களால் இன்னாநாற்பது, இனியவை நாற்பது முதலிய கீழ்க் கணக்கு நூல்களும், இயற்றப்பெற்று நிலவின. மற்றும் வானநூல், எண்ணூல், மருத்து நூல் முதலிய கலைகளும் வழக்கில் இருந்தன. மற்றும் அகமுழவு, அகப்புற முழவு, புற முழவு என எழுவகையாற் பகுக்கப்படும் பேரிகை, படகம், துடுமை பெரும்பறை முதலிய தோற்கருவிகளும், வங்கியம் என்னும் துளைக்கருவியும் - பேரியாழ்- மகரயாழ் - சொங்கோட்டியாழ்- என்னும் நரம்புக் கருவிகளும், கஞ்சக் கருவியும் பயிலப் பெற்று வந்தன. ஆயிரம் நரம்புடைய ஆதியாழ் என்பதும் இருந்தது. குரல்-துத்தம்-கைக்கிளை- உழை- இளை- விளரி- தாரம் என்னும் ஏழிசையினும் பிறக்கும் பண்விகற்பங்களும், பதினோராயிரத்துத் தொண்ணூற்றொன்றாகிய ஆதியிசைகளும் தமிழ்ப்பாணர்களால் அறிந்து பாடப்பெற்று வந்தன. எத்தியல் பொதுவியல் என்னும் இருதிறமுடைய அகக்கூத்து - புறக்கூத்துகளும், குரவை- கலிநடம்- ஆலங் காட்டாண்டி முதலிய பல்வரிக் கூத்துகளும் பிறவும் நடிக்கப் பெற்று வந்தன.

## புலவர்கள்

இப்பொழுது வெளிவந்துள்ள எட்டுத்தொகை பத்துப்பாட்டு முதலிய கடைச்சங்க இலக்கியங்களிலிருந்து அறியப்படும் புலவர்



எழுநூற்றவராவர் - இவர்களில் ஒளவையார்-ஆதிமந்தியார்- காக்கைப் பாடினியார் - நச்செள்ளையார் - ஒக்கூர் மாசாத்தியார்- வெள்ளி வீதியார் - முதலாயினார் நல்லிசைப் புலமை வாய்ந்த மெல்லிய லாராவர். இவற்றிலிருந்து அக்காலத்தே கல்வியில் ஆண்பெண் இருபாலாரும் எங்ஙனம் சிறப்படைந்தனர் என்பது புலப்படும்.

## சோழ நாடு

காவிரிப்பூம்பட்டினம், உறையூர், நாகப்பட்டினம், தஞ்சாவூர் முதலிய சிறந்த நகரங்களை உள்ளிட்டது சோழ தேசம். இதனை மாட்சி பெற அரசாட்சி செய்தவர்கள் சோழர்கள். இராஜகேசரி, பர கேசரி, இராசேந்திர மிருத்து சித்து, வியாக்கிர கேது, அரிகாலன், விஜயாலயன், ஆதித்தன், பராந்தகன், பெருநற்கிள்ளி, கரிகாலன், கோச் செங்கணான், உருவப்பஃறேரிளஞ்சேட்சென்னி முதலிய தெய்வீக வரம் பெற்ற சோழர்கள் அருமை பெருமை ஓங்க ஆட்சி புரிந் தார்கள். இச்சோழர்களில் பலர் தேவாலயங்கள் கட்டியிருக் கிறாகள்.

சோழ நாட்டின் கண்ணதாகிய திருவாரூர்த் திருப்பதியின் பழமையைத் திருநாவுக்கரசு நாயனார் திருத்தாண்டகத்து ஓர் பதிகம் முழுவதிலும் வைத்துப் பாராட்டியிருப்பது சிந்திக்கற்பாலது.

ஒருவனா யுலகேத்த நின்ற நாளோ
ஓருருவே மூவுருவ மான நாளோ
கருவனாய்க் காலனை முன் காய்ந்த நாளோ
காமனையுங் கண்ணழலால் விழித்த நாளோ
மருவனாய் மண்ணும் விண்ணும் தெரிந்த நாளோ
மான் மறிக்கை யேந்தியோர் மாதோர் பாகம்
திருவினான் சேர்வதற்கு முன்னோ பின்னோ
திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே

என்பது காண்க. இங்ஙனமே இந்நாட்டின் பழைமையைக் குறிப்பன மற்றும் பலவுள்ளன. முசுகுந்த வேந்தனும் பொன்னுலகத்திலுள்ள மூர்த்திகளை புவியின்கட்கொணர்ந்து, திருவாரூர், திருநாகைக் காரோணம், திருக்காறாயல், திருக்கோளிலி, திருமறைக்காடு, திருநள்ளாறு, திருவாய்மூர் என்னும் ஏழு திருப்பதிகளிலும் முறையே ஓரோவொன்றாகப் பிரதிட்டை செய்தனன்.

இனிக் கோச்செங்கட் சோழர் செய்த திருப்பணியை திருமங்கை யாழ்வார் பெரிய திருமொழி, திருநறையூர்ப்பதிகத்தில்,

பாராள ரவரிவரென் றழுந்தை யேற்ற
படை மன்ன ருடல்துணியப் பரிமா வுய்த்த
தேராளன் கோச் சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடஞ் சேர்மின் களே

என்றும், திருமங்கையாழ்வாரே இவரது கோயிற்றிருப்பணியைக் குறித்து 'இருக்கிலங்கு திரு மொழிவா யெண்டோ ளீசற் கெழின் மாடம் எழுபது செய் துலகமாண்ட, திருக்குலத்து வளச் சோழன்' என்று கூறியிருக்கின்றார். இதனால் எழுபது மாடக்கோயில் எடுத்தன ரென அறியலாகும். மாடக் கோயில் என்பது பெருங்கோயில் என்றும் வழங்கப்பெறும். பெருங்கோயில் எல்லாம் கோச்செங்கண்ணர் கட்டியவே எனின், 'பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும் பெருங்கோயி லெழுபதினோ டெட்டும்' என்று திருநாவுக்கரசர் அடைவு திருத்தாண்டகத்திற் கூறியிருத்தலின், எழுபத்தெட்டுப் பெருங்கோயில் செங்கட் சோழர் எடுத்தனரென்று கொள்ள வேண்டும். இவர் சிலந்தியாயிருந்து இறைவனை வழிபட்டு அரசாயின உண்மையையும், இவர் பல திருக்கோயில்கள் எடுப்பித்த வண்மையையும் திருநெறித் தமிழ் வேதம் அருளிய சைவசமய குரவர்கள்தம் பதிகங்களில் 'செங்கட் பெயர்கொண்டவன் செம்பியர் கோன்' என திருஞான சம்பந்தரும், 'புத்தியினாற் சிலந்தியுந்தன் வாயினூலால்' எனத் திருநாவுக்கரசரும், 'தெருண்டவாயிடை' என நம்பியாரூரரும் தம் தேவாரத்தால் விளக்கியுள்ளார்கள்.

திருவாரூரில் மநுநீதி கண்ட சோழன் அரசுபுரியுங் காலத்துத் தனது ஒரு மகன் தேர் ஊர்ந்து செல்லும் வீதியில் குறுக்கிட்ட பசுங்கன்று தேர்ச்சக்கரத்தடி வீழ்ந்து மாய்ந்தது. அக்குற்றத்திற்காக மந்திரிகள் தடுத்துங் கேளாது, தன் மகன் மீது அத்தேரைவிட வேண்டுமென்று முறை செய்தவனும், திருமுறை கண்ட சோழன், சேக்கிழாரைக் கொண்டு பெரிய புராணம் பாடுவித்த அநபாயச் சோழன் முதலிய அநேக சோழர்கள் பல தேவாலயங்களையும், வெட்டாறுகளையும், பெருத்த கால்வாய்களையும் உண்டாக்கி, நீர்வளந்தேக்கிப் புனநாடு என்னும் பெயர் உண்டாக்கினர். பல பெரியோர்களைக் குடியேற்றி னர். இவர்களது மேன்மையான எண்ணங்களும், பணிகளும், யாவராலும் புகழ்ந்து பாராட்டப்படுகிறது. இந்தச் சோழர்களை, சென்னி வளவன், கிள்ளி, செம்பியன், பொன்னித் துறைவன், புலிக்கொடிப் புரவலன், நேரியன், ஆர்த்தார்க்கோ,கோனேரி, அபயன், நேரி வெற்பன், கோழி வேந்தன், சூரியன், புனனாடன், கோச் சோழன் என்னும் பெயர்களால் காவியங்கள் இவர்களைப் புகழும். இவாகள் ராஜசுயாகம் செய்தவர்கள், துலாபாரம் ஏறினவர்கள், இரணிய கற்பம் புகுந்தவர்கள் என எத்தனை பேர் புண்ணிய சீலர்கள் இருந்தார்கள்.இவர்கள் ஆண்ட இச்சோழ தேசத்தை ஒரு காலத்தே தென் சோழம், வடசோழம் என இரண்டாகச் சோழன் ஒருவன் பிரித்தான். தென் சோழத்தைத்தான் இப்பொழுது சோழ நாடு என்பது.

'கடல் கிழக்குத் தெற்குக் கை;பொரு வெள்ளாறு
குடதிசைக்குக் கோட்டைக் கரையாம் - வடதிசையில்



ஏணாட்டுப் பெண்ணை இருபத்து நாற்காதம்
சேரநாட்டுக் கெல்லை எனச் சொல்'

என்னும் வெண்பாவால் இந்நாட்டின் எல்லையும் பரப்பும் சொல்லப் படுகிறது.

## தொண்டை நாடு

காஞ்சிபுரம் முதலிய நன்னகரங்களை உள்ளிட்டதும் தொண்டை மான் என்னும் அரசன் முதலானோரால் ஆட்சி புரியப்பட்டதுமான தொண்டைமண்டலம் என்பது அது:-

'மேற்குப் பவளமலை வேங்கடம் நேர் வடக்காம்
ஆர்க்குமுவரி அணி கிழக்கு - பார்க்குளுயர்
தெற்குப் பினாகி திகழிருப தின்காதம்
நற்றொண்டை நாடெனவே நாட்டு'

இத்தொண்டை நாட்டை முற்காலத்து குறும்பரசர்கள் ஆண்டார் கள். இந்த குறும்ப அரசர்களுக்கு அரசன் 'கோமந்து குறும்பப் பிரபு' என்பார். இந்த வட சோழத்தை 24 கோட்டங்களாயும், 79 நாடுகளாயும் வகுத்து ஆட்சி செய்து வந்தார். இதனைக் கைப்பற்றிக் கொள்ள வேண்டுமென்று சோழன் வெகுபாடுபட்டான். பின்பு சிவ ப்ரதிஷ்டை செய்து தவங்கிடந்தான். இதைத்தான் சோழலிங்கம் என்பது. இஃது உள்ள ஊரைச் சோழ லிங்கபுரம் என்பர். இது சோழிங்கபுரம் என மருவி வழங்கப்படுகிறது. தொண்டைமானுக்கு முடிசூட்டினர். அவனும் அவன் மரபினரும் ஆண்டார்கள். வட சோழத்தை விவசாயத்தில் விருத்தியாக்க வேண்டுமென்று தென் சோழத்திலிருந்து அறுபதாயிரம் வேளாளக் குடிகளைக் குடியேற்றி னான். அப்படிக்கு குடியேறினவர்களுக்கும், பல காணி முதலிய பெருமைகளையும் கொடுத்தான். அப்படி அதனைப் பெற்றுக் கொண்டு தங்கியிருந்தவர்களைத்தான் தொண்டை மண்டல வேளாளர் என்றும் கொண்டை கட்டிகளென்றும் கூறுவது. இந் நாட்டிற் பல வித்வான்கள் முதலிய பெரியோர்கள் தோன்றினார்கள். 'நற்றொண்டை, நன்னாடு சான்றோருடைத்து' என ஔவைப் பிராட்டியார் புகழ்ந்து பாராட்டினார்.

ஏகாம்பரநாதர் காமாட்சியம்மை யெழுந்தருளிய காஞ்சிபுரம் ஒரு காலத்தே பல்லவர்களும், சோழ வேந்தர்களும் ஆட்சி புரிந்தது. திருவேங்கடம், திருவொற்றியூர், கண்ணப்ப நாயனார்க்குத் திருவருள் பாலித்த திருக்காளத்தி, அங்கம்பூம்பாவையாக்கிய திருமயிலாப்பூர், திருவாலங்காடு, திருமுல்லைவாயில் முதலிய திருத்தலங்களுள்ளது. காஞ்சிபுரத்தில் வரதராஜப்பெருமாள் கோயில் கொண்டுளர். திருப்பாடகம், திருபூரகம், திருவெஃகா என்னும் திருப்பதிகளும்

அங்கே உண்டு. பல சிவாலயங்களும், விஷ்ணு ஆலயங்களும் நிரம்பிய இடம். பரிமேலழகரும்,கச்சியப்ப சிவாசாரியாரும் பிறந்த இடம். நீலகண்ட சிவாசாரியார், சங்கராசாரியர், இராமாநுஜா சாரியர் முதலிய மதாசிரியர்கள் மதவாதம் புரிந்த மேன்மையுற்ற இடம். மணிமேகலை பலநாள் தங்கி இருந்து அறவணடிகள் பால் தருமோப தேசம் கேட்டு அடங்கின இடமாகும். அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை என்னும் சப்தபுரிகளில் ஒன்று.

மேன்மையுற்ற திருக்குறள் அருளிய திருவள்ளுவ தேவர் வசித்தது இந்நாடே ஆம். அடுத்த திருவண்ணாமலையில், முருகவேள் திருவருள் பெற்றுச் சந்தப்பாக்களால் திருப்புகழ் சாத்தியருளிய அருணகிரிநாதர் தோன்றி அமுத மழை பொழிந்தனர். பாரதம் பாடிய பெருந்தேவனார், வில்லிபுத்தூராழ்வார், வரந்தருவார், வரபதி ஆட்கொண்டான் இந்நாட்டவர்களே.

கல்லாருங் கற்றாருங் கலந்து மாந்தத்தகும் அருட்பா என்னும் செந்தமிழ் மழை சொரிந்த கருங்குழி இராமலிங்க சுவாமிகள் விளங்கியதும் இங்ஙனமாம். சிதம்பரத்திலே விசுவசித்து என்னும் வேதியருக்கும், அம்பிகையம்மையாருக்கும் புத்திரராக அவதரித் தவர், பால சந்நியாசம் மேற்கொண்டு வடநாடு சென்று வேத சாஸ்திரங்களில் வல்லுநராய்ப் பிரம்ம சூத்திரம் உபநிஷத் முதலிய வற்றிற்கு பாஷியமெழுதினவர், மதஸ்தாபனம் செய்து ஜகத்குரு எனப் பட்டம் பெற்றவர். இவர் 32 வயதில் காஞ்சிபுரத்தில் பரிபூரண முற்றவர். இவரது பிரதம சிஷியராகிய ஆநந்தகிரி என்பவர் தாம் எழுதிய சங்கர விஜய நூலிலே குறித்திருக்கின்றார். இவர் காலம் 2180 - வருஷங்களுக்கு முன்னெனக் குறிக்கிறார்கள். இவரே ஆதி சங்கராச்சாரியார் என்ப.

மதிப்புற்ற சென்னை நாராயணசாமி பிள்ளை என்னும் யாதவப் பெரியார் துணைக் கொண்டு நின்ற பச்சையப்ப முதலியார் என்னும் வேளாளப் பிரபு சென்னையில் ஒப்புயர்வற்ற ஒரு கல்விக் கழகத்தை நிறுவினர். இம்மட்டோ இத்தமிழ் நாட்டிற் பல ஆலயங்களில் ஆராதனத்துக்குத் தினம் தளிகை நிலையாக நடந்தேறி வருமாறு ஏற்படுத்தியுள்ளார். அவ்வாலயந் தொழுவதற்கு வரும் பெரியோர் களுக்கு நிவேதனமான திவ்விய பிரசாதம் வழங்குமாறு தக்கவகை செய்திருக்கிறார்.

புதுச்சேரியில் ஆநந்தரங்கப் பிள்ளை யென்னும் ஒரு யாதவப் பிரபு அவர் காலத்து தினக்குறிப்பு வைத்திருந்தார். அதை பிரஞ்சுக்காரரும், ஆங்கிலேயரும், இன்னும் பல மேனாட்டவர்களும் அந்தக் குறிப்புக்கு வியந்து பாராட்டிப் பெற்றுத் தம் மொழியில் மொழி பெயர்த்துள்ளார்கள். இதில் பல விஷயங்களன்றி இராஜாங்க விஷயம்



தெரிந்திருக்கின்றனவாம். இங்கிலாந்து தேசத்தில் ஸாமுயல் பேபீஸ் (Samuel Pepys) தினசரி வைத்திருந்ததாகக் கொண்டாடப்படுவது போலத் தமிழகத்திலும் ஒரு பிரபு தினசரி வைத்திருந்தார் என்ற சிறப்பிற்கு ஆநந்தரங்கப் பிள்ளை பாத்திரன். இவர் பிரம்பலூர் மிட்டாதார். இவரன்றி இவர் முன்னோர்களும் சிறந்த கொடையாளிக ளென்பர்.

1742 முதல் 1754 வரை பிரஞ்சு கவர்னராகப் புதுச்சேரியிலிருந்த (Dupleix) டியூப்ளே ஆநந்தரங்கப் பிள்ளையின் ராஜதந்திரங்களைக் கண்டு கொண்டாடி நட்பினராக இருந்தனர் என்ப. ஹைதராபாத்து, மைசூரரசன், கர்நாடக நவாப்புகளான சந்தா சாஹேபு, மஹமது அலி முதலியோர், திருவநந்தபுர அரசன் ஆகிய சிற்றரசர்களும், இவனது நட்பினைப் பெற விரும்பினர். தக்ஷிண இந்திய நவாபு வஜீர் [illegible] என்ற பட்டமும், ஐதராபாத் நைஜாம் வஜாரதன் என்ற பட்டமும் கொடுத்தனர்.

பானுகிர ணம்பார்க்கும் பங்கேருக மதியந்
தானும் வரப் பார்க்குஞ் சகோரங்கள் - வானமரும்
மையைப் பார்க்கும் மயில்கள் மாவிஜயாநந்த ரங்கன்
கையைப் பார்க்கும் புலவோர் கண்.

தமிழ்ப்புலமை சிறந்து பண்டிதராதற்குப் பேராதவராகச் சிதம்பரத்தில் தமிழ் யூனிவர்சிடி (Annamalai University) ஒன்று அண்ணாமலை செட்டியார் நிறுவியுள்ளார். அது எப்பொழுதுஞ் சிறந்தோங்கி வருவதற்காகப் பெருநிதி வைத்திருக்கின்றனர். நிலவியுள்ள இடம் அண்ணாமலை நகரமெனப் பெயரிடப் பட்டிருக்கிறது. இது சிறப்பினும் சிறப்பான பேறமாகும்.

## புதுக்கோட்டை

புதுக்கோட்டை ராஜ்ஜியம் சிறிதாக இருப்பினும் தமிழ்நாட்டு முடியுடைவேந்தர்களாகிய சேரசோழபாண்டியர் ஆட்சிக்குப் பின்பு இதுவே தமிழ்நாட்டு அரசாங்கமாக விளங்கி வருகிறது. புதுக் கோட்டை மன்னர் மிகவும் அதிகாரமுள்ளவராவார். தமது நாட்டிற்குள் குற்றவாளிகட்கு எவ்வகைத் தண்டனையும் விதிக்க உரிமையுள்ளவர். ஹைகோர்ட்டு போலும், நீதி மன்றங்களைத் தாமே ஏற்படுத்தி நடத்தும் உரிமை வாய்ந்தவர். ' ஆங்கில அரசாங்கத்துக்கு' ஒரு சிறிதும் இறை செலுத்தாத பெருமை பெற்று இந்திய நாட்டு ஏனை மன்னர்களிலும் சிறந்து விளங்குபவர். இந்த இராச்சியத்தின் பரப்பு 1200 சதுர மைல். இதன் வரும்படி 21 -லட்சம் ரூபாயாகும். இம்மன்னர்களுக்கு 11 மரியாதைக்குண்டுகள் போடும் உரிமையுண்டு.

## பாண்டி நாடு

"சந்தனப் பொதியச் செந்தமிழ் முனிவனும், சவுந்திர பாண்டிய னெனுந் தமிழ் விரகனும், சங்கப்புலவருந் தழைத்தினிதிருந்த, மங்கலப் பாண்டிவள நாடு" என்னும் தமிழ்நாடு என்று பெயர் பெறும். இத்தமிழ்நாடு என்னும் பெயர் புனனாட்டிற்கும் வழங்கி வந்ததென்பர் ஒரு சாரார். தமிழை விருத்தி செய்தமை பற்றியும், மிகுதி பற்றியும் பாண்டி நாட்டிற்கே சிறப்பாக வழங்கியதென்பர் ஒரு சாரார். இது வளமையும், செல்வமும், தெய்வீக முதலிய சிறப்புகள் மிக்குடையது. மஹோததி என்னும் கீழ் கடலும், இரத்நாகரம் என்னும் தென்கடலும் சேர்கின்ற தானம். இலங்கைக்குப்போவதற்கு ராமபிரான் தவங்கிடந்து சமுத்திரத்தில் திருவணை கட்டியதும், ராவணாதிகளைக் கொன்ற பாவம் நீக்கச் சிவலிங்கப் பிரதிஷ்டை "இராமேசுரம்" ஆக்கியதும் இவ்விடமே.

தமிழ்ச்சங்கங்களிருந்து விளங்கியதும், சொக்கநாதப் பெருமான் அறுபத்து நான்கு திருவிளையாடல் நடத்தியதும் இந்நாட்டிலே யாகும். நவரத்தினங்களில் உயர்வு பெற்றதான முத்துச் சனிப்பது இந் நாட்டுக் கடலிலேயாம். திராவிட தேசாதிசனாகிய இந்திரத் தூய்மன் குறுமுனிவரால் சாபமேற்று யானையானதும், திரிகூடாசலத்தில் சஞ்சரித்து, ஹா ஹா வென்னும் கந்தர்வனான முதலை காலைப் பிடித்துக் கொள்ளப் பல நாள் துன்புற்று, ஜீவனம் ஜீவனமாகவே கொண்டு வருந்தித் தப்பித்துக் கொள்ள வழியற்றுக் கடைசி தன் உபாசனாமூர்த்தியாகிய விஷ்ஸவை நினைத்து ஆதிமூலமே என்று அபயமிட விஷ்ணு பகவான் ஓடோடியும் வந்து காத்தருளியதும் இங்ஙனமே ஆகும்.

"வெள்ளாறது வடக்காம் மேற்குப் பெருவழியாம்
தெள்ளார் புனற்கன்னி தெற்காகும் - உள்ளார்வத்
தாண்ட கடல் கிழக்கா மைம்பத் தறுகாதம்
பாண்டி நாட்டெல்லைப் பதி."

இவ்வெல்லைக்குள் தான் செழியன், தமிழ்நாடன், கடற்கோ, தென்னவன், வழுதி, மீனவன், பஞ்சவன், மாறன், கௌரியன், வேம்பின்தாரன், கைதவன், பொதிய வெற்பன், வைகைத்துறைவன், குமரிச் சேர்ப்பன் கோப்பாண்டியன் முதலிய பெயர்களால் காவியங்கள் புகழுறப் பாண்டியன் இல்வந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறன், பாண்டியன் கருங்கையொள் வாட்பெரும் பெயர் வழுதி, பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரபெரு வழுதி பாண்டியன் கீரஞ் சாத்தன், பாண்டியன் கூடாகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி, பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியாதி ஒப்புயர் வற்ற அதிவன்மை பெற்ற பாண்டியர்களிருந்து ஆட்சி புரிந்ததும் இவ்விடமே ஆகும். பாண்டியன் நன்மாறனை, நக்கீரர் பின்வருமாறு குறிக்கின்றார்



"யவனர், நன்கலந்தந்த தண்கமழ்தேறல்,
பொன் செய்வள்ளத்தேந்தி நாளு
ஒண்டொடி மகளிர் மடுப்ப மகிழ்சிறந்
தாங்கினி தொழுமதி யோங்குவாண் மாற"

யவனர் குப்பியிற் கொடுவரப்பட்ட தேறல் (சாராயத்தை) பெண்கள் தங்க வள்ளத்திலேந்தி ஊட்ட மகிழ்ச்சியோடு நடப்பாயாக என்னும் பொருள். பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ் செழியன் காலத்தே மதுரைக் கோட்டை வாயிலைக் காத்தற்கு ரோமவீரர் அமர்ந்திருந்தனர். (சிலப்-காதை. 14-66-67.)

இதனால் யவனரும் மிலேச்சரும் தமிழரசருக்கு மெய்க் காப்பாள ராக நியமிக்கப்பட்டிருந்ததும் விளங்குகிறது. யவனர் என்னும் பதம் கிரேக்கரைக் குறித்தற்கு அவர் மொழியில் "ஐயோனிஸ்" என்பதன் சிதைவு. வடநூல்களில் கிரேக்கரைக் குறிக்க யவனபதம் வழங்கு கிறது.

தென்காசியில் அரிகேசரி பராக்கிரம பாண்டியன் சாலி 1368-இல் ஆலயமும் கட்டினான். ஜடிலவர்மனான குலசேகர தேவன் திருநெல்வேலி மாறனான வீரவேற்குல சேகரன், சீவல வேள் பாண்டியன், அபிராமன் என்னும் வீரபாண்டியன் இவன் கலி 4689-ல் பட்டந்தரித்தான் என்றும் சிவகாசி விசுவநாதராலய சாசனங்கள் கூறுகின்றன. இன்னம் எத்தனையோ அரசர்கள் மாட்சி பெற ஆட்சி செய்துள்ளார்கள். இம்மட்டோ, தமிழ்நூல்களியற்றிய வரதுங் பாண்டியன், அதிவீர ராம பாண்டியன், குலசேகர பாண்டியன் முதலிய சைவ இரத்தினங்கள் தோன்றித் தமிழுலகத்தில் பல நூல்கள் இயற்றிப்பேருபகாரம் பரிந்துள்ளார்கள்.

"மறப்போர்ப் பாண்டியரறத்திற் காக்கும்
கொற்கையம் பெருந்துறை முத்து"
"விறற்போர் பாண்டியன் புகழ்மலி சிறப்பிற்
கொற்கை முன்றுறை யவிர்கதிர் முத்தம்"

(அகம் 27-201)

## சேது சமஸ்தானம்

சேதுபதிகள் மிகுந்த கல்வி ஞானமுடையவர்கள், பரம்பரையாகத் தமிழ்ப்புலவர்களை ஆதரித்து வருகிறார்கள். அதிலும் பாஸ்கர சேதுபதியவர்கள் அருங்கலை விநோதரும், பெருங்கொடை வள்ளலுமாவர், கொடைமடமுள்ளாரென்பார்கள். நான்காவது சங்கம் என ஒன்று மதுரையில் நிறுவித் தமிழ்ப்புலவர்களாதற்குக் கற்பிக்கத் திட்டம் செய்துள்ளதுமன்றி, வாசிக்கும் மாணாக்கர் களுக்கும் ஆதரவு செய்துள்ளார்கள். ஆண்டு நிறைவு காலத்தில்

அறிஞர்களைக் கூட்டி விழவு நடத்துகிறார்கள். இந்தச் சங்க சம்பந்தத்தில் பாலவநத்த ஜமீன்தார் பாண்டித்துரைத்தேவரவர்கள் மிக்க ஊக்கம் கொண்டிருந்தனர்.

## சேரர்

வடக்குத் திசை பழனி வான் கீழ் தென்காசி
குடக்குத் திசை கோழிக்கோடாம் - கடற்கரையின்
ஓரமோ தெற்காகு முள்ளென்பதின் காதகம்
சேர நாட்டெல்லையெனச் செப்பு

இது திருமாலின் ஆறாவது அவதார மூர்த்தியும், ஜமதக்கினி முனிவரின் புத்திரனுமாகிய பரசுராமர் தான் தவம் இயற்றுதற்கு ஓர் புனிதமான இடம் வேண்டுமெனப் பரமசிவனை வேண்டினர். சிவபெருமானின் அருளால் மேலைக்கடல் இடங் கொடுத்து விலகிற்று. அவ்விடத்தில் தவம் செய்தனர். திஷ்யந்தன் பௌத்திரனும், ஆசிரிதன் புத்திரனும் ஆன கேரளன் என்பான் கண்ட நாடு ஆதலின் கேரள நாடு எனவும் கூறுவர். கார்த்தவீரியன், ஜமதக்கினி முனிவரைப் பகைகொண்டு கொன்றுவிட்டுச் சென்றதை, வெளியிலிருந்து ஆசிரமமுற்றுக் கண்ட பரசுராமர் பெரிதுஞ் சினந்து 'சத்திரியர்களை அடியுடன் கொல்லுவேன்' எனச் சபதம் செய்து கொண்டு 21 தலைமுறை வரை அங்ஙனமே செய்து அவ்வுதிரத்தாற் பிதிர்க்கடன் முடித்தார். அப்பழி நீங்குகைக்காகக் கேரளநாட்டை அந்தணர்களுக்குத் தானஞ் செய்ததாகவும் கூறுவர்.

தமிழ்நாட்டு மூவேந்தர்களுக்குள்ளே சேரனே முதல்வனெனக் கருதப்படுகிறான். அக்கினி குலத்தவனெனத் திருவிளையாடற் புராணம் கூறா நின்றது. இச்சேரர்கள் எல்லாச் சமயத்தார்களையும் ஆதரிக்கிறார்கள். பாரதயுத்தத்தில் பாண்டவர், துரியோதனாதியரெனும் இருவகையினர் சேனைக்கும் உணவளித்தவன் ஒருவனென்றால் இந்நாட்டுச் செல்வப் பெருக்கையும், உதாரணத்தையும் என்னென்று கூறலாகும். இம்மட்டோ ஸ்ரீசொக்கநாதப் பெருமான் திருமுகங் கொடுத்தனுப்பினரென்பதைவிட வேறு உயர்வு என் கூறுவது? ஐம்பெருங்காவியங்களுக்குள்ளே சிலப்பதிகாரம் என்னும் அரிய நூலன்றிச் சைவத் திருமுறைகளுள்ளும் கக-வதில் பொன் வண்ணத்தந்தாதி, ஒரு சேரர் பிரானாலியற்றப் பெற்று உளள்து. இன்னும் எத்தனையோ சங்க நூல்கள் செய்துள்ளார்கள். பாடக் கேட்டும் ஆதரித்திருக்கிறார்கள். இவர்கள் பெருமையை வட மொழிப் பாரத ராமாயணாதிகளிலும் கூறப்பட்டிருக்கிறது. சேர அரசர்கள் எத்தனையோ பேர்களென்றாலும் ஒழுங்குபெற்ற சரித்திர மகப்படவில்லை. ஆனால் சங்க நூல்கள் முதலியவற்றுட் கண்ட சிலசேர வேந்தர்களை இங்கே பார்க்கலாம்.

கோச்சேரமான் ஆனைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை



சேமான் அந்துவஞ் சேரலிரும்பொறை, சேரமான் கடுங்கோ வாழியாதன், சேரமான் கணைக்கால்இரும்பொறை, சேரமான் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்.

## சேர நாடு

உதியன், குடகன், குடக்கோ குட்டுவன், கேரளன், கொங்கன், கொல்லி வெற்பன், கோதை, சேரலன், பனந்தாரான், பூழியன், பொருநைத் துறைவன், பொறையன், போந்தின் தாரோன், மலையமான், மலையன், வஞ்சிவேந்தன், வானவரம்பன், வானவன், வில்லவன், என்பன முதலிய பெயர்களைக் கொண்டு அவர்கள் ஆளும் நாடு சேரநாடு ஆகும்.

இச்சேரநாட்டில் தமிழ்நாடு பன்னிரண்டில் ஐந்து நாடுகள் இருக்கின்றன. பூழி வடமலையாளம், குடம் தென் மலையாளம், குட்டம் கொச்சி, வேணாடு திருவாங்கூர், கற்கா நாடு பாலக்காடு என்னும் ஐந்து நாட்டினையும் தன்னுள் அடக்கி நிற்பது சேர நாடு. இவ்வைந்தினும் கற்கா நாடு (பாலக்காடு) ஒழிய, மற்றைய நான்கும், வடக்கிலிருந்து தெற்கு நோக்கி அரபிக் கடலோரத்தில் வரிசையாக அமைந்து உள்ளன.கற்கா நாடு, குடநாட்டுக்குத் தென்பாலிருப்பது. இத்தகைய சேர நாட்டிற்கு இராஜதானி வஞ்சி.

## திருவஞ்சைக் களம்

திருவஞ்சைக்களமும், கொடுங்கோளுரும் சேரர்கள் தலைநகரின் பிரிவுகளாம். அதுவே வஞ்சிநகர் என்பது மகோதை என்றும் (மகோதயபுரம்) உயர்ந்த சிறந்த கோட்டையுடையது என்றும் கூறுவர். சமய நூல்களில் கூறப்படும் முசிறி என்னும் கடற்றுறைப்பட்டணம் இதுவே.

இதை வான்மீகியார் முரசிபந்தம் எனக் (கிஷ்கிந்தா காண்டம்) அத்-13 சுலோ-12-ல்) கூறியுள்ளார். அகநானூற்றில் -

'யவனர்தந்த வினைமானன் கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
வளங்கெழு முசிறி

மாந்தைத் தொண்டியென இதுவன்றிச் சேரர்களுக்கு இரண்டு துறைமுகப் பட்ட ணங்களுண்டு.(Voscoe d Gome)வாஸ்கோ டிகாமா என்னும் போர்த்துகல் தேசத்துக் கப்பல் யாத்திரிகன் 1498-ல் வந்து மிளகு ஏற்றிக் கொண்டு போனான்.

திருவஞ்சைக்களமென்பது கொச்சிக்கு வடக்கே 10 மைல் தூரத்தில் பேரியாறு மேல்கடலில் சங்கமமாகும் இடத்திலுள்ளது. (சேரன்) கரூர் கொச்சிக்கு வடகிழக்கே 28 - மைலும், கோதைமங்கலத்துக்கு 3-மைலிலுமிருக்கிறது. இப்போது பாழூராயிருக்கிறது என்றாலும் பல பெரிய கட்டிடங்களும் கோவிலுமிருக்கின்றன.

## தேவாரம்

தலைக்குத்தலை மாலையணிந்ததென்னே தலைமேற் கங்கை வெள்ளந்தரித்த தென்னே, அலைக்கும் புலித்தோல் கொண்ட சைத்த தென்னே அதன்மேற்கதநாகங்கச் சார்ந்த தென்னே, மலைக்கு நிகரொப்பனவன்றிரைகள் வலித்தெற்றிமுழங்கி வலம்புரி கொண், டலைக்குங் கடலங்கரை மேன் மகோதை யணியார் பொழி லஞ்சைக் களத்தப்பனே.

என்று தொடங்கிய தேவாரப்பதிகம் சுந்தரமூர்த்தி நாயனாரால் ஒதியருளப் பெற்றது. சேரகுலத்தில் பெருமாக்கோதையார் எனத் தோன்றி, இளமையிலேயே கல்வி ஞானம், சிவபக்தி, அடியார் பக்தியோடு வளர்ந்தார். அரசு பூண்டார் எனினும் அகத்துறவு உள்ளவராதலின் அரசை வெறுத்து தபோவனம் எய்தினர். மந்திரிகள் முதலியோர் வேண்டுதலால் சிவாஞ்ஞையும் பெற்று அரசாங்கத்தை ஏற்றுக் கொண்டனர். சோழநாடு முதலிய தமிழ்நாட்டுத் தலங்க ளெல்லாம் தரிசனம் செய்தும், பாமாலை சூட்டியும், வழிபாடு செய்து வருவாராயினர். ஒரு நாள் ஒரு வண்ணான் உவர்மண் கொண்டு வரும் பொழுது ஈரத்தால் தேகத்தில் நனைந்து வடிந்ததைத் திருநீறு உத்தூளனமாக அணிந்து வரும் பெரியார் என எண்ணி அடி பணிந்தனர். பாணபத்திரனுக்காகச் சிவபெருமான் திருமுகப் பாசுரம் எழுதப் பெற்றவர். சேரமான் பெருமாநாயனார் எனப் பெயர் பெற்றவர். சுந்தரமூர்த்தி நாயனார் வெள்ளானையிவர்ந்து கைலைக் குச் சென்றபோது, குதிரையூர்ந்து பின் சென்றவர். திருவாரூர் மும்மணிக் கோவை, பொன்வண்ணத் தந்தாதி, திருக்கைலாய ஞானவுலா முதலிய பாடியருளினர்.

ஒரு சிறிய மண்டபத்தில் நடராஜப் பெருமான் 2 - அடி உயரத்தில் மிகுந்த சுந்தரமாக விளங்குகிறார். கர்ப்ப- கிரஹத்தின் தென்மேற்கு மூலையில் ஒரு சிறு மண்டபத்தில் சுந்தரமூர்த்தி சுவாமிகளும் சேரமான் பெருமாளும் 10 அங்குலத்தில் உலோகத்தால் செய்யப் பெற்று ஒரு பீடத்தில் பிரதிஷ்டிக்கப் பெற்றுள்ளது. ஆலயத்துள் சாக்கொன்றை மரம் ஒன்று பெரிதாக நிற்கிறது. ஸ்தல விருட்சம் என்கிறார்கள்.கொடுங்கோளூரில் பகவதி கோயில் ஒன்று பிரசித்த மாக இருக்கிறது. கண்ணகி என்னும் பத்தினித் தெய்வத்தின் கோயில் என்பர். (சினை மிகுதானைவரனவன் குடகடற், பொலந் தரு நாவா யோடிய அவ்வழி, பிறர்கலஞ் செல்கலாதனையே மற்றை, புற 126) சேர நாட்டின் வழி அனுமதியின்றி வேறு நாட்டாரது கப்பல்கள் செல்லாது நின்றிருக்கும். சேர அரசர்கள் கொடையாலும், படையாலும், நடையாலும், சிறப்புற்று வாழ்ந்திருந்தார்கள்.



## திருச் செங்குன்றூர்,

### 4–வது திருவாய் மொழி

அமர்ந்த நாதனை அவரவராகி அவர்க் கருளருளுமம்மானை
அமர்ந்த தண்பழனத் திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையானை
அமர்ந்த சீர் மூவா யிரவர் வே தியர்கள் தம்பதி அவனி தேவர் வாழ்
வமர்ந்தமாயோனை முக்கணமமானை நான்முகனையமர்ந்தேனே.

இங்கே மூவாயிரவர்களிருப்பது, கொங்கு நாட்டு வாரக்க நாட்டுக்குக் களந்தை என்னும் ஊரில் குறுநில மன்னவர் மரபில் தோன்றிய கூற்றுன் நாயனார், சிவபக்தி மேலீட்டால் நால்வகைச் சேனைகளும் அமையப்பெற்று, உலகத்தைத் தம் அடிக்கீழ்ப்படுத்தி ஆண்டனர். ஆனால் மகுடமின்றியிருப்பதைக் கருதித் தில்லை வாழந்தணர்களை வேண்டினர்.

மல்லன் ஞாலம் புரக்கின்றார் மணிமாமவுலி புனைவதற்குத்
தில்லை வாழந்தணர் தம்மை வேண்டவவருஞ் செம்பியர் தம்
தொல்லை நீடுங்குல முதலோர்க் கன்றிச் சூட்டோ முடியென்று,
நல்காராகிச் சேரலன்றன் மலை நாடணைய நண்ணுவார்.

ஒருமையுரிமைத் தில்லைவா ழந்தணர்க டம்மிலொரு குடியை
பெருமை முடியை யருமை புரி காவல் பேணும் படியிருத்தி,
இருமைமரபுந்தூயவர்தாஞ் சேரர் நாட்டிலெய்திய பின்
அருமையுறவான் மனந்தளர்ந்து மன்றிலாடுங் கழல் பணிவார்.

சோழ அரசர் மரபினருக்கல்லது முடிதரியோம் என்று கூற, இனி இங்கிருந்தால் அரசனால் ஏதேனும் கேடு நேருமோ என்று ஐயுற்றுத் தங்களில் ஒரு குடியை முடியைக் காக்குமாறு விட்டுச் சேரநாட்டுக்குத் தில்லை வாழந்தணர் சென்றார்கள் என்பதைப் பெரிய புராணம் கூற்றுவனாயனார் புராணத்துக் கூறுகின்றது.

கண்ணகியின் கணவன் கோவலனைச் சிலம்பு திருடினானென்று, பாண்டியன் ஆணையால் கொலையுண்ட பின், கண்ணகி வைகை யாற்றங்கரை வழியே இம்மலை வந்து ஒரு வேங்கை மரத்தடியில் 14 - நாட்களிருந்து, புருஷன் வரப்பெற்று வானுலகம் அடைந்ததாகச் சிலப்பதிகாரம் - மணிமேகலையில் சொல்லப்படுகிறது. அப் பொழுது செங்குட்டுவன் இமயமலையிலிருந்து சிலை கொண்டு வந்து கோயிலும், உருவமும் சமைத்து விழா நடத்தினது இச் செங் குன்றூரில் எனத் தெரிகிறது. இத்திருப்பதியில்தான் விறன்மிண்ட நாயனார் தோன்றியது எனப் பெரிய புராணம் கூறுகிறது.

அகலப்புழைக்குத் தென்கிழக்கில் 20 மைல் தூரத்துச் செங்குன்றூர் இருக்கிறது.

## கங்க நாடு

' நன்னவேற்றை-கறும் பூணத்தி துன்னருங் கடுந்திற்ற, கங்கர் கட்டி' (அகம் 44) பங்களர், கங்கர் பல்வேற் கட்டியர், (சிலப்2515) எனப் பழைய நூல்களிலும், ' கங்கரி வரைய, கரு நாடரி வரைய' (திருவிளையாடல் மெய் காட்டிட்ட 30) எனப் பிற்காலத்து நூலிலும் கூறுப்படுதல் காண்க. இக்கங்க அரசரில் மிகுந்த கீர்த்தி வாய்ந்தவரிருந்திருக்கிறார்கள். பவணந்தி முனிவரைக் கொண்டு நன்னூல் என்னும் இலக்கண நூல் பாடுவித்த சீய கங்கன் என்பவனும் ஒருவன். சீய கங்கன் என்னும் பெயரேயன்றி அமராபரணன் திருவேங்கம்பமுடையான் என்னும் மறு பெயரும் உண்டு. இவன் மனைவியின் பெயர் அரியபிள்ளை. இச்சீயகங்கன் காஞ்சீபுரம் ஏகாம்பரநாதசுவாமி கோயில் துந்தா விளக்கு வைத்தான் என்று கி.பி. 1205-ல் வெட்டப்பட்ட சாசனம் ஒன்றில் தெரிகிறது. இற்றைக்கு கி.பி.740 ஆண்டுகட்கு முன் பட்டந்தரித்த மூன்றாம் குலோத்துங்கன் காலத்து அவ்வரசனுக்குள்ளடங்கி ஆண்ட சிற்றரசன் இவனாகும். மைசூர் ஜில்லா திருமுக்கூடல் நரசாபுரம் தாலுகாவைச் சேர்ந்த (சனகை) சனநாதபுரம் என்னும் கிராமம். அது கங்க நாட்டிற் காவிரீயின் வடக்கெல்லையில் உள்ளது. அவ்வூருக்கு ..விலங்கை யென்னும் பெயருண்டு.

கி.மு. 50, 60 வருடங்களுக்கு முன் உச்சயினிலிருந்தவரும் முக்கால உணர்ச்சி உள்ளவருமாகிய பத்திரபாக என்னும் சைன முனிவர் தம்முடனிருந்த சங்கத்தாரை நோக்கி, ' இனி இங்கே பனிரண்டு வருஷம் நிற்றத்குரிய கொடிய வறிய காலம் வரக்கூடுமென்று தெரிகிறது. நீங்கள் வேறிடஞ் செல்லுக' என்று சொல்ல, அவர்கள் அவருடைய கட்டளைப்படியே அந்நகரை விட்டு நீங்கித் தென்திசைக்கண் வந்து தமிழ்நாடு எங்கும் உலாவிவிட்டு, மிக்க வளமுள்ளதாகக் காணப்பட்ட தவளஸ்கோவரம் அல்லது சிரவணபெளகுள் என்னும் ஊரை அடைந்தார்கள். அதன் பின் அவர்களால் தென்னாட்டில் சைன மதம் பரவியது. சைன சங்கங்கள் பல அங்கேயே ஸ்தாபிக்கப்பட்டன. கல்வி கேள்விகளிற் சிறந்த பல பெரியயோர்கள் உளராயினர். அவர்களுள் சிம்ம நந்தி யாசாரியாரென்பார் கங்க ராஜ்ஜியத்தை ஸ்தாபித்தார். சிரவண வெண் குளம் என்பது மைசூர் சமஸ்தானத்துள்ள ஹாசன் ஜில்லா சென்ன ராயப்பட்டணம் தாலுகாவில் உள்ளது. பாஷாபிமானத்திற் சிறந்த சைன அரசர்கள் ஆட்சிப்பட்டு வந்தது. அக்காலத்தில் யாதொரு கவலை யுமின்றி சைன பண்டிதர்கள் கூட்டம் கூட்டமாக இருந்து நூல் ஆராய்ச்சி செய்து கொண்டும், நூல்களியற்றிக் கொண்டும், நூல் களுக்கு உரைகள் செய்து கொண்டும்வாழ்ந்து வந்தார்கள். அக்காலத்தேதான் சீவகசிந்தாமணி, சூளாமணி முதலிய சைன இலக்கிய நூல்களும், நன்னூல், நேமிநாதம் யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை, வச்சணந்தி மாலை, முதலிய இலக்கண நூல்களும் பல உரைகளும் இயற்றப்பட்டிருத்தல் வேண்டுமென்று



வெளியாகின்றது. நேமிநாதமும் வச்சணந்தி மாலையும் இயற்றிய குணவர பண்டிதரும், அவராசிரியர் வச்சணந்தி முனிவரும் உறைந்து வாழ்ந்த... என்பது கொங்க வாரக்க நாட்டிலுள்ளது.

இப்பொழுது கொள்ளேகாலம் தாலுகாவில் காவேரியை அடுத்து மணல்மேடாக இருக்கும் தலைக்காடு என்பதை ராஜதானியாக ஏற்படுத்திக் கொண்டு இக்கங்க அரசர்கள் பலர், கொங்கு நாட்டை சேர்த்து ஆண்டு வந்தார்கள். இதனையடுத்த ஆனைமலை, பருகூர் மலை, பிளிகிரிரங்கள், குன்றுகள் முதலியவற்றோடு தமிழகம் (தமிழ்நாடு ) ஆகிறது.

இந்தக் கங்க நாட்டுத் தென்கோடியில், தகடூர் நாடு, அதில் இருந்து வெகு சிறப்பாக ஆண்டவர்கள் ' அதிகமான்கள்.' அவர்களுக்குக் கொல்லிமலையும் சேர்ந்தது.

காவிரிப்பூம்பட்டினம் சோழநாடு தொடங்கி, பாண்டிநாடு, சேரநாடு, கங்க நாடு, அதினும் தகடை நாடு தென்கிழக்கு வரை வலமாக ஒரு வட்டம் பார்த்தாயின. இனி இவ்வட்டத்தின் இடையே உள்ள பாகத்தைத்தான் விசாரிக்க வேண்டும்.

### இரண்டாவது

# அரசு இயல்,

# கொங்கு நாடு

' வடக்குப் பெரும்பாலை வைகாவூர் தெற்குக்
குடக்குப் பொருப்பு வெள்ளிக் குன்றம் - கிடக்கும்
களித்தண்டலை மேவு காவிரிசூழ் நாட்டுக்
குளிர்த்தண் டலையளவு கொங்கு'

வடக்குத்தலைமலையாம் - என்று பாடபேதம் மேல்கொங்கினர் கொள்வது. வட கொங்கினர் பெரும்பாலை என்பர்.

என்றிருப்பதால் இது கொங்கு நாடு, கொங்கு மண்டலம் ஆகும். கங்க ராஜ்ஜியத்தின் தென்கோடி பெரும்பாலை நாடு என்றால், கொங்கு நாட்டின் வடகடை நாடு வெள்ளாறு நாடு ஆகும். அது மல்லிகார்ஜுன சுவாமி இருக்கும் குன்று அல்லது மல்லிகார்ஜுன சுவாமி ஆலயத் திருமதிலைத் தொட்டுக் கொண்டு தொப்பையாறு இருக்கிறது. இந்த ஆறு சோழ பாண்டி என்னும் இடத்தில் காவிரியில் சங்கமமாகிறது. இந்த இடம் இப்பொழுது மேட்டூர் அணைக்கட்டு நீர்த்தேக்கத்துக்குள்ளாயிற்று. அங்குதான் கங்கநாடும் கொங்கு நாடும்

சந்திப்பு. இது போலவே குளிர்த்தலை மதிற்கரைதான் சோழக் கோனாடு கொங்கு நாட்டைத் தட்டைய நாடும் சந்திப்பு. தெற்கே வையாபுரி (பழனி) மலையும், பாண்டி நாடும் சந்திப்பு. மேற்கே பாலக்காடு வாளையாறும், மதுக்கரையும் சந்திப்பு. இதன் இடைப் பட்டது கொங்கு நாடு என்று வழக்கத்திலும் இருக்கிறது. இது கொங்கு நாடு கொங்கு மண்டலமாகும். இதற்கு எவ்விதமான ஆட்சேபமும் இல்லை.

கொங்கு என்பது மூவேந்தருள்ளே யாருக்கேனும் அடங்கித் திறை செலுத்தும் ஐக்கிய நாடா? அல்லது மற்ற மண்டலங்களைப் போல ஆளும் முறையுள்ளதா? என்பது கவனிக்க வேண்டும். சோழ மண்டலம் என்பதை ஒரு காலத்தில் ஒரு சோழ வேந்தன் தன் மக்களுள்ளே பிரித்து அரசுரிமை கொடுக்க வேண்டும் என்ற கருத்தால் மூத்தவனுக்குத் தென் சோழத்தையும், இளையவனுக்கு மற்றொரு பிரிவான வட சோழத்தையும் கொடுத்தான். இளையவன் தன் பெயரான தொண்டைமான் என்ற பெயரால் தொண்டைமண்டலம் என்று ஆண்டு வந்தனன். அதுபோலச் சேரவேந்தன் தன் மக்களிருவருக்கும் பிரித்து அரசுரிமை கொடுக்க வேண்டுமென்ற கருத்தால் மூத்தவனுக்குக் கேரளத்தையும், இளையவனான கொங்கன் என்பவனுக்குக் கொங்கு நாட்டையுங் கொடுத்தான். இதனால் இளையவன் தன் பெயரால் கொங்கு நாடு என்று நாடு ஆட்சி செய்தனன் என ஒரு சாரார் கூறுகிறார்கள்.

கொங்கு நாடும் கேரள நாடும் ஒன்று என்று எக்காலத்தும் எண்ணுதற்கில்லை. இவ்விரண்டும் ஒவ்வொரு வகையினும் வேறு வேறு திறப்பட்டது ஆகும். கேரளத்தில் வருஷம் 8 மாதம் மழை. மக்கள் 4 முழத்துண்டு (முண்டு) பெண் பாலாரும் அணிவர். வெள்ளை முண்டே உடுப்பர். கொங்குவில் பெண்கள் கறுப்பு சிவப்பு ஆடை 18 முழத்தில் உடுப்பர். ஆண்மக்களுக்கு தகப்பன் பொருள் உரிமை, கேரளத்தில் மாமத்தாயம், மருமக்கள் தாயமாகும். ஒரு குடும்பத்தின் மூத்தோனே விவாகம் செய்து கொள்ள உரிமையுள்ளவன். மலையாள பாஷை பேசப்படுவதும் இன்னும் பலவற்றால் கேரளமும், கொங்குவும் ஒரு காலத்தினும் ஒன்றாக இருந்திராது. எப்பொழுது நாடு என்றும், ஜாதி என்றும் ஏற்பட்டதோ அந்நாளிலிருந்து இந்நாட்டிலேயே இருக்கின்றவர்கள் தான் கொங்கர்கள். குடியேறிகளைக் கொங்கர் என்று சொல்லுதற்கில்லை. குலங்களின் பெயர்களும், ஜாதி சமய ஆசாரங்களும், மற்றோரிடத்து வழங்கி வரப் பெறாதனவான ஆந்தை, பூந்தை, சாத்தந்தை, கண்ணந்தை, பொருளந்தை, அந்துவன் முதலியன. இக்குலங்களின் பெயர் காண பதம்பிரிக்கப் பழங்காலத் தமிழான தொல்காப்பிய இலக்கணம் வேண்டும். சேர சோழ, பாண்டிய தொண்டை மண்டல நாடுகளில் இல்லை. நன்மை, தீமைக் காலங்களில் நடத்தும் சடங்கும், பெயரும் கொங்கு நாட்டுக்கே உரியன. (இதன் விளக்கம்- இதில் 4-வது ஒழுகு இயலில் வரும்).



'பாலக்காட்டுக்கு அடுத்த நல்லியப்பள்ளி சுவாமிக்கு நடத்தும் விழாவில், சித்தூரில் கொங்கன் படை என ஒரு விழா நடக்கிறது. வெகு அழகானது. அதில் கொங்கு அரசன் சேனை அங்கு செல்லுவது, சேரன் படை வந்து தடுப்பது, மற்போர், ஆயுதப்போர் நடந்து விழுந்து மாளுவதும், பின்பு கொங்கன் படையைச் சேரன்படை துரத்தி ஓட்டுவதும் நடக்கிறதைக் காணலாம். சேரமும் கொங்கும் ஒன்றாக இருந்தால் இவ்விழா எதுக்கு நடக்கும்? ஆனால் கொங்கு நாட்டையும் கேரள நாட்டையும் ஒரு அரசன் ஒரு காலத்து ஆண்டிருக்கலாம். இவை போன்று எத்தனையோ தேசத்தையும் ஆளலாம். இப்பொழுது நமது பிரிட்டிஷ் ராஜாங்கத்தார் ஒரு காலத்தில் எத்தனையோ தேசங்களை, கடல்களைத் தாண்டியும் ஆளுகிறார்களன்றோ? கொங்கு நாட்டையும், கேரளத்தையும் கொண்டுள்ள ஓர் வேந்தன் கேரளம் ஒருவனுக்கும் கொங்கு ஒருவனுக்குமாகக் கொடுத்திருப்பினும் இருக்கலாம். இதனால் கொங்குவும், சேரமும் ஒன்றாக மாட்டாது. இதைப்பற்றி,

மலையாளத்தில் எழுதப்பட்ட சரித்திரமாகிய கேரளோற்பத்தி என்ற நூலில், கொங்கு நாட்டை சேர நாட்டிற்குப் புறம்பாகக் கூறப்பட்டிருக்கிறது. சேரநாட்டோடு சேர்ந்ததாகக் கூறப்படவில்லை. தனி அரசாட்சி உடையதாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

Wilks Mysore என்ற புத்தகத்திலும் கொங்கு சேர நாட்டோடு சேராத தனியரசு கொண்ட நாடு என்று எழுதப்பட்டிருக்கிறது.

திருவாங்கூர் சரித்திரம் எழுதிய மிஸ்டர் சங்குண்ணி மேனன் அவர்களும் மேற்கண்ட அபிப்பிராயத்தை ஒட்டி எழுதியுள்ளார்.

மற்ற மண்டலங்களைப் போல கொங்கும் தனிநாடா? என்பதைப் பார்க்கலாம். ஆயை, உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடியது புறநானூறு 330

'அண்ணல் யானை எண்ணிற் கொங்கர் குடகட
லோட்டிய ஞான்றை'

சோழன் குராபயள்ளி துஞ்சிய கிள்ளி வளவன் கருவூரெறிந்தானைக் கோவூர் கிழார் பாடியது புறம் 373,

மைந்த நாடிய மயங்கு பெருந்தானைக்
கொங்குபுறம்பெற்ற கொற்ற வேந்தே

பல்யானைச் செல்கெழு குட்டுவனை பாலைக் கௌதமனார் பாடியது, பதிற்றுப்பத்து 22

'மாகெழு கொங்கர் நாடகப்படுத்த
வெல்கெழுதானை வெருவரு தோன்ற.....குட்டுவ'

பெருஞ்சேரலிரும் பொறையை மருவில்வாய் மொழி அரிசில் கிழார் பாடினார். பதிற்றுப் பத்து 77.

' சேன் பாண்முரம்பினீர்ம்படைக் கொங்கர்
ஆபரந்தன்ன செலவில்
சுந்தரமூர்த்தி சுவாமிகள்
' கொங்கிற் குறும்பிற் குரக்குத் தளியாய்
வைஷ்ணவ சமயப் பெரியார்களில்'
74, சிம்மாசனாதிபதிகளில் - கொங்கில் அண்ணன்
கொங்கில் ஆச்சான்,
கொங்குப் பிராட்டியார்,
என்னும் திருநாமங்களையும் உற்று நோக்குக.

கருவூர்த் துஞ்சிய புகழ்ச் சோழர் உறையூரிலிருந்து அரசு செலுத்தினர்.

' அங்கணினி துறையுநா ளரசிறைஞ்ச வீற்றிருந்து
கொங்கரொடுகுடபுலத்துக் கோமன்னர்திறை கொணரத்
தங்கள் குலமரபின் முதற்றனி நகராங் கருவூரின்
மங்கல நாளரசுரிமைச் சுற்றமுடன் வந்தணைந்தார்'

விக்கிரம சோழன் மெய் கீர்த்தி:-

' கங்கர் திறையிடக் கன்னடர் வெண்ணிடக்
கொங்க ரொதுங்க.'

முதல் ராஜராஜன் சாசனம்.

கோவல் வீரட்டானே சுரர்கோவில் கர்ப்பக்கிரக குமுதப்படையிலுள்ளது.

' கங்கபாடி கவ்விக் கொங்கம் வெளிப்படுத்தருளிய சாரல் மலை
வடிக்கு வட்டின் யிட்டுஞ் - சேரன்மலை நாட்டு'

முதலாவது மாறஞ்சடையன் என்னும் நெடுஞ்சடையன் பாண்டியன் சாசனம்.

' குடக்கொங்கத் தடன் மன்னனைக் கொல்களிற்றொடுங் கொண்டு போந்து, கொடியணிநெடுமாடக்கூடன் மணியாகத்துவைத்துக், கங்க பூமியதனளவும் கடிமுரசு தம்பியரசாயக் கொங்க பூமியடிப்படுத்து' என்பதன்றி

சிதம்பரம் கீழ் கோபுரத்துள்ள பாண்டிய சாசனம்.

' கொங்கருடல் கிழியக் குத்தியிரு கோட்டெடுத்து
வெங்கணழலில் வெதுப்புமே - மங்கையர் கண்
சூழுத்தாமம் புனையுஞ் சுந்தரத் தோண் மீனவனுக்
கீழுத்தா னிட்ட இறை'



எ.ர்பன முதலியவற்றைக் கூர்ந்து நோக்கும்பொழுது இந்நாடு சேர நாட்டிலிருந்தேனும், வேறு நாட்டிலிருந்தேனும் பிளவுற்று வந்தது அன்று. மற்றைய நாடுகளைப் போலவே தனியாகத் தோன்றி வேற்று நாட்டுடன் கலவாது தனிநாடாகவே இருக்கிறது என்று எண்ணவும், சொல்லவும், கூறுதலமையும். இது எப்படியிருக்கினும், கைத் தொழில், விளைபொருள் முதலியவற்றால் பிறநாட்டுக்கு ஒப்பாக இந்நாடு விளைபொருளைப் பிறநாட்டார் விரும்பிக் கொள்ள, இந்நாட்டை விரும்பி வந்திருக்கிறொர்களா ? என்பதைப் பார்க்கலாம்.

இரும்பிலிருந்து (உருக்கு) எஃகு செய்வதற்குத் தமிழ் நாட்டாரைத் தவிர அக்காலத்தில் வேறு யாருக்கும் தெரியாதென்று கிரீக்ஸ், ரோம் புலவர்கள் எழுதியுள்ளார்கள். எகிப்து தேசத்திற் கண்டுபிடிக்கப்படும் (Pyramids) கல்லறைகளிலிருந்து சேலம் எஃகுவினால் செய்யப் பட்ட ஆயுதங்கள் கண்டெடுக்கப்படுகின்றன. எஃகு வியாபாரமானது எகிப்து நாட்டில் பிரமிடுகள் கட்டப்படுவதற்கு முன்னரேயே நடந்து வந்ததாகத் தெரிகிறது. அது சுமார் 10,000 ஆண்டுகள் ஆகின்றன. கி.மு. 4-ம் நூற்றாண்டுக்கு முன்னரே சேலம் எஃகு கிரீஃச், உரோம், எகிப்து முதலிய தேயங்களுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு வந்தது என்பது, (Sir J.G.Wil-Kinson) அவர்களும், இரும்பு, எஃகு இவைகளில் தேர்ச்சி பெற்ற (J.M.Heath) என்பவரும், சேலம் எஃகுவினால் செய்த ஆயுதங்களை எகிப்து தேயத்துச் சிற்பிகள் உபயோகப்படுத்தி வந்தார்கள் என்று கூறுகிறார்கள். கி.மு.326-ல் அலெக்சாந்தர் இந்தியாவின் மீது படை எடுத்து வந்தபொழுது புருஷோத்தமன் (Porus) என்னும் சக்கரவர்த்தி 38 பவுண்டு எடையுள்ள (Salem Steel) உருக்கை அலெக்சாந்தருக்கு வெகுமதியாக அளித்தான் என்று சரித்திரம் கூறுகிறது. கி.மு. முதல் நூற்றாண்டிலேயும் அதற்கு முந்தியும் கொங்கு ஒரு தனிப்பட்ட மண்டலமாகவும், சுய ஆட்சி உடையதாகவும், எஃகு, இரத்தினக் கற்கள், தங்கம் முதலிய வியாபாரங்களையுடையதாகவும், அன்னிய நாட்டாராகிய கிரேக்கர், உரோமர், எகிப்தியர், இவர்கள் நாடிவரக்கூடிய நாடாகவும் இருந்தது. பல்லவர்களுக்கு கோதாவரி கொல்கொண்டா முதலிய இடங்களில் வயிரக் கனிகள் இருந்தது போல, கொங்கர்களுக்கு கடல்நிற இரத்தினக் கனிகள் படியூரில் இருந்தன என்று பிளினி கூறுகிறார். இவை முதலியவற்றாலும், பிறவற்றாலும், பிற நாட்டார் நன்கு மதிக்குமாறு நம்மவர்கள் நடந்து கொண்டிருக்கிறார்கள் என விளங்குகின்றன.

## அதிகமான் அஞ்சி

சேர, சோழ, பாண்டியர்களென்னும் தமிழ்நாட்டு மூவேந்தர்களும் விரும்பத்தக்க பெருமதிப்புற்ற சிற்றரசர்கள் அதிகமான்கள். அவர்கள் பலதலைமுறையாக இந்நாட்டிற் கொடையாலும், படையாலும், நடையாலும் ஒரு காலம் போலப் பலநாளும் சிறந்து விளங்கிய

வர்கள். சங்கப் புலவருள் ஔவையார், பரணர், அரசில் கிழார், பெருஞ் சித்திரனார், பொன்முடியார் முதலான புலவர்களால் பாடப் பெற்றவன் அதிகமான அஞ்சி என்பான், சேரமானுடைய உறவினன், பனைமாலையை உடையவன், வெட்சிப் பூவையும், வேங்கைப் பூவையுமணிவோன்; சேரன், சோழன், திதியன், எருமையூரன், இருங்கோ வேண்மான், பாண்டியன், பொருநன் அரசர் எழுவர்க்குரிய ஏழிலாஞ்சனையும் நாடும் அரசவுரிமையுமுள்ளோன். மேற்கூறிய வேந்தர் மூவரோடு பகைத்து மேற்சென்று அவரைப் போரில் வென்றோன். பரணர் புகழ்ந்து பாடும்படி திருக்கோவிலூரையும் வென்றோன். மிகுந்த வீரன். உண்டோர்க்கு நெடுங்காலம் ஜீவித்திருத் தலைச் செய்யும் கருநெல்லிப் பழத்தைப் பெற்று அதனை ஔவைக்குக் கொடுத்துப்புகழ் பெற்றவன். (இவன் போர்க்குச் சென்றிருக்கும்பொழுது தவமகன் பிறந்தானென்று அறிந்து, போர் முனையினின்று வந்து மகனைக் காண வேண்டஓ,ம் ஔவையார் எடுத்து வந்து காண்பித்தனர். அப்பொழுது,

"கையது வேலே காலன புனைகழல்
மெய்யதுவியரே மிடற்றது பசும்புண்
வட்கர்போகிய வளரிளம் போந்தை
உச்சிக்கொண்ட வூசி வெண்டோட்பொடு
வெட்சிமாமலர் வேங்கையொடு விசை
கரியிரும்பித்தை பொலியச் சூடி,

"கையின் கண்ணதுவேலே, காலின் கண் அணிந்த வீரக்கழல், உடம்பின் கண்ணது வேர்ப்பு, மிடற்றின் கண்ணது நரம்புலராத பசியபுண், பகைவர் தொலைதற்கு ஏதுவாகிய வளரும் இளைய பனையினது தோட்டையும் வெட்சியினது மலரையும், வேங்கைப்பூவுடனே சூடி"

இக்கோலத்தோடு வந்து பார்த்தனன்.

அவனது பெருந்தன்மையான இனிய குணம்.
ஒருநாட் செல்லல மிருநாட் செல்லலம்
பலநாள் பயின்று பலரொடு செல்லினும்
தலைநாட் போன்ற விருப்பினன், (109)

(ஒரு நாட் செல்லோம் இரண்டு நாட் செல்லோம் பல நாளும் பயின்று பலரோடு கூடச் செல்லினும் முதற் சென்ற நாள் போன்ற விருப்பத்தை உடையவன்.)

இவ்வுலகத்தில்லாத நெல்விதையை (பார்வதி தேவியார் இங்கு அருளியது போல) கரும்பு முளையை இவ்வுலகத்துக்குக் கொண்டு வந்து நட்ட பழமையானவர்களே. இவர் விவசாயத்தைப் பெருக்கு கின்றவர். அதியமான், அதிகமான், அதிகைமான், அதிகன், அதியன்



இவ்வைந்தும் ஓர் அரசரைக் குறிக்கும் ஒரு பொருட் பல பெயர் என்று தோன்றுகின்றது. சித்தூரைச் சார்ந்த போளூர்க்கடுத்த திருமலை என்ற சமணக் கிராமத்திலுள்ள ஓர் கல்வெட்டால் அதிகைமான், அதிகன் அல்லது வடமொழியில் அதிக என்று கூறப்பட்டுள்ள ஒருவன் இருந்தான் என்பதும், அவனுக்கு ராஜராஜன் என்று மற்றொரு பெயர் உண்டென்பதும், இவன் வமிசத்தில் எழினி அல்லது வடமொழியில் யவனிக என்று ஓர் அரசன் இருந்தான் என்பதும், ராஜராஜனுடைய குமாரனான விடுகாதழகிய பெருமாள் தகட என்று சொல்லப்பட்ட ஊரை ஆண்டான் என்பதும் தெரிகின்றது. வடமொழியில் தகடா என்று சொல்லப்பட்ட இந்த ஊர் தமிழில் தகடூர் என்று வழங்கி வந்ததாகத் தோன்றுகின்றது. இந்தத் தகடூரை அடக்கிக் கொண்டு உள்ளது தகடூர் நாடு என்றும் வழங்குகிறது.

பெருஞ்சோற்று இரும்பொறை என்னும் சேர ராஜன் நெடுமானஞ்சியின் தகடூர்க் கோட்டையை முற்றுகைபோட்டுக் கொள்ளையடித்து அவனை முறியடித்தான். சேர சேனை சமீபித்த பொழுது நெடுமானஞ்சியின் மகன் எழுனி தன் சேனையை நடத்தி யுத்தந் தொடுத்தான். முதல் நாள் யுத்தத்தில் எழுனி யின் சேனைகள் கோட்டைக்குள் துரத்தப்பட்டன. மறுநாள் கோட்டையைச் சுற்றியிருந்த முட்காடு சுத்தி செய்யப்பட்டது. காலக்கிரமத்தில் அகழி.ாய மூடி யானைகளைக் கொண்டு கோட்டை வாயில் கதவு உடைத்துத் திறந்தனர். அவ்விடத்தில் நடந்த போரில் எழினியும் அவனது படைவீரர்களும் வியக்கத்தக்க சாமர்த்தியத்துடன் போர் செய்தும், அதிக கூட்டத்தால் வெல்லப்பட்டு கடைசியில் சண்டையிட்டுக் கொண்டே உயிர் துறந்தனர். இதைப் பற்றி ஔவையார் புற.235 சிறிய கட்பெறினே என்னும் பாட்டு முதலியன சொல்லிப் புலம்பினர். பின்பு,

*1)* மகேந்திரன், *2)* அவன் மகன் அப்பய தேவன். *3)*அவன் மகன் அன்னிகன், *4)* அவன் மகன் இருளன் ஆக நான்கு தலைமுறையாக நொளம்பர்கள் தகடூரை ஆட்சி செய்து வந்திருக்கிறார்கள்.

சோழர்கள் ஆதிக்கத்தில் தகடூர் நாடு கங்க நாட்டுக்குச் சேர்ந்ததை சாசனங்கள் நிருபிக்கின்றன. இவை நிகரிலி சோழ மண்டலத்தில் ஐக்கியப்பட்டிருந்தன. புறமலை நாடு தகடூர் நாட்டுக்குச் சேர்ந் திருந்தது. இக்காலத்தில் அதிகமான் என்னும் பட்டத்தை மறுபடியும் கொடுத்தார்கள். பாராமஹாலிலிருந்து மைசூர் வரையிலுள்ள மாகாணங்களின் அதிபதி விஷ்ஸவர்த்தனனின் சேனாதிபதியால் தலைக்காட்டினின்று சோழர்கள் துரத்தப்பட்ட காலத்திலும் ஒரு அதிகமான் சோழ சேனாதிபதியாயிருந்தான். (மூன்றாவது) குலோத்துங்க சோழனின் (கி.11 88) 10.12- வது ஆண்டுகளின் சாசனங்கள் காமாட்சியம்மன் கோயிலின் வட சுவரிலும் அதிகமானின் பாரக்கிரமத்தை ருசிப்பிக்கிறது. இங்கே குறிக்கப்பட்டவன் வாசன்

என்கிற ராஜராஜன் அல்லது தான் சேர வம்சத்தில் உதித்ததாகச் சொல்லிக் கொண்ட' விடுகாதழகிய பெருமாள் என்பவனாக இருக்க வேண்டும். எழினியின் கர்ண பரம்பரைக் கதைகளை மறுபடியும் பரப்புதற்கு முயற்சி செய்தான்.

தர்மபுரியை ராஜதானிப் பட்டணமாகக்கொண்டு சித்தூர் ஜில்லாவிலுள்ள திருமலை முதல், வட ஆர்காட்டிலுள்ள சங்கம் வரையில் சுய ஆதிக்கமாக ஆண்டு வந்தான். பின்னர் ஒய்சாலர்கள் அங்கு சமாதானத்துக்கு வந்தனர் என்பது அதமன் கோட்டை சாசனம் நன்கு விளக்குகின்றது. கி.பி.1199-1200 வருஷத்திய கம்மய நல்லூரிலிருக்கும் சாசனத்தில் இவன் (பாலி, பெண்ணை, பொன்னி) பாலாறு, பெண்ணையாறு, காவேரியாறு என்ற மூன்று நதிகளையும் ஆண்டு வந்தானென்று சொல்லி இருக்கிறது. செங்கம் என்னும் இடத்தில் கண்டு பிடிக்கப்பட்ட இரண்டு ராஜீய உடன்படிக்கைகள் முக்கியமும் குறிப்பிடத்தக்கவையுமாம். மூன்றாவது குலோத்துங்கனது 20-வது வயதில் எழுதப்பட்ட இரண்டு அதிபதிகள் இரண்டு அதிபதிகளுக்குள் நடந்த உடன்படிக்கையில் சாம்பராயனென்பவன் 1. மற்றொரு கட்சியினரும் ஜீவித்திருக்கிற வரையில் அவர்கள் தங்களுக்குள் உண்மையுள்ளவர்களாக இருக்க வேண்டும் என்றும் ராஜராஜ அதிகன் மகன் பிறந்த பெருமாளுடன் உடன் படிக்கை அல்லது சண்டையிட வேண்டுமானாலும் மற்றொரு கட்சியாரின் சம்மதம் பெற வேண்டும் என்றும், சம்பராயன் விரோதிகளுடன் சேருவதில்லை மற்ற கட்சிக்கு விரோதமாக எதிலும் சம்பந்தப் படுவதில்லை என்றும் ஒத்துக் கொள்ளுகிறான். தகடூர் அதிபதிகள் பேருக்கு குலோத்துங்கனுக்குத் தாழ்ந்தவனாக இருந்தாலும் தகடூர் அரசன், அதிகமான சுய ஆட்சி உடையவனென்று இவைகளில் நன்கு விளங்குகிறது. அதிகமான்களுடைய சரித்திரம் பல இருக்கின்றன. புகழ்ச்சோழ நாயனார், தேர்மாறன், செடுஞ்சடையன் முதலியவர்களுடன் போர் செய்திருக்கிறார்கள் அங்கங்கே வரும்.

கொங்கு மண்டலத்தை யார் யார் ஆண்டார்கள் என்பது தெரிய வேண்டுவது நலம். எத்தனையோ வேந்தர்கள், குறுநில மன்னர்கள், வேளிர்கள் மிகுதிறமையோடு ஆண்டிருக்கிறார்கள். அதைப்பற்றி எழுதி வைத்த சாசனங்கள் கிடைப்பதில்லை. வாரக்க நாட்டில் [illegible] என்னும் ஊர், இப்பொழுது இருக்கிறது. அது முன் பெரிய நகரமாக இருந்திருக்கலாம் என எண்ணுதற்கு இடிந்த வீடுகள் முதலியன தெரிகிறது. ஆலயங்களும் இருக்கிறது. அந்நகரில் குறுநில அரசர் மரபில் கூற்றுவ நாயனார் தோற்றினர். விற்போர், வாட்போர், மற்போர்களில் தேர்ந்து தன் கீழ் உள்ளவர்களை நன்கு காத்தார். சிவபக்தி அடியார் பக்தி மேலிட்டு வளர்ந்தார். சிவ கிருபையால் தமிழ்நாடு அன்றிப் பிற நாடுகளையும் வென்றார். சதுரங்க சேனைகளும் அமையப்பெற்றார். ஆனால் மகுடாபிஷேகம் பெறாமலிருப்பது ஒரு குறையென்று கொண்டு, தில்லை வாழந்தணர்களை வேண்டினார். சோழ வேந்தர் மரபினருக்கன்றி முடி தரியோம் என்றனர்.



இதனால் சதுரங்க சேனையோடும் தேச ஆட்சி செய்த செய்தி பெரிய புராணத்து நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. ஆதலின் இதுபோல இன்னும் எத்தனை பேர்கள் ஆண்டிருந்தார்களோ தெரியவில்லை. ஆயினும் சேரன் செங்குட்டுவன் காலத்திலிருந்து சற்று விவரங்கள் கிடைக்கின்றன. அது முதல் கிடைத்தவற்றைக் கொண்டு இப்பொழுது சரித்திரம் எழுத ஆரம்பித்துள்ளேன்.

சேரலாதன் மகன் செங்குட்டுவன், கி.பி.145-ல் இமயம் சென்று கல் எடுத்து வந்து கற்புத் தெய்வமாகிய கண்ணகி உருவம் சமைத்துத் திருவிழா நடத்தினான். அது கண்ட சோழர்களும் பாண்டியன் ஈழத்தரசன் கயவாகு முதலிய மன்னர்களும் நடத்தினார்கள். அக்காலத்து இக்கொங்கு நாட்டை ஆண்டிருந்த கோசரும் விழாவொடு சாந்தி செய்தான் என சிலப்பதிகாரம் மங்கல வாழ்த்துக் காதை கூறுகிறது.

## கோசர்

கொங்குநாட்டில் கோசர் என்னும் ஒரு வீர மரபினர் இருந்தனர் என நன்கு தெரிகிறதல்லவா? அவர்களைப் பற்றி விசாரிக்கலாம்.

வெல்கொடித்துனைகா லன்ன புனைதேர்க் கோசர்,
தொன் மூதாலத்தரும்பனைப் பொதியி,
வின்னிசை முரசங்கடிப் பிகுத்திரங்கத்,
தென்முனை சிதைத்த ஞான்றை மோகூர்,
பணியாமையிற் பகைதலை வந்த,
மாபெருதானை வம்பமோரியர்,
புனைதேர் நேமியுருளிய குறைத்த,
விலங்கு வெள்ளருவிய வறைவாய்.

*151.6.14.அக.*

நறுமா கொன்று நாட்டிற் போக்கிய
வொன்றுமொழிக் கோசர் போல
வன்கட் சூழ்ச்சியும் வேண்டும்.

குறுந்தொகை *73 11.2.5*

பறைபடப் பணில மார்ப்ப விறை கொளப
தொன்மூ தாலத்துப் பொதியிற் றோன்றிய
நல்லூர்க் கோசர் நன்மொழிபோல.

குறுந்தொகை *15-11*

மழையொழுக் கறா அப் பிழையா விளையட்பா
பழையன் மோகூரவையகம் விளங்க
நான்மொழிக் கோசர் தோற்றி யன்ன.

மதுரைக் காஞ்சி 11. 507-589

கோசர்கள் மோகூரின்மீது படை எடுத்தார்கள். மோகூர் பணியாமையால், கோசர்களின் நண்பர்களான மோரியர்கள் படை எடுத்தார்கள். (அகம்) 15-11.7.5. துளு நாடு கொண்கானம் எனும் பெயரோடு இப்பொழுதும் வழங்கி வருகிறது. இது நன்னன் எனும் அரசன் ஆண்டது எனத் தெரிகிறது. கோசர்கள் துளு நாட்டை ஆண்டிருப்பதுமன்றிக் கொங்கு நாட்டினும் இருந்தார்கள் என்பதற்குச் சிலப்பதிகாரத்தில் கொங்கு மண்டலத்துக் கொங்கினங் கோசரும் விழவொடு சாந்தி செய்தான் என்றிருப்பதால் செங்குட்டுவர் காலத்தில் 2000 வருஷத்திய போது கொங்கு நாட்டினைக் கோசர்கள் ஆண்டிருந்தார்கள் என நன்கு விளங்குகிறது.

தவிர, மோகூர்த் தலைவர் மீது சேரர் செங்குட்டுவர் படையெடுத்து ஜயித்ததாகப் பதிற்றுப் பத்தில் கண்டிருக்கிறது. மோகூர் எனப் பெயருடைய ஊர் மைசூர் பிராந்தியத்தில் தென் பாகத்தில் ஒரு ஊர் இருக்கிறது. பாண்டி நாட்டில் நம்மாழ்வார், திருமங்கையாழ்வார்களால் மங்களா சாசனம் பெற்று உள்ள மோகூர் வல்லி நாச்சியார் மேகவல்லி நாச்சியார் சமேதராக விளங்கும் காளமேகப் பெருமாள் எழுந்தருளியுள்ள மோகூர் மற்றொன்று. இவற்றுள் எந்த மோகூர் என விளங்கவில்லை. எவ்வாறாயினும் கோசர்கள் துளு நாட்டையும் ஆண்டிருக்கிறார்கள் என்பது நன்கு தெரிகிறது.

## கொங்குதேச அரசர்கள்

கொங்கு தேச ராஜாக்கள் எனச் சென்னை ராஜாங்கத்துக் கையெழுத்துப் பிரதியில் கொங்கு நாட்டில் கங்க வம்சத்தார் அரசாண்டதற்கு முதல் இரட்ட குலத்திற்றோன்றிய ஏழு அரசர்கள் இந்நாட்டை ஆண்டதாகக் கூறப்பட்டுள்ளது. அவர்கள் பெயர்கள் அடியிற்கண்டபடி குறிக்கப்பட்டிருக்கிறது. அவர்கள் ஜைன மதத்தார்கள்.

1] **ஸ்ரீவீரராஜ சக்கிரவர்த்தி:** இவர் கலியுகத்தில் ஸ்காந்தபுரத்தில் தோன்றி, அரசனாகிக் கிரீடம் தரித்து நல்ல ஞானமுடையவனாகக் கொங்கு நாட்டை அரசாண்டார். கி.மு. முதல் நூற்றாண்டில் கொங்கு நாட்டை அரசு புரிந்த இவ்வீரராஜ சக்கிரவர்த்தி கீர்த்தி வாய்ந்தவர். பலமண்டலங்களையும், கடலைத் தாண்டி ஐரோப்பா, ஆப்பிரிக்காவில் சில பாகங்களையும் வென்று வர்த்தகத்தை விருத்தி செய்து சக்கிரவர்த்தி என்னும் பட்டமும் பெற்றுத் தன் பெயரால் பொன் நாணயங்களும் அடித்தார். **வீரராயன் பணம்** என்று பல இடங்களில் புதையலிலகப்படுவதன்றிப், பல வீடுகளில் நகைகளில்



சேர்த்தணிந்திருக்கிறதைக் காணலாம். அவன் காலத்தில் ரோமபுரியிலிருந்து பலர் வந்து போயிருக்கிறார்கள். அப்பொழுது கொங்கு உன்னத நிலையிலிருந்தது.

2] **கோவிந்தராயன் :** இவர் வீரராஜ சக்கிரவர்த்தியின் மகன்:- இவர் சூரிய குலத்தான் என்கிறார். கொங்கு தேசத்தில் பட்டம் கட்டிக் கொண்டு புகழோடு உலகில் அரசாண்டார் எனச் சொல்லப்படுகிறது.

3] **கிருஷ்ணராயன் :** கோவிந்தராயன் மகன். சாஸ்திரம் தெரிந்தவன். தருமமாக நீதி செலுத்தினான்.

4] **கலாவல்லவராயன் :** இவர் கிருஷ்ணராயனுடைய மகன். இவனும் ஸ்கந்தபுரத்தில் பட்டங்கட்டிக் கொண்டு, நன்றாக ஆட்சி புரிந்தான்.

5] **கோவிந்தராயன் :** கலாவல்லவராயனின் புத்திரர். இவரும் ஸ்கந்தபுரத்தில் பட்டங்கட்டிக் கொண்டு கீர்த்தியடைந்து பகை அரசர்களை ஜெயித்து கப்பம் வாங்கி தரும தானங்களைச் செய்து கீர்த்தி பெற்று அரசு புரிந்தார். மேலும் இவர் சாலிசக வருஷம் 4.சுபானு வைகாசி சுத்த புன்ன மையில் அரிஷ்ணன் என்னும் ஜைனனுக்கு பூமி சாசனம் செய்து கொடுத்தார். இப்பூமி குலசத கிராமத்தில் சேர்ந்திருக்கிற பொம்ம கொம்ம என்கிற கிராமத்திலே ஏழு கண்டகம் மெடஸ்தி. ஜைன தேவர் அர்ச்சனை நிமித்தம் கொடுத்த தருமமாகும். இக்கோவில் பூஜை செய்கிற அரிஷ்டனுடைய குரு பிரஞாபனாசாரி. அவர் ஸ்ரீ காரோக விருட்ச மூலத்திலே வாசம் செய்கிறவர். அக்காலத்திலிருந்தே ஜைனர்களுடைய பெயர் பஞ்சநந்தி சொக்கப்பன்னன் ஜயதேவன்.

6] **சதுர்ப்புயகன்னதேவ சக்கிரவர்த்தி:-** கொங்க தேசத்திலே பட்டங்கட்டிக் கொண்டு அரசாண்டார். இவர் சூரிய வம்சத்திலே இரட்ட குலத்திலே தோன்றியவராகச் சொல்லப்படுகிறது. இவர் போர்க்குரிய வாத்திய முழக்கங்களுடனே சென்று பகைவரை வென்று திரும்புவார். வீணை, பரதம் முதலிய சாஸ்திரங்களில் திறவான். கோதண்டம், நாகமந்தரங்களிற் தேர்ந்தோர். அக்காலத்தில் குருநாத நந்தியென்பவர் அவர்களுடைய சாஸ்திரத்தில் வல்லவர். இன்னும் இருபெரும் பண்டிதர்களுமுண்டு. ஜைன அரசர்களுக்கு சாஸ்திரம் கற்பிப்பவர் கிழவன்.

7] **திருவிக்கிரமதேவ சக்கிரவர்த்தி :-** ஸ்கந்தபுரத்திலே பட்டாபிஷேகம் செய்துகொண்டு ஆட்சி புரிந்தார். அக்காலத்துச் சங்கரதேவர் தோன்றி அனுக்கிரகித்தார். ஜைனத்தை விட்டு சிவபிரானைத் தொழுதார். சிவஞானம் அடைந்தார். தென்தேசத்திற்குப் படை எடுத்துப் போகும்பொழுது பூதானம் முதலியன செய்து சென்று சேர சோழ பாண்டிய மண்டலங்களை ஜெயித்து வந்தார். அவர் தானம் செய்த சாசனமானது சக வருஷம் 100. சித்தார்த்தி 53 வைகாசி மாதம் சுக்கில பட்சத்திலே திங்கட்கிழமைகளில் சந்திரகிரகணம் பாதி

பிடிக்கிற வேளையிலே திருவிக்கிரசக்கிரவர்த்தியானவர் பாரத்துவாஜ கோத்திரத்திலே தோன்றியவித்துத் தான் நரசிங்கப்பட்ட குருவுக்கு பஞ்சதச கோடி கிராமம் தருமாசனம், சிரத கிராமம் கொங்க தேசத்திலே அந்த சங்கரத் தேவர் கோவிலில் ஸ்கந்தபுரத்திலே இருக்கிறது. இவர் கன்னட தேசத்தையும் ஆண்டார். இவரோடு இவர் குலம் தீர்ந்தது.

## கங்கர்

கங்க் வம்சத்தில் முதல் அரசர், கொங்கண்வர்மன். இவர் கொங்கு தேசத்தில் பட்டாபிஷேகம் சக வருஷம் 101 பிரமோதூத வருஷம். காணவாயர் கோத்திரத்திலே, கங்கை குலத்திலே உண்டாயிருக்கிற ஸ்ரீமத் கொங்கணிவர்ம தர்மமகாதி ராயர். கொங்க தேசத்திலே விஜயஸ்கந்தபுரத்திலே இருந்து அரசாண்டனர். இவர் போருக்குச் செல்லும்போது தன்னுடைய சுத்தியினாலே ஒரு கல்லை வெட்டித் துண்டித்து விட்டு இக்கல் துண்டமானது போல பகை அரசர் உடலைத் துண்டம் செய்வேன் எனச் சபதம் செய்து அவ்வண்ணமே வெட்டி எறிந்தனர். பணிந்து வணங்கிய அரசர்களிடத்திலே கப்பம் வாங்கித் திரும்புவர்.

## மாதவமாகாதி ராயர்

தர்மகாதிராயர் மகினாகிய ஸ்ரீமத் மாதவமகாதிராயர். விஜய ஸ்கந்தபுரத்திலே பட்டாபிகேஷம் செய்து கொண்டனர். கல்வி கேள்விகளில் வல்லவர், யாசித்த பண்டிதர்களை தன் சபையில் வைத்துக் கொண்டு பாதுகாத்து வந்தார். குடிகளுக்கு அதிகமாக உதவி செய்து வந்தார். யார் ஏது கேட்கினும் இல்லையென்னாது கொடுத்துக் கீர்த்தி பெற்றவர்.

## அரிவர்ம மகாதிராயர்

கொங்க தேசத்திலே பட்டாபிகேஷம் செய்து கொண்டு கன்னட தேசத்திற்குத் தலைநகரமாகிய தளவனபுரத்திலே வீற்றிருந்து கொங்க தேசத்தையும், கன்னட தேசத்தையும் அரசாண்டு வந்தார். சமுத்திரத் திற்கு அப்பாலுள்ள தேசத்திலேயும் மகாசூரனென்று பெயர் பெற்ற வர். பெரும் செல்வம் பெற்றவர். அநேக ஜனங்களுக்கு பூதானம் செய்தார். சக வருஷம் 210 சௌமிய வருஷம் பங்குனி மாதம் சுக்கில பட்சமும் பௌர்ணமி பிரகஸ்பதி வாரத்திலே தகடூர் என்ற கிராமம் தலைகாட்டின் முன்னே இருக்கிற பேட்டையில் குடியிருக்கிற சிப்பாய்கள் சகலர்க்கும் மூன்று பங்கும், அந்தக் கிராமத்திலே இருக்கிற மூலஸ்தானேசுவர ஸ்வாமி கோயில் பூஜை செய்கிற பிராமணனுக்கு ஒரு பங்குமாக தானம் செய்தார்.

கன்னட தேசத்திற்குத் தலைநகரமாக இருந்த தளவனபுரம் என்னும் தலைக்காட்டைத் தனக்கு ராஜதானியாகக் கொண்டார். இது முதல் கங்க வம்சத்தாருக்குத் தலைக்காடு தலைநகராகி விட்டது.



## விஷ்ணுகோபமகாதிராயர்

இவர் தளவனபுரம் என்கிற தலைக்காட்டிலே பட்டாபிகேஷம் பண்ணிக் கொண்டு அரசாண்டார். ஜீவகாருண்யமுள்ளவராய் பிராமண போஜனம், குருபூஜை முதலியது செய்து பலவிடங்களில் விஷ்ணு கோவில்கள் கட்டி மிகு பக்தியாயிருந்தார். கொங்க தேசத்தை யும் கன்னட தேசத்தையும் ஆண்டு வந்தார். இவ்வரசருக்குப் பிள்ளை யில்லாமையால், தத்தெடுத்துக் கொண்டார். அத்தத்துப் புத்திரனை வளர்த்துக் கொண்டார். இம்மாதவ மகாதிராயன் இவர். சிறிது காலமே ஆண்டதினால் அவனைப் பற்றி விசேஷம் ஒன்றும் சொல்லப்படவே யில்லை. அம்மாதவராயனுடைய மகன் கிருஷ்ண வர்மன்.

மேற்கூறிய அரசர் தளவனபுரத்திலே பட்டாபிகேஷம் செய்து கொண்டு அரசாண்டனர். இவர் முதல் இருந்த மாதவமகாதி ராயனுக்கு கணவாய் மலை சமீபங்களிலுள்ள சில தேசங்களை விட்டு ஆண்டு வரும்படி சொன்னார். கிருஷ்ணவர்மமகாதிராயன் கொங்க கன்னட தேசங்களில் நீதியோடு அரசாட்சி செய்து வந்ததோடு சாமண புரத்திலே சில சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து அக்கோவில்களுக்கு நித்ய நைமித்யங்கள் குறைவின்றி நடந்து வரும்படி பூமிகளைத் தானம் செய்தார். இவ்வரசர் மிகுந்த சிவ பக்தர்.

இவ்வரசருக்கு புத்திரனில்லை. முன்னே சுவீகாரம் பெற்ற குலத்திலேயே பரிகுலாத்திராயன் மகன் டிண்டிகாராயன் ராஜ்ஜியத்தை அடைந்தார். ஆனால் மந்திரிகளும் சேனாதிபதிகளும் திருப்தி அடையாமல் கிருஷ்ண வர்மனுடைய தங்கை மகனான **கொங்கணி** என்பவனுக்குப் பட்டம் கொடுத்தார்கள். தளவன புரத்திலே பட்டாபிகேஷம் செய்து கொங்க தேசமும், கன்னட தேசமும் ஆண்டு வந்தார். இது சக வருஷம் 288 கி.பி. பிரபல வருஷம் நடந்தது. இவர் பல சாஸ்திரங்களையும் கற்ற பண்டிதர். பல அரசர் களையும் ஜெயித்துக் கப்பம் வாங்கித் தான தருமங்கள் செய்தார். அக் காலத்தில் இவன் வம்சத்திலுள்ள எரேசந்தர டிண்டிகராயன் ஆட்சி யிலே சில நாள்கள் இருந்தன. அவற்றுள் ஆலூர்க்கு சமீபத்திலுள்ள பரோள கோளூர் கிராமத்தை அவனும் சர்தார் பெண் ஜாதிக்கு தானம் செய்தார்.இப்போது இந்த ராஜ்ஜியத்தில் இரண்டு அரசர்கள்.

## துர்வினீதன்

கொங்கணிவர்மருக்குப் பிறகு துர்வினீத ராயன் பட்டதிறகு வந்தார். இவர் மந்திர சாஸ்திரங்களைக் கற்று அம்மந்திர பலத்தால் பகை அரசர்களை வென்று க்ஷேமமடைந்தார். இவரைப் பகை அரசர்கள் பிரளய காலத்துருத்தரனென்றெண்ணிப் பயப்படுத்து வார்கள். கிருதார்ச் னீயம் என்னும் நூலில் பதினைந்து சர்க்கங்களுக்கு டீகா செய்தார். சேர, சோழ, பாண்டிய, ஆந்தர, கலிங்க முதலாகிய தேசங்களை வென்று, கப்பம் வாங்கி வந்தார். இவர் பக்கத்தில்

வருவதற்குப் பகைவர்கள் நெருங்குவதற்குப் பயப்படுகிறபடியால் துர்விநீத ராயன் என்று பெயர் பெற்றனர். இவ்வரசர் தகப்பன் கொங்கணிவர்மனைப் பற்றிக் கூறுகையில் இந்நூலில் கண்டபடி அவர் சக வருஷம் 288-ல் இருந்ததாக எழுதப்பட்டது. ஆகவே துர்வனீதன் காலம் 488 ஆக எப்படி இருக்க முடியும்?

## புஷ்கர ராயன்

தளவனபுரத்திலே பட்டாபிஷேகம் செய்து கொண்டு தன் தகப்பன் துர்வனீதனைக் காட்டிலும் வில்வித்தை மந்திர சாஸ்திரம் முதலியவை களைக் கற்றறிந்தார். இவர் தன் தகப்பனார் பகையரசர்களிடத்தி லிருந்து கைக் கொள்ளப்பட்ட தேசங்களிலே கப்பம் வாங்கினதோடு எல்லா அரசர்களும் தன்னை வணங்கும்படி செய்து பிராமணர் முதலி யோர்களுக்கு தர்மம் கொடாதபடியினாலே உலகத்திலுள்ளவர்கள் இவரைப் பிரமத்திராயன் என அழைத்தார்கள்.

இவ்வரலாற்றினால் இவ்வரசர் பிராமணாளுக்கு விரோதியாக இருந்தாரென அறிகிறோம். இவர் புறச்சமய சார்பாக இருக்கலாம்.

## திருவிக்ரம ராயன்

இவர் புஷ்கரராயனுடைய மகன். இவர் தளவனபுரத்திலே பட்டாபிஷேகம் செய்து கொண்டு உலகத்திலுள்ள அறுபத்து நான்கு வித்தைகளில் பதினான்கு வித்தைகளைக் கற்றறிந்தார். சாம, பேத, தான, தண்டமாகிய சதுர்வித உபாயங்களினாலே அநேக தேசங்களை கைவசம் செய்து கப்பம் வாங்கி துஷ்டநிக்ரக சிஷ்ட பரிபாலனம் செய்து அரசாண்டார்.

## பூ விக்கரம ராயன்

மேற்கூறிய அரயன் மகன் தளவனபுரத்திலே பட்டமெய்தியது சாலிவாகன சக 461-வது சித்தார்த்தி வருஷமாம். இவர் பட்டம் எய்திய பின் கொங்க தேசத்தையும் கன்னட தேசத்தையும் ஆண்டு வந்தனர். இவர் தன் தகப்பனைக் காட்டிலும் தான தருமங்கள் செய்து அநேக தேசங்களையும் கைக்கொண்டு யானை கூட்டங்களைச் சேர்த்து வைத்து கஜபதி என்னும் பெயரையும் பெற்றனர். இவர் யானைக் கொம்புகளினாலே செய்யப்பட்ட ஆயுதங்களை வைத்திருந்தனர். வெற்றிச் சின்னங்களுடன் தம் முன்னோர்களால் ஜெயம் செய்யப் பெற்ற பல தேசங்களிற் சென்று கப்பம் வாங்கி வந்தனர். சில காலம் சென்ற பின்னர் அத்தேயத்தரசர்கள் கப்பம் கொடாமையால், நால்வகைச் சேனைகளுடன் சென்று போர் செய்து சோழ, பாண்டிய, ஆந்திர, கலிங்க, மராட (மகாராஷ்டிர) தேசங்களையெல்லாம் வென்று கப்பம் வாங்கி அரசாண்டனர். தளவனபுரத்திலேயுள்ள கோட்டையை நன்றாகக் கட்டினதோடு அநேக தர்மங்கள் செய்து வந்தனர்.



மேற்கூறிய வரலாற்றின்படி இவ்வரசர் பட்டதிற்கு வந்தது கி.பி.539-ஆகும். இவருக்கு கஜபதி என்றபட்டம் உண்டு. அப்பட்டம் பிற்காலத்தில் ஆந்திர தேசத்தில் விஜயநகர (வடசர்க்கார்) மன்னர்கள் கொண்டிருந்ததை நினைவூட்டும். இவர் தலைக்காட்டுக் கோட்டையை நன்றாகக் கட்டினது அவருடைய சிறந்த காரியங்களில் ஒன்றாகும்.

## கொங்கணிமகாதி ராயர்

முன்கூறிய அரசர் மகன் நவரத்ன கஜிதமாயிருக்கிற சிம்மா சனத்திலே மிக்க அலங்காரமாய் இருந்து கொண்டு தன் தமயனைச் சேனாபதியாக்கி மற்ற அரசர்களிடம் கப்பம் வாங்கிக் கொண்டு வந்தனர். அத்தேசத்தரசர்கள் இவனுக்குக் கப்பம் கொடுக்காதபடி யினாலே....... இருக்கிற சதுரங்க சேனைகளுடனே சென்று கலிங்க மராட முதலிய தேசங்களை வென்று கப்பம் வாங்கிப் பூவிக்கரம ராயனெனப் புகழ்மிக்க கீர்த்தியோடு தளவனபுரத்திலே சீர்கேடாக இருந்த கோட்டையைச் செப்பம் செய்து அநேக தர்மம் செய்து வந்தனர். சேனாபதியாகிய வல்லபாக்கி ராயன் கட்டளைப் படியே தேயங்களிளெல்லாம் சென்று கப்பம் வாங்கி வந்தனர். அநேக பகை அரசர்களை வென்று கொங்கு கன்னட தேசங்களை ஆண்டு வந்தனர். இவ்வரசனுடைய வரலாற்றினால் தமயன் இருக்க தம்பியும் பட்டத்திற்கு வரலாமென்று தெரிகிறது.

## பிரதிவி கொங்கணிமகாதி ராயன்

இவர் சிவகாம ராயனுடைய பேரன். அவர் மகனுக்கு மகன் பிரதிவி கொங்கணிமாகாதி ராயன். தளவனபுரத்திலே பட்டங்கட்டிக் கொண்டு தனக்குச் சேனாதிபதியாயிருக்கிற ஸ்ரீபுருஷராயரனை விஜய ஸ்கந்த புரத்திலே அவருக்குப் பன்னிரெண்டு கிராமங் கொடுத்து அவர் அதி லிருந்து கொண்டு சத்துரு ராஜாக்களுடனே யுத்தம் செய்து ஜெயித்து ராஜாவிற்குச் சந்தோஷம் செய்தபடியாலே அவருக்குச் சௌரிய பரண நரேந்திர சேனாதிபதி என்று பெயர் வைத்துப் பூமி கொடுத்த வயணம் சாலிவாகன சகை வருஷம் அஷ்டஷஷ்ட யோத்திர சதம் 968 பிரபவ வருஷம் சித்திரை மாதம் சுக்கில பட்சம் பஞ்சமியிலே அசுவனி நட்சத்திரத்திலே சோமவாரத்திலே ஸ்ரீபுருஷ ராய சேனாதிபதி விசயஸ் கந்தபுரத்திலே சேர்ந்த கணவாய் மேலேயிருக்கிற பன்னிரண்டு சோழ தேசமும் கிராமத்துடனே கூட விஜயஸ்கந்த புரமும் தர்மம் செய்து கொடுத்தார். அதற்கு சாட்சி தன் குலத்திலே பிறந்திருக்கிற மந்திரி இராஜகுமாரர்கள் தெய்வ சாட்சி. மல்லிகார்ச்சுன சுவாமி இஷ்டப்படி தர்மம் செய்து கொடுத்தார். அவர் மிகவும் அலங்காரத்துடனே இருக்கிறபடியினாலேயும், தினம் அவர் மனையிலே மங்களகரமா யிருக்கிறபடியினாலேயும் அவருக்கு சிவகாம ராஜனென்று பெயர் வந்தது. இவர் சந்தோஷமாக அரசாண்டனர்.

மேலே கூறிய வரலாற்றிலிருந்து சிவகாம ராயனுக்குப் பிறகு அவர் பேரன் பட்டத்திற்கு வந்தார் எனத் தெரிகிறது. இவர் தலைக் காட்டிலேயே பட்டங் கட்டிக் கொண்டு ஆண்டார். தனக்குக் கீழ் இருந்த மற்றொரு நகரமாகிய விஜயஸ்கந்தபுரம் என்ற ஊரைத் தனது சேனாதிபதிக்குக் கொடுத்தார். யுத்தத்தில் அவர் செய்த சிறந்த உதவிக்காக அவருக்குத் தானம் கொடுக்கப்பட்டது. இதில் 12 சோழ தேசம் என்பதின் பொருள் விளங்கவில்லை. தர்மம் செய்த பன்னிரண்டு கிராமங்கள் கணவாய்க்கு மேலே இருந்ததாகச் சொல்லப் பட்டிருக்கிறதாகையால் அவைகள் மலைநாடுகளாக இருக்கலாம். தற்கால ஹாசனூர் கஜ்ஜலு ஹட்டி மலைத் தொடர்களாக இருக்கலாம்.

## இராஜமல்லதேவராயன்

அவர்தம்பி விசாயதித்த ராயனடைய மகன். ராஜமல்லதேவராயன், தளவனபுரத்திலே பட்டாபிஷேகம் செய்து கொண்டு கன்னட தேசம், கொங்கு தேசம் இவைகளையாண்டனர். அவர் ரூபத்திலே மன்மதனைப் போலவும், யுத்தத்தில் அர்ச்சுனனைப் போலவும், கம்பீரத்தில் மேரு பருவதத்தைப் போலவும், தயவிலே இராமரைப் போலவும் இப்படி அநேக குணங்களுடனேயும், மிக்க பராக்கிரமத்துடனேயும், திராவிட தேசத்திற்குப் போய் காஞ்சிப் பட்டணத்திலேயிருக்கிற திராவிட ராஜாக்களை ஜெயித்து சோழ ராஜாவுடன் யுத்தம் செய்து அவனைப் பயப்படச் செய்த பிறகு அவனுடனே சிநேகிதம் செய்து கொண்டு இந்தப்படி கங்க குலத்துக்கு மிக்க கீர்த்தி செய்து வைத்து அரசாண்டனர்.

இந்த வரலாற்றினால் பிரிதிவிகொங்கணிக்கு மக்கள் இல்லை எனவும், அவருக்கு முந்தியே அவருடைய தம்பி விசயாதிகயன் இறந்து விட அவர் மகன் ராஜமல்லதேவன் பட்டத்திற்கு வந்தான் என அறிகிறோம். இராஜமல்லதேவனும் தலைக்காட்டிலேயே பட்டங் கட்டிக் கொண்டான். இவர் பராக்கிரமசாலியாக இருந்து காஞ்சி பல்லவர்கள் மீதும், தஞ்சை சோழர்கள் மீதும் போர் புரிந்து பின்னர் அவர்களோடு சிநேகம் செய்து கொண்டதாக அறிகிறோம்.

## கெந்ததேவ ராயன்

இராஜமல்லனுக்குப் பிறகு அவர் மகன் கெந்ததேவ ராயன் தளவனபுரம் என்ற தலைக்காட்டிலே பட்டம் கட்டிக் கொண்டு சேர சோழ பாண்டிய அரசர்களோடு சிநேகம் செய்து கொண்டு அரசாண்டு வந்தார்.

## சத்தியவாக்கிய ராயன்

இவர் கெந்ததேவனுடைய மகன். இவனும் தளவனபுரம் என்ற தலைக்காட்டிலே பட்டம் கட்டிக் கொண்டு சத்தியம் தவறாமல் அரசாண்டு வந்தார். ஆகவே இவருக்கு சத்திய வாக்கியன் என்ற பெயர் வந்தது.



## குணதுத்தம ராயன்

இவர் சத்தியவாக்கிய ராயனுடைய தம்பி. சத்தியவாக்கியனுக்கு மக்கள் இல்லாததினால் அவர் தம்பி பட்டத்திற்கு வந்தார். இவனும் தளவனபுரத்திலே பட்டம் கட்டிக் கொண்டு கொங்கு, கன்னட தேசங்களை ஆண்டு வந்தார். தங்கள் முன்னோர்கள் செய்து வைத்த தர்மத்தைச் சரியாக பரிபாலனம் செய்து வந்தார். மற்ற அரசர்களோடு நட்புரிமை கொண்டு நன்றாக் வாழ்ந்தார்.

## ராஜமல்ல தேவ ராயன்

இவர் குணதுத்தமராயனுடைய தம்பி. ராஜமல்ல தேவராயன் தளவனபுரத்திலே பட்டாபிஷேகம் செய்து கொண்டு சகல ராஜாக்களுடைய விருதுமடைந்து அப்பொழுது பாண்டிய ராஜன் யுத்தத்திற்கு வந்தவிடத்திலே அவருக்கு அபஜெயம் செய்வித்துச் சகலராஜாக்களும் இவருக்குச் சமமான பலசாலியில்லை எனக் கீர்த்தியையடைந்து தன்னுடைய அண்ணனை விஜயஸ்கந்தபுரத்திலே வைத்து அரசாண்டார். அப்பொழுது அவர் அண்ணன் குணதுத்தம ராயன் தர்மம் செய்த வயணம், சாலி வாகன சகை வருஷம் நோபாவஸி 89 விகாரி வருஷம் 303 ஆனி மாதத்திலே, குருவாரத்திலே, பூர்ணமியிலே, புனர்வசு நட்சத்திரத்திலே 7 விஷ்ணு குஹாலனாயமென்கிற சனதேவரது நவகரும் பலி பூஜை முதலான தருமத்திற்குக் கொங்கணீசுவர பகவந்தனுடைய சிஷ்யன் தேச சோம பகவந்தன், அவர் சிஷ்யன் அகோர சோம பகவந்தன்,அவர் சிஷ்யன் சகி பூஷண மஹாமுனி அவனுக்குத் தலைக்காடு நாடு, வடகரை நாடு, வீர அள்ளி என்கிற கிராமம் சர்வமானியமாய்த் தர்மம் செய்து கொடுத்தார். அதன் பிறகு உபய காவேரி மத்தியத்திலே பச்சிமரெங்க நாயகருடைய சேவை வெகுநாளாய்க் கௌகல் பூஜை செய்து இருந்த பிறகு, இந்த ஸ்தலம் வனமாய்ப் போய்த் திருமலையென்கிறவர் இரங்க நாயகர் கோவில் கட்டி வைத்துக் கொஞ்சம் பிரகாரங்கட்டி ஸ்ரீரங்கபுரமெனப் பெயர் வைத்து அந்தக் கோவிலுக்கு மேற்கே தன் பெயர் வைத்துத் திருமலைதேவரென விஷ்ணு பிரதிஷ்டை செய்து இந்த இரண்டு கோவிலுக்கும் பூஜை முதலான தருமம் நடப்பித்துக் கொண்டு வந்தார். சகை வருஷம் 894 ஆனந்த வருஷம் வைசாக மாதம் சுக்கில பட்சம் சப்தமி சுக்கிர வாரம்.

மேற்கூறிய வரலாற்றினால் இவ்வரசன் ஸ்ரீரங்கப்பட்டணத்தைப் பதிப்பித்தவர் என்று தெரிகிறது. இவர் இருந்த காலம் கி.பி. 894 என மேலே கூறிய வரலாற்றினால் தெரிய வருகிறது. கங்க வம்சத்து அரசர்கள் இவர் தான் கடைசி அரசனாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இவனுக்குப் பிறகு கொங்க தேசம் சோழர் வம்சத்திற்குச் சேர்ந்து விட்டதாக இந்நூல் கூறுகிறது. எவ்விதம் கொங்கு தேசத்திற் பட்டம் சோழர்களுக்குச் சேர்ந்து விட்டது என்ற காரணத்தை இந்நூல் எடுத்துக்

காட்டவில்லை. ஆகையால் சோழ வம்சத்தார் இந்நாட்டின் மீது படை எடுத்து தலைக்காட்டைப் பிடித்துக் கங்க வம்சத்தைத் தொலைத்து, கொங்கு நாட்டைத் தம் நாட்டோடு சேர்த்திருக்க வேண்டும் என்று ஊகிக்கலாம். ஏனெனில் இவ்வரசனுடைய வரலாற்றிற்குப் பிறகு அடியிற் கண்டபடி கூறப்பட்டிருக்கிறது.

" சோழ வம்சத்திலே கொங்கு தேசப்பட்டம் சோழ வம்சத்திலே விச(ய)ரடராயன் மகன் ஆதித்யவர்ம ராயன் சோழ தேசம் தஞ்சாவூரிலே பட்டங்கட்டிக் கொண்டு கொங்கு தேசத்திற்கு வந்து ராஜா வேடர்களை ஜெயம் செய்து தலைக்காடென்ற பட்டணங்கட்டிக் கொண்டு இந்த ராஜியங்களிலே அநேக அக்கிரகாரம் சர்வமானிய மாய்த் தர்மம் செய்து அந்த அரசை ஆண்டார்."

இவ் வரலாற்றினால் முன் கூறிய இராஜமல்ல தேவனுக்குப் பிறகு கொங்கு நாட்டிற்கு வந்து அரசாண்டது சோழ வம்சத்து ஆதித்திய வர்மனெனத் தெரிகிறது. இவர் சோழ வம்சத்தை ஸ்தாபித்த விஜயாலனுடைய மகன் பராந்தகன் 1 என்பவனுடைய தகப்பன். கி.பி.9-வது நூற்றாண்டில் சோழ வம்சத்தில் பிரக்கியாதியோடு ஆண்டார். மேலே கூறிய வரலாற்றிற்குப் பிறகு சோழ வம்சத்து அரசர்களுடைய பெயர்களும் அவர்களுக்குப் பிறகு ஒயிசள வம்சத்து அரசர்களுடைய பெயர்களும் இந்நூலில் காணப்படுகின்றன. ஆகவே கங்க வம்சம ராஜமல்லனோடு தொலைந்தது என நாம் கொள்ள வேண்டும்.

## சோழர்கள்

விஜயாலயன் தஞ்சாவூரை ராஜதானியாக்கிக் கொண்டு ஆண்டனர். துர்கைக்கு ஒரு கோவில் கட்டுவித்தார். இவர் மகன் முதல் ஆதித்தன். இவர் காலத்துத்தான் நிருபதுங்க பல்லவனுக்கும் , சோழ பாண்டியர்களுக்கும் அரைசூர், வேம்பில் திருப்புறம்பிடம் முதலிய இடங்களில் நடந்த போரில் சுவாதீனமடைந்தார்கள். நிருபதுங்கன் மகனாகிய அபராஜித வன்மனுக்குத் துணையாய் வந்த கங்க வரசனாகிய பிரதிவிபதியென்பவர் திருப்புறம்பியத்துப் போரில், வரகுண பாண்டியனால் கொல்லப்பட்டார். ஆதித்தனுக்கு முதற் பராந்தகன், கன்னாதேவன் என இரு புத்வர்கள். கி.பி. 907-ல் முடி சூடப் பெற்றார். இவர் மதுரையை ஜெயித்தபோது இராஜசிம்ம பாண்டியனிருந்தார். இந்த பராந்தகன் மதுரை ஈழம் வாணகப்பாடியை ஜெயித்தார்.

வாணகப்பாடி என்பது வட ஆற்காடு ஜில்லா, தென் ஆற்காடு ஜில்லாவில் சில பாகமும், ஆம். பராந்தகன் சிதம்பரத்துக்கும் பொற்றோடு வேய்ந்தான். பல மனைவியர்களில் கோக்கிழானடிகள் என்னும் மனைவியிடம் இராஜாதித்தன் பிறந்தான். கண்டராதித்தன், அரிஞ்சயன் ஆதித்தன் என்பவர்களும் மக்கள். கி.பி.947 - ல் இராஜாதித்தன் மகுடஞ் சூடினார். இவ்வரசர் இலாடத்தாயன்



பிரதிவிபதியின் மகளாகிய மஹா தேவடிகள். 985-ல் முதல் ராஜராஜன் பட்டத்திற்கு வந்தார். சில நாளாகப் பராதீனப்பட்டிருந்த சோழ ராஜ்ஜியத்தை உன்னத ஸ்திதிக்குக் கொண்டு வந்து மறுபடியும் ஸ்திரமாக ஸ்தாபித்தவர். இவ்விராஜ கேசரி ராஜராஜனே ஆம். சேனை முதலியவற்றை பலப்படுத்திக் கொண்டு காந்தளூர் என்னும் துறைமுகத்துக் கப்பல்களை அழித்து சேரரை ஜெயித்தார். மதுரையையும் தனது ஆட்சிக்கு ஆக்கினார்.

கங்கபாடி, துளம்ப பாடி, வேங்கை நாடு, குடகு. கங்கபாடி யென்பது மைசூர் ஜில்லாவும், அதைச் சுற்றிய நாடுகளுமுடைத்தாய் காவிரிக் கரையிலுள்ள தழைக்காடு என்னும் நகரத்தை ராஜதானி யாகக் கொண்டிருந்த நாடு. தன் பெயரால் தழைக்காட்டுக்கு ராஜராஜ புரம் எனப் பெயர் கொடுத்தார் என அவ்வூர் சாசனம் கூறுகிறது. இதற்கு அருகிலுள்ள, கலியூரில் பெரிய யுத்தம் நடந்தது. ராஜ ராஜனுடைய சேனாதிபதிகளுள் ஒருவனாகிய கொத்தமங்கல முடையானான அப்பிரமேயனென்பான், போஜள ராஜ மந்திரிகள் வீரர்களையும் கொன்று தானும் இறந்தார். .......... இராஜராஜன் சேரர்கள் மீது படை எடுத்தபோது தளகர்த்தனாக உடனிருந்து போர் புரிந்தவர் இந்த அப்பிரமேயன். வேங்கை நாடென்பது இப்பொழுது கோதாவரி, கிருஷ்ணா ஜில்லாக்களாயிருக்கும் நாடு. இதற்கு வடபுறமுள்ளது கலிங்கம். துளம்பர்கள் என்பவர்கள் பல்லவர்களில் ஒரு பிரிவினர். குட நாட்டுக்குத் தண்டெடுத்துச்சென்ற போது பஞ்சவன் மாராயன் என்பவர் மிக தைரியமாய்ப் போர் புரிந்ததைக் கண்டு வேங்கை மண்டலம், கங்க மண்டலங்களுக்குத் தண்ட நாயகனாக்கி க்ஷத்திரிய சிகாமணி கொங்காள்வான் என்ற பட்டமும் கொடுத்தனர். இலங்கைத் தீவு ஜெயிக்கப்பட்டது. இவனுக்குச் சோழபாண்டிய கேரள ராச்சியங்கள் மூன்றுக்கும் ஏக சக்கிரவர்த்தி என்பது தோன்ற மும்முடிச் சோழன் என்ற பெயருமுண்டாயிற்று. அத்துடன் சிவபாத சேகரன், அருள்மொழி, ராஜாசிரயன் சத்திரிய சிகாமணி என்பனவாதி பல பெயர்கள் விளங்கின. இவர் மனைவியர், தந்திசத்திவிடங்கி, திரைலோக்கியமாதேவி, பஞ்சவன்மாதேவி, அபிமானவல்லி, சோழமாதேவி என ஐவரிருந்தார்கள். ராஜராஜன் தன்னாட்சி 25 -ம் ஆண்டு துலாபாரம் புக்கதையும், தர்ம சத்திவிடங்கி இரணிய கற்பம் புக்கதையும், திருவிதலூர் சாசனம் கூறும். இன்றைக்கும் கண்டோர் வியக்குமாறு ப்ரஹதீசுர ஆலயம் கட்டினார். இவ்வரசர் கல்விமான்களிடத்து மிக்க பற்றுடையவர். இவர் காலத்திற்றான் நம்பியாண்டார் நம்பிகளும் கண்டாராதித்த தேவர் முதலிய திருவிசைப்பாவுடையாரும் பிறருமிருந்தனர். திருமுறை கண்ட சோழனுமிவனே. அவ்வரசர் சைவமதத்தில் மிக்கப் பற்றுடைய வனாயினும் மற்ற சமயங்களில் சிறிதும் வெறுப்புடையவனல்லர்.

தன் ராஜியத்திலுள்ள பூமி முழுவதும் அளப்பித்து ஆறிலொரு கடமை வாங்க ஏற்பாடு செய்தார். கி.பி.10122-ல் பட்டந்தரித்தவன் இராஜேந்திர சோழதேவன். மதுராந்தகன், உத்தம சோழன், விக்கிரம சோழன், பண்டித சோழன், முடிக் கொண்ட சோழன் எனப் பல பெயர்களுண்டு. இவர் தன் தகப்பனைப் போலப் பல நாடுகளையும் பிடிக்கக்கருதி மைசூரிலாகாவைச் சேர்ந்த இடைதுறை, வனவாசி, கொள்ளிப்பாக்கை, மண்ணைக் கடக்கம் ஈழ மண்டல முதலிய வற்றைக் கைப்பற்றினார். பின்பு ஒட்டா தேசம், கோசல நாடு, இலாட தேசம், வங்காளம் முதலியவற்றை இராஜ ராஜனால் வெல்லப் பட்டன. என மெய்கீர்த்தி கூறுகின்றன. 'அலைகடல் நடுவிற் பலகலஞ் செலுத்தி நிர்க்கோப தீவு, பர்மா முதலானவற்றையும் இவனது மெய்க்கீர்த்தி கூறுகிறது. கங்கை கொண்ட சோழேசுவரம் என ஆலயமுங் கட்டினார். கௌட தேச முதலிய இடங்களிலிருந்து பல பிராமணர்களைக் குடி ஏற்றினார். கருவூர்த் தேவரால் இக்கங்கை கொண்ட சோழேசுரம் திருவிசைப்பாவில் பாடப்பட்டது. கி.பி. 1018-ல் இராஜாதிராஜன் பட்டந்தரித்தார். மனாபரணன், வீரசோழன், சுந்தர பாண்டியன் ஆக மூன்று பாண்டியர்களோடு போர் புரிந்திருக் கிறார். வேணாட்டரசன் ஒருவனையும் ஜெயித்தார். இவனுக்கு சயங் கொண்ட சோழன் என மற்றொரு பெயருமுண்டு. 1052-ல் இராசேந்திர தேவன் பட்டாபிஷேகமுற்றார். விக்கிரம சோழனுலாவில்

'பாடாவத் தென்னரங்க மேயார்குப் பன்மணியா

லாடாவப் பாயலமைத்தோனும்'

எனப் புகழப்பட்டவனிவனே இவர் சிரங்கத்துக் கோயிலில் ஒரு பிரகாரத்தைக் கட்டி னார் எனக் கோயிலொழுகு கூறுகிறது. இதனால் அந்தப் பிரகாரத்திற்கு ராஜ மஹேந்திரன் திருவீதி எனப் பெயர்.

இந்த ராஜமஹேந்திரனுக்குப் பிறகு வீரராஜேந்திரன் சோழ சிம்மாசனமேறினார்.

'எவ்வுலகு மேவிய வெண்குடைச்

செம்பியன் வீரராஜேந்திரன்

என வீரசோழியம் என்னும் இலக்கண நூலில் கூறுவது இவனே.

ஆஹவமல்லன் தன் கையால் ஒரு கடிதம் எழுதி போருக்கு அழைத்தான். துங்கையும், பத்திரையும் கூடும் கடல். சங்கமத்துக்குப் போய் ஒரு மாதம் காத்திருந்தார். பிறகு ஆஹவமல்லன் மகன் விக்கிரமாதித்தன் சரணம் அடைந்தார். வீரராஜேந்திரனுக்குப் பின் அதிராஜேந்திரன் பட்டத்திற்கு வந்தார். பிறகு குலோத்துங்கன், இராஜேந்திரன் என்னும் இரு பெயரோடு, அநபாயன், கரிகாலன், ஜயரதன் எனப் பல பெயர்களும் இவனுக்கு உண்டு.



'சேயவன்திருப் பேரம்பலம் செய்ய நூயபொன்னணி

சோழனீடுழிபார் ஆயசிர நபாபன்

எனப் பெரிய புராணம் கூறுகிறது.

மதுராந்தகி, ஏழிசைவல்லபி, தியாகவல்லி, என மனைவியர். இவர் பல நாடுகளை ஜயித்த பிறகு 'திரிபுவன சக்கிரவர்த்தி' எனப் பெயர் வந்தது. ராஜியங்களுக்கு நலம் செய்யக் கருதி தனது நாட்டிலுள்ள 14 -வது ஆண்டில் சுங்கங்களைத் தவிர்த்தார். சுங்கந் தவிர்த்த சோழன் எனப் பெயராயிற்று. நாடுகளையெல்லாம் புதிதாக அளந்து ஆறிலொரு கடமையாக வரி ஏற்படுத்தினார். பல ஏரிகளைக் கட்டினார். காடுகளை வெட்டிப் பட்டணமாக்கினார். சிவாலயம், விஷ்ணு ஆலயங்களுண்டாக்கினார். சிதம்பரம், பேரம்பலத்தைப் பொன்னம்பலமாக்கினார். பேரம்பலம் பொன்வேய்ந்த சோழன் எனப் பெயர் பெற்றார். கல்விமானார். இவரது வேண்டுகோளால்தான் சேக்கிழார் பெரிய புராணம் பாடினார். ராமானுஜாசாரியார் இவர் காலத்தவர். இவ்வரசனால் தனக்குப் பொல்லாங்கு நேருமோவென போஜன ராஜியத்தில் தொண்டானூரில் போய் ஒளிந்தார். இவர் சைவனாயினும் எல்லா மதஸ்தர்களுக்கும் உதவி வந்தார். சைவ, வைஷ்ணவ, ஜைன, பௌத்தக் கோயில்கடோரும் இவர் சாசனங் களைக் காணலாம். இவர் 1070 முதல் 1119 வரை 19 வருஷ காலம் அரசாண்டார். கி.பி. 1118 -ல் விக்கிரம சோழனுக்கு பட்டாபிஷேக மாயிற்று. இவர் 18 வருஷம் அரசாண்டார். தியாக சமுத்திரம், அகளங்கன் என மறுபெயருமுண்டு. முக்கோக்கிழானடிகள், திரி புவனமுழுதுமுடையாள், தரணி முழுதுமுடையாள் என மனைவியர் மூவர். இவர் ஸ்ரீரங்கத்தில் அகளங்கன் திரு வீதி, திருவிக்கிரமன் திருவீதி எனப் பெயர் உள்ள வீதிகள் ஏற்படுத்தினார்.

விக்கிரம சோழன் மகனும் இவர் பின் முடி சூடியவனுமாகிய இரண்டாம் குலோத்துங்கன். இவனையும் இவன் மகன் ராஜ ராஜனை யும் பற்றி குலோத்துங்க சோழன் உலா, இராஜராஜன் உலா என்னும் உலாக்கட்கு நாயகர் என்பது தவிர வேறு ஒன்றும் தெரியவில்லை.

இராஜாதிராஜனுடைய காலத்தில் பாண்டிய ராஜியத்தினது ஆட்சியைப் பற்றி பராக்கிரம பாண்டியனுக்கும், குலசேகர பாண்டி யனுக்கும் விவாதம் நேர்ந்தது. இவர்கள் கலகங்களைப் பார்த்து குலசேகரன் கொங்கு நாட்டினின்று தனது மாமன் சேனைகளையும் பராக்கிரம பாண்டியன் சேனைகளின் சிதறுண்டதையும் தனது சேனையையும் சேர்த்து, தானே யுத்தத்திற்குப் புறப்பட்டார். குலசேகரன் அபஜயமடையப்பட்டார். மூன்றாம் குலோத்துங்கன் இராஜாதிராஜனுக்குப் பின் முடி சூட்டப் பட்டார். இவனுக்கு வீரராஜேந்திரன் திரிபுவன வீரதேவன் எனப் பெயருமுண்டு. குலோத்துங்கன் வடக்கே படையெடுத்துப் போய் கணபதி முதலா

வோரை ஓட்டி நாட்டைத் தனதாக்கிக் கொண்டார். இவர் காலத்தே இவர் கீழ் படிந்திருந்த சிற்றரசர்கள் அமாரபாணன் சியகங்கன் என்பவன் ஒருவன் இவனே. பவணந்தி முனிவரை நன்னூல் பாடும்படி கேட்டுக் கொண்டவன்.

மூன்றாம் குலோத்துங்கன், அவன் மகன் மூன்றாம் ராஜ ராஜன், அவன் மகன் மூன்றாம் இராஜேந்திரன் என்னும் அரசர்கள் கையிலகப் பட்டது. கலகம் போர் முதலான ஒருவாறு ஓய்ந்து நாடெங்கும் செழிப்படையவே அரசர்கள் சிற்றின்பங்களிலீடுபட்டு ராச்சியத்தைத் தன் கீழுள்ளோரிடம் தங்கவிட்டுத் தாங்களும் தேக வலியிழந்தார்கள். மகதை என்ற நடுநாட்டதிபதி, ஆர்க்கலூ ருடையான் பொன் பரப்பினான் மகதைப் பெருமாளான ராஜ ராஜ வாண கோவரை யனும், குலோத்துங்க சோழன் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து வெளிப் படையான பகையைப் பாராட்டத் தலைப் பட்டார்கள். இப்பொழுது காசுக்கு உழக்கரிசி விற்கும் பெரியவற்கட காலம்.

இவனுக்குப் பின் மூன்றாம் ராஜ ராஜன் பட்டமெய்தினான். சிற்றரசர்கள் பலத்திருந்தார்கள். இவன் முடி சூடிய ஆண்டிலே, பாண்டி நாட்டில் முதல் மாறவர்மன் சுந்தரபாண்டியன் பட்டந் தரித்தார். கி.பி.1216. இவர் மிக்க பலசாலி. சோழ நாடு உள்ள பலவீனத்தை அறிந்து அதை ஜயிக்க பாண்டியன் ஆரம்பித்தான். எப்படியோ சோழ ராச்சியத்தைப் பெற்றான். ஏதோ ஒரு சமாதானத் தால் மறுபடி திரும்பப் பாண்டியனுக்குக் கொடுத்தான். தன் ராச்சியத்தை அடைந்து கி.பி.1232 வரை கவலையின்றி இராஜ ராஜன் அரசாண்டு வந்தான். 1246 வரை அரசாண்டான். 1246-ல் மூன்றாம் ராஜேந்திரன் அரசனானான்.கி.பி.1251 -ல் பட்டந்தரித்த ஜடாவர்மன் சுந்தர பாண்டியன் மஹா ராஜாதி ராஜன் என்னும் சக்கிரவர்த்தி பட்டந்தரித்து தன்னைப் புகழ்ந்து கொண்டிருக்கிறான். இதற்கேற்ப இவர் சாசனங்கள் இராச்சிய வருஷத்து 11-வது ஆண்டு முதல் சேரனாட்டைச் சேர்ந்த திருவையாறு, திருமழபாடி, திருவானைக்கா, ஸ்ரீரங்கம், திருக்கழுங்குன்றம் முதலிய பலவிடங்களிலும் வடக்கே நெல்லூரிலும் காணப்படுகிறபடியால் இவன் சோழ நாட்டை ஜயித்திருக்க வேண்டும். இவர் காலத்தோடு சோழ மண்டலப் பிரபலம் குன்றியது. இவர் பின்னும், சிற்சில சோழர்கள் இருந்திருக கிறார்கள். சகை வருஷம் 1236-(கி.பி.1314)ல் வீர சோழன் என்பவன் ஒரு சிற்றரசனாக ஆண்டு வந்தான் என்று திருவல்லத்துச் சாசனம் ஒன்று தெரிவிக்கிறது. இச் சக வருஷத்திற்கும், இராஜேந்திரனுடைய கடைசிக்காலத்திற்கும் இடையே உத்தேசம் 60 வருஷங்களே இருத்த லால் இக்காரணத்துக் கூறியிருக்கும் வீரசோழன் ராஜேந்திரனுக்குப் பின் பட்டந்தரித்த சிற்றரசனாயிருக்கலாம்.



## பாண்டியர்கள்

நெடுஞ்சடையனுடைய தகப்பனான தேர்மாறன் என்ற பாண்டியன் தனது எதிரிகளை நெடு வயல், குறுமடை, மன்னி குறிச்சி, திருமங்கை, பூவலூர், கொடும்பாளூர் முதலிய போர்க் களங்களில் தோற்கடித்துப் பல்லவ அரசனை குழும்பூர் யுத்த களத்தில் வென்று, பெரியலூர் என்னுமிடத்தில் எதிரிகளை அழித்துக் காவிரியைத் கடந்து மழ கொங்கத்தைத் தனது வசப்படுத்திப் பாண்டிக் கொடுமுடி சென்று, பசுபதியை வணங்கி, கங்க ராஜனோடு சம்பந்தம் செய்து, கூடல், வஞ்சி, கோழி என்ற நகரங்களின் மதில் களைப் புதுப்பித்தானெனக் கண்டிருக்கிறது. இவ்வீரச் செயல்களைச் சொல்லும் பாகம் அடியில் கண்டபடி இருக்கிறது.

கொன்னவின்ற நெடுஞ்சுடர் வேற் கொங்கர் கோமான்
கோச்சடையன்

மற்றவர்க்குப் புத்திரனாய் மண்மகளது பொருட்டாக
மத்தயானை செலவுந்தி மானவேல் வலனந்திக்
கடுவிசையா லெதிர்த்தவரை நெடுவயல்வாய் நிகரழித்துக்
கறுவடைந்த மனத்தவரைக் குறுமடைவாய்க் கூர் பழித்து
மன்னிகுறிச்சியுந் திருமங்கையு முன்னின்றவர் முரணழித்து
மேவலோர் கடற்றானையோ டேற்றெதிரேய் வந்தவரைப்
பூவலூர்ப் புறங்கண்டுங்
கொடும்புரிசை நெடுங்கிடங்கிற் கொடும்பாளூர்க் கூடார்
கடும்பரியுங் கருங்களிறுங் கதிர்வேலிற் கைக்கொண்டுஞ்
சேவ.......................................................................
கூடாத பல்லவனைக் குழும்பூருட் டேசழிய
எண்ணிறந்து மால்களிறு மிவுளிகளும் பல கவர்ந்தும்
தரியலராய்த் தறித்தவரைப் பெரியலூர்ப் பீடழித்தும்
பூவிரியும் பொழிற்சோலைக் காவிரியைக் கடந்திட்
டழகமைந்த வார்சிலையின் மழகொங்க மடிப்படுத்து
மீண்டொளிய மணி இமைக்கு மெழிலமைந்த
நெடும்புரிசைப் பாண்டிக் கொடுமுடி சென்றெய்திப்
பசுபதியது பங்மபாதம் பணிந்தேந்திக்
காக ராசியுங் கதிர்மணியும் மனமகிழக் குடுத்திட்டுங்
கொங்கர் வந்நறுங் கண்ணிக்
கங்கராஜனொடு சப்பந்தஞ் செய்தும்
எண்ணிறந்தன கோசகஸ்ரமும் ஹிரண்யகர்ப்பமுந் துலாபாரமும்

மண்ணின்மிசைப் பல செய்து மறைநா வினோர் குறைதீர்த்துங்
கூடல் வஞ்சி கோழி என்னு மாடமாமதில் புதுக்கியு
மறைகடல் வளாகங் குறையா தாண்ட
மன்னர் மன்னன் றென்னவன் மருகன்
மான வெண்குடை மான்றோர் மாறன்

மேலே கூறிய வெற்றிச் செயல்களைச் செய்த தேர்மாறன் கி.பி.710 முதல் 740 வரை ஆண்டிருக்க வேண்டுமென ஆராய்ச்சியாளர்கள் கணித்திருக்கிறார்கள். தேர்மாறனுடைய தகப்பன் கோச்சடையன் என்ற பாண்டியன் கொங்கர் கோமான் என்ற பட்டத்தை வகித்திருந்தான். தேர்மாறனோ கொங்கு நாட்டில் ஒரு பாகமாகிய மழகொங்கத்தை வசப்படுத்திப் பாண்டிக் கொடுமுடி மட்டும் படை எடுத்திருந்தான்.

ஆகவே 8-வது நூற்றாண்டுப் பாண்டியர்கள் கொங்கு நாட்டின் மீது மிகுந்த ஆவல் கொண்டிருந்தார்கள் என அறிகிறோம்.

வட கொங்கு, தென் கொங்கு, மேல் கொங்கு என்பவற்றை எல்லை தெரிந்து வேறு காணலாம். (கீழ் கொங்கு மழ கொங்கு) என்பது அப்படி ஒன்று. கொங்கு 24 - நாடு மற்றை உப நாடுகளில், வட கொங்குள் வாழவந்தி நாடு ( ஊர்கள் 20) இணை நாடுகள் தூசூர் நாடு ஊர் (25) விமலை நாடு (ஊர் 20) ஏழூர் நாடு (ஊர் 32)ம் பிரத்தியேகமான ஆட்சியிலிருக்கிறது. கொங்குப் புலவர்கள் ஒரு வகுப்பார் இருக்கிறார்கள். அவர்களுக்கு நாட்டில் மிகுந்த அநுபவம். கொங்கு வேளாளர் வீட்டில் கல்யாணம் நடக்க வேண்டுமானால் அந்தப் புலவர்கள் வாழி சொல்ல வேண்டும். சொல்லாவிடில் மணவினை பூர்த்தியானதாக இல்லை.

மாப்பிள்ளை பெண் வீட்டில் ஏதேனும் ஜாதி சமய ஈனமிருந்தால் புலவர்கள் பேச மாட்டார்கள். ஒவ்வொரு கல்யாணங்களிலும் அவர்களுக்கு உரிமையான சன்மானம், காணிக்கை உண்டு. மேற்குறித்த நான்கு நாடுகளுக்குப் புலவர்கள் வேறு. மற்றைய நாடுகளுக்கு வேறுவேறு . கொங்கு தேசம் முற்றிலும் பாத்திய மென்றாலும் உரிமை அங்கு இல்லை. இங்கு இல்லை. இதனால் இந்தப்பிரிவு தொன்று தொட்டே அனுஷ்டானத்தில் வந்திருக்கிறது. ஆனால் மழவக் கொங்கு என்று வழக்கத்தில் வரவில்லை. சென்ற 1925-ம் வருஷத்தில் இந்த விவரம் ' விவேக திவாகரனில்' வெளிப் படுத்தியிருக்கிறது.

தேர்மாறனுடைய மகன் நெடுஞ்சடையன் வடகொங்கின் தலைவனான தகடூர் அதிகமான் மீது படை எடுத்துச் சென்றான்.

நெடுஞ்சடையனது ஒரு தான சாசனத்தில் :-

' மாயிரும் பெரும்புனற் காவிரி வடகரை
ஆயிரவேலி அயிரூர் தன்னிலும்



புகழியூருந் திகழ் வேலதியனை
ஓடு புறங் கண்டவன்' எனக் கண்டுள்ளது.

மாறவர்மன் சுந்தரபாண்டியன் மெய்க்கீர்த்தியில்
' ... பொன்னி சூழ்நாட்டுப் புலி யாணைபோயகல
கன்னிசூழ்நாட்டிற்கயலாணை கைவளர
வெஞ்சின விவுளியும் வேழமும் பரப்பித்
தஞ்சையு முறந்தையுஞ் செந்தழல் கொளுத்திக்
காவியுநீலமும் நின்று கவினிழப்ப
ஆவியுமாறு மணிநீர் நலனழித்துக்
கூடமுமாமதிளுங் கோபுரமு மாடரங்கும்
மாடமுமாளி கையு மண்டபமும் பலவிடித்துத்
தொழுதுவந்தடையா நிருபர்தந்தோ கைய
ரழுத கண்ணீராறு பரப்பிக்
கழுதைகொண்டுழுது கவடிவிக்கச் செம்பியனைச்
சினம்பிரியப்பொருது சுரம்போகவே வாட்டி
பைம்பொன்மணி முடிபறித்துப் பாணனுக்குக் கொடுத்தருளி
பாடரு சிறப்பிற்பருதி வான்றோயு
மாடகப்புரிசை யாயிரத்தளியில்
சோழவளவன் அபிஷேகமண்டபத்து வீராபிஷேகம்பண்ணி
கூராழியுஞ் செய்யதோளுமே கொண்டுபோய்
ஐயப்படாத அருமறை தோக்தணர்வாழ்
தெய்வப்புலியூர்த் திருவெல்லையுட்புக்குப்
பொன்னம்பலம்பொலிய நின்றாடுவார் பூவையுடன்
மன்னுந்திருமேனி கண்டு மனம் களித்து
சோதிமண்டபத்திருந்து
சோலைமலைபுனற் சோணாடு தானிழந்த
தார்மாலை முடியுந்தர வருகவென்றழைப்ப
வான நிலை குலையவாளரிக்கப் புறத்துப்
போனவளவனுரிமையுடன் புகுந்து
பெற்ற புதல்வனை நின்பேறென்று முன்காட்டி
வெற்றியரிய[illegible] வீற்ந்து தொழுதிரப்பக்
கானோடிமுன்னி சுழ்ந்த வெம்மை யெலாங்கையகல
தானோதகம்பண்ணி...
இதுபிடிப்பாடாக வெனப் பொங்குதிரை ஞாலத்துப்பூபாலர்
தொழவிளங்குஞ்
செங்கயல்கொண்டுன்றிரு முகமும்பண்டிழுந்த
சோழபதி யென்னுநாம முந்தொன்னகரு

மீன வழங்கி விட டகொடுத்தருளி
முன்னநமக்கு முடிவழங்கு சேவடிக்கீழ்
இன்னம்வழிபடுவோ மென்னாது பின்னொருநாள்
காவலனது புனநாடெனுங்களியா
லேவலெதிர் சொல்லாதிறை மறுத்தசென்னிவிடு
தூசியுழ் பேரணியும் ஒக்கச் கருண்டொதுங்கி
வாசியும் வாரணமும் தேருமடற்கருவக்
கூலனும்வெட்டுண்ண.... கொடி கொண்ட நெற்றிநிரைத்த
கோபுரமுஞ்குழ
முடிகொண்ட சோழபுரமண்டபத்துப் புகுந்து
திசைதோறும்.....சயத்தம்பநாட்டிய
ஸ்ரீகோமாறவர்ம்மரான திரிபுவனச் சக்கிரவர்த்திகள்
ஸ்ரீசேரணாடு சொண்டு
முடிகொண்ட சோழபுரத்து வீராபிகேஷம் பண்ணி
அருளிய ஸ்ரீ சுந்தர பாண்டிய தேவர்

ஜடாவர்ம சுந்தரபாண்டியன் (அனைத்துலகம் கொண்பருளிய) பாண்டியருக்குள் முடியின்மை பெற்றவனென்று சில சாசனங்கள் கூறுவதல்லாமல் மற்றும் சில கீழ்மேல் கோபுரங்களில் எழுதப் பட்டுள்ள தமிழ்ப்பாக்களால் சுந்தரபாண்டியனுடைய வீரச் செயல்கள் தெரிகின்றன. அச்சுந்தர பாண்டியனே முதலாவது ஜடாவர்ம சுந்தர பாண்டியன் என்பதில் சந்தேகமில்லை. (332-340-361) சாசனங்கள் அப்பாண்டியன் முதுகூரில் தெலுங்கனை முறியடித்தும், அவர்களைச் சேர்ந்தவர்களால் ஆரியர்களை வீழ்த்தியும், மற்றவர்களை போனாறு நதிவரை முதுகிட்டோடும்படி விரட்டியும், போல வீரர்களை நாட்டிற்கு ஓட்டினதாகவும் கூறுகிறது. 354-ல் சுந்தரபாண்டியன் வட நாட்டவர்களை ஜயித்ததல்லாமல் கண்டகோபாலனைக் கொன்றும் வேணாட்டரசனை ஜயித்ததாகவும், கொங்கர் சேனையை முறியடித்ததாகவும் கூறுகிறது. 332-ல் காடவர்கள் என்னும் அரசர்களையும், அவர் சேனையையும் முறியடித்துத் துரத்தினான். சுந்தரபாண்டியன் தில்லைக் கோவிலை சொர்ணமாக்கியதல்லாமல் துலாபாரம் என்னும் திருவிழா நடத்தினான். 338-ல் அவர் மிகவும் பலவான். அநேக ராச்சியங்களை ஜயித்தவர். அவனுடைய வீரர்கள் நெல்லூர் வரையில் வியாபித்திருந்தார்கள். நெல்லூரில் விஜயா பிகேஷம் செய்தான். தெலுங்கர், ஆரியர் இவர்களை முறியடித்தும் காடவர்களை ஜயித்தும் கண்டகோபாலனைக் கொன்றதும், ஜடாவர்ம சுந்தரபாண்டியனின் சமஸ்கிருத சாசனங்களால் ஊர்ஜிதப்படுகிறது. சமஸ்கிருத சாசனங்களில் மான் கூட்டங்களில் புலியாகவும், யானை களின் கூட்டங்களில் கால ஜ'ரமாகவும், கண்ட கோபாலனின் யமனா



கவும்' வருணிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், கொங்கர்களையும், ஆரியர்களையும் ஜயித்தது கூறப்படவில்லை. ஒருவேளை அவ்வாரியர்கள் மஹாவம்சம் என்னும் சிங்களப் பிரதியில் கூறும் சோழர்களாயிருக்கலாம். முதலாவது ஜடாவர்ம சுந்தரபாண்டியன் ஸ்ரீரங்கம் ரங்கநாதர் கோவிலுக்கு அநேக திருப்பணிகள் செய்துள் ளான். துலாபாரத் திருவிழா நடத்தி ரங்கநாதனுக்கு தங்க விமானம் செய்வித்து, 'ஹேமாச்சதன் ராஜா' எனப்பெயர் பெற்றான்.

பதின்மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியில் அதாவது கி.பி.1216 1244-ல் மதுரையில் அரசு புரிந்த சோணாடு கொண்ட மாறவர்மனான சுந்தரபாண்டியன் தன் மெய்கீர்த்தியில் இருவர் கொங்கரைப் பின் வருமாறு கூறியிருத்தல் ஆராயப்பாலது:-

' வணங்கும் வடகொங்கன் றன் சிறையுமீட்டு-
தென்கொங்கன் வந்திட்ட தெண்டனுக்கு
மின் பொங்கச் சாத்திய வரபரணந்தக்கதென வழங்கி
ஆறாத பெருநெருப்பி னவன் சிறையுமீட்டு-
மாட மதுரையிற் றான்போந்து புவனியிலே-
கூட விருகொங்கரையும் கும்பிடு கொண்டவர்க்குத்
தொல்லைப் புவிக்கு மிணங்காமற்றாஞ் சொன்ன-
வெ ல்லைக் குணிற்ப விசைத்திட்டு மேற்கொண்
டிவ்வாறு செய்யா தொழியிலி யமனுக்கு-
வெவ்வேல் விருந்தாக்குது முமையென விட்டருளி-'

இங்கு கூறியுள்ளதனையுற்று நோக்கின் முற்கூறிய 1216-44 ஆண்டு களில் செங்கோல் நடத்திய கொங்கரசர்களிருவர்க்குத் தங்கள் நாட்டின் எல்லையைப் பற்றி ஓர் போர் உண்டாயிற்றெனவும், அது காரணமாக அவர்கள் சிறைப்பட்டனரெனவும், இருவரும் பாண்டியரசரிடம் குறை கூறினார் எனவும், அப்பாண்டியனார் அவர்கள் நாட்டில் தொல்லை வழக்கான எல்லையை மாற்றித்தாம் கூறிய எல்லைக்குள் இருவரையும் நிற்கச் செய்தனரெனவும், புலப்படுகிறது.அன்றியும், தென்கொங்கனைச் சிறை மீளுமிடத்து 'ஆறாத பெருநண்பின்' என வழங்கியது அவ்வரசனுக்கும் பாண்டியற்கு மிருந்த ஒற்றுமையை நன்கு புலப்படுத்துகிறது.

எல்லையைப் பற்றிய போர் நிகழ்ச்சிக்கு கொங்கு வீரராஜேந்திர சோழன் பூண்ட 'கொங்கிரண்டும் ஆண்ட' என்னும் அடைமொழியே சான்றாகும். அவ்வடைமொழி உண்மையாயினும் உண்மை இன்மை யாயினும் எல்லையைப் பற்றிய ஓர் போர் நிகழ்ந்தே இருத்தல் வேண்டும் என்பது திண்ணம். உண்மையாயினும் வெற்றி வீர ராஜேந்திர சோழன்பாலும், இன்மையாயின் அவன் எதிரிபாலுமா யிருத்தல் தகுதி.

## விஜய நகர அரசர்கள்

துங்கபத்திரைக் கரையிலுள்ள ஹம்பியைத் தலைநகராகக் கொண்டு விஜயநகர ராச்சியத்தை ஸ்தாபித்துத் தென் இந்தியா அரசர்களையெல்லாம் தமக்குக் கப்பங்கட்டும்படி ஒய்சல வம்சத்தவர் ஆண்டார்கள். அவ்வரசர் மதுரையிலுள்ள மஹமதியரை துரத்தும்படி தமது சேனைத் தலைவரான கம்பண்ண உடையாரை அனுப்பினர். அவர் அவ்வாறு முஹமதியரைத் துரத்தி விட்டார். அவர்களது வம்சத்தவர்களும் நாயக்கர் வம்சத்தவர்களும், விஜய நகரத்திற்கு உட்பட்டு மதுரையை ஆண்டார்கள். இடையே பாண்டியர்களும் ஆண்டார்கள். 1559-ம் வருஷம் வீரசேகர சோழன் பாண்டியரைத் தோற்கடித்து இந்நாட்டைக் கைப்பற்றினான். பாண்டியனும் அவன் மகனும் விஜயநகர சக்கிரவர்த்தியிடம் போய் முறையிட்டார்கள். அவர் தம் சேனைத் தலைவராகிய நாகம நாயக்கனை அனுப்ப, நாகம நாயக்கன் அவ்வாறே சோழனைத் துரத்தி மதுரையை பாண்டியனிடம் ஒப்புவிக்காமல் தானே ஆளத் தொடங்கினான். இது சேதி தெரிந்து மெத்தக் கோபமுள்ளவராய் நாகம நாயக்கன் தலையைக் கொண்டு வரக்கூடியவர் நம் இடத்து யாரேனும் இருக்கின்றார்களா ? என்றனர். நாகம நாயக்கன் மகன், விகவநாத நாயக்கன் நானே அவ்வாறு செய்வேன் என விடை பெற்றுக் கொண்டு மதுரை சென்று தன் தகப்பன் நாகம நாயக்கனைச் சிறையில் வைத்துத் தன் தகப்பனை அரசன் சமுகம் கொண்டு வந்து நிறுத்தினான். மிகச் சந்தோஷமுற்ற அரசன், மதுரைக்குச் சாசுவதமான கவர்னராக விகவநாத நாயக்கனை நியமித்து அனுப்பினார்.

அவர் அரசரானதும் புதுக்கோட்டைகளாகக் கட்டினார். வைகை நதியில் சிற்றணை பேரணைகளைக் கட்டி நீர் வசதியும் பாசனமும் செய்தார். யாத்திரீகர்களுக்கு உண்டாகும் கள்ளர் பயத்தை நீக்கி...ர். வல்லம் கோட்டையைச் சோழனுக்குக் கொடுத்து திருச்சினாப்பள்ளிக் கோட்டையைத் தாம் பெற்று அங்கிருந்தே ஆண்டு வந்தார். விசவநாத நாயக்கருக்கு அரியநாயக முதலியார் என்ற ஒரு உத்தம குணமும், வன்மையுமுள்ள மந்திரி வாய்த்தார். அவரே இந்நாட்டைச் சீர்படுத்தினார். இந்த நாயக்கர் காலத்திலிருந்து திருமலை நாயக்கர் காலம் வரை பேருக்குப் பாண்டியர்களே தவிர மற்றனவெல்லாம் நாயக்கர்களே நடத்தி வந்தார்கள். இவருக்குப் பின் இவர் குமார கிருஷ்ணப்ப நாயக்கர் நாட்டுக்குப் பல நலங்கள் செய்து 10 வருஷம் ஆண்டார். இவருக்கு 2 புத்திரர்கள். 12 வருஷம் நாட்டைப் பரிபாலித்தார்கள்.அவருக்குப் பின் முத்துக் கிருஷ்ண நாயக்கர், இவருக்கு மூன்று புத்திரர்கள். முத்துவீரப்ப நாயக்கர், திருமலை நாயக்கர், குமார நாயக்கர். முத்து வீரப்ப நாயக்கர் நாட்டை 15 வருஷம் ஆண்டார். அதன் பின்னர் திருமலை நாயக்கர் பட்டத்திற்கு வந்தார்.

திருமலை நாயக்கர் மஹால், வண்டியூர்த் தெப்பக்குளம், புது மண்டபம், ராஜ கோபுரம், இன்னும் மீனாட்சியம்மன் கோவிலில்



பற்பல பாகங்கள் இவராலே ஏற்பட்டது. புது மண்டபத்தில் விகவநாத நாயக்கர் முதலிய நாயக்கர்களுடைய சிலைகளுண்டு. ராஜகோபுரத்தைப் போல 64 கோபுரங்கள் கட்ட ஆரம்பித்தார். முடிவுறவில்லை. திருமலை தன் முன்னோர்களைப் போல விஜய நகரத்திற்குக் கப்பம் கொடாமலே சுயேச்சையாக ஆள ஆரம்பித்தார். இதனால் மைசூரார் பெருத்த சேனையுடன் திருமலையை எதிர்த்தார். திருமலை சேதுபதியை உதவி செய்ய வேண்டினார். உடனே பெருஞ் சேனையுடன் வந்து மைசூர்ச் சேனையை தாராபுரம் துரத்தி அடித்தார். திருமலை தம்பியை மைசூருக்கு அனுப்பினார். பெருஞ்சேனையொடு சென்று அவ்வரசனுடைய மூக்கை அறுத்துக் கொண்டு திரும்பினார். இவ்வெற்றியோடு வருமுன் திருமலை காலமாய் விட்டார். இவருக்குப் பின் இவர் குமாரர் சொர்ப்ப நாளும் அவர் மகன் சொக்கநாத நாயக்கரும் ஆண்டார்கள். இவருக்குப் பிறகு அவர் மகன் ராமகிருஷ்ணப்ப, முத்துவீரப்ப நாயக்கர். அவர் திடீரென்று சாக, அவர் மனைவியும் ஒரு ஆண்குழந்தையைப் பெற்று விட்டு இறந்தாள். அக்குழந்தையாகிய விஜயரங்க சொக்கலிங்க நாயக்கருக்கு தக்க வயது வரும் வரை அவனுடைய பாட்டியும் சொக்கநாத நாயக்கர் மனைவியுமாகிய மங்கம்மா 16 வருஷம் நாட்டை ஆண்டாள்.

## சிக்கதேவ நாயக்கர்

மைசூரில் இப்பொழுது நவராத்திரியில் அரசர் கொலுவிலிருக்கும் சிம்மாசனம் ஔரங்கசீப் சக்கிரவர்த்தி வெகுமதியாகக் கொடுத்தது அன்றி **ஜக்டியோ ராய்** (ஜகராயன்) என்ற பட்டமும் கொடுத்தது. சிக்கதேவ ராயர் 30 வருஷம் அரசாண்டார். 1704 பரலோகமெய்தினார்.

ஹைதர் அலி கூலிக்குச் சேவித்திருந்த மஹாவீரன். நாளடைவே சாமர்த்தியமாக நடந்து கொண்டபடியால் நாளடைவே மந்திரியானார். இங்கிலீஷ்காரர்களோடு சண்டை செய்தார். பிறகு சமாதானமானார்கள்.தேக நலம் கெட்டது 1780 வருஷம் டிசம்பர் மாதம் 7 -ம் தேதி 60-வது வயதில் இறந்தார்.

இவர் இறந்த பிறகு இவர் குமாரர் திப்பு சுல்தான் ஆட்சி செய்ய இங்கிலீஷ்காரர் சேனையைக் கூட்டிக் கொண்டு போய் பெங்களூரைக் கைப்பற்றிக் கொண்டு சீரங்கப்பட்டணத்திற்குப் போனார்கள். சண்டை செய்ய அஞ்சித் திப்பு சமாதானமாகக் கேட்டுக் கொண்டார். லார்ட்காரன்வாலிஸ் உமது மாகாணங்களில் பாதியும், பணத் தொகையும் கொடுக்க வேண்டுமென்றார். கொஞ்சம் கொஞ்சமாகக் கொடுப்பதாக ஒப்புக் கொண்டார் என்றாலும், இங்கிலீஷ்காரரைத் துரத்திவிட வேண்டுமென்று பிரஞ்சுக்காரரிடம் யோசித்தார். இது சேதி தெரிந்து சண்டை நேர்ந்தது. போர் செய்து கொண்டே திப்பு இறந்து போனார். 30 -வது வயதில் தொடங்கி, 47 - வது வயது வரையில் அரசாண்டிருந்து 1799-ல் மாண்டு போனார்.

திப்புவின் குமாரர் இருவர்களையும் இங்கிலீஷ்காரர் முதலில் வேலூரில் கொண்டு போய் வைத்திருந்தனர். அப்பால் அவர்களைக்

கல்கத்தாவிற்குக் கொண்டு போயினர். அங்கே அவர்களுடைய சந்ததியார் இன்னும் வசித்துக் கொண்டிருக்கிறார்கள்.

பழைய இந்து ராஜ்ஜியமான மைசூரை அதற்குரிய பழைய அரச பரம்பரையினரைத் தேடி, கிருஷ்ண ராஜபஹதூரிடம் ஒப்பித்துத் திப்புவின் பிரதான மந்திரிகளில் ஒருவரான பூர்ணய்யனை மந்திரியாக நியமித்தார்கள்.

இந்த தேசம் வடபாகம், தென்பாகம், மேற்குக் கொங்கு என மூன்று பாகமாய்ப் பிரிக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. நெடுஞ் சடையனது பாண்டிய பட்டையத்தில் மூன்றாம் பாகத்தைக் குறிக்கிறது. சேலம், கோயமுத்தூர் ஜில்லாக்களில் கல் சாசனங்கள் மற்ற இரண்டு பாகங்களைக் குறிக்கின்றன. சுந்தர பாண்டியனது சாசனத்தின் பிரகாரம் நாமக்கல், ஏழுர் நாடென்னும், பாகத்திலிருந்தது. மதுரை ஜில்லா பழனி தாலூக்காவிலுள்ள கீரனூர் கொங்கின் ஜில்லாக்களிலொன்றாகிய பொங்கலூர் நாட்டைச் சேர்ந்தது. ஏழூர் நாடு வட கொங்கைச் சேர்ந்தது. ஈரோட்டிற்குச் சமீபத்திலுள்ள விசய மங்கலம், திங்களூர். இவை இரண்டும் குறுப்பு நாட்டிலிருந்ததாகத் தெரிகிறது. வடக்கு, தெற்கு இரண்டு கொங்குகளையும் அரசாண்டு வந்த வீர சோழனுடைய சாசனமொன்று பழனிக்குச் சமீபத்தில் பெரிய வுடையார் கோவிலிலகப்பட்டது. கோயமுத்தூருக்கருகாமை யிலுள்ள பேரூர் தென் கொங்கைச் சேர்ந்ததாகத் தோன்றுகிறது. ஆ யதினால், கொங்கு சேலத்திலொரு பாகம், அல்லது கோயமுத்தூர் முழுதுமாயிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. வடகொங்கு காவேரி நதியின் வடக்கேயுள்ள தேசமாயும், தென் கொங்கு கோயமுத்தூர் ஜில்லா முழுதுமாயிருக்க வேண்டும். கருவூரில கண்டு பிடித்த மூன்றாவது குலோத்துங்கனுடைய சாசனங்களிரண்டில் கொங்கு, சோழ கோள மண்டலமென்றும், திருச்செங்கோட்டில் எடுத்த ஒரு பாண்டிய சாசனத்தில் வீர சோழ மண்டலமென்றும், கூப்பிடப்பட்டதாகத் தெரிகிறது.

தமிழில் கொங்கு தேச ராசர்கள் என்றெழுதியுள்ள புத்தகத்தில் அத்தேசத்தையாண்டவர்களில் இராஷ்ட்ரகூதரும், கங்கரும், உண்டென்று கூறினாலும் அவர்களுடைய சாசனங்களொன்றேனும் காணப்படவில்லை. கோயமுத்தூர் ஜில்லா விசயமங்கலம் சயின கோவிலில் சமண்டராசனது சகோதரியின் நிசிதிகத்தைக் கொண்டாடினதற் கேற்பட்ட ஒரு சாசனமாக்கப்பட்டது. இவர் கங்கவரசர்களாகிய மாரசிம்மன், இராகமாலன்,இவர்களது மந்திரியாகிய சமண்ட ராசனாக விருந்தாலுமிருக்கும். அப்படியானாலும் கொங்கில் கங்கர்களிராச்சியமிருந்ததென்று சொல்ல முடியாது. 1905-த்திய 662-ல்



சொல்லியுள்ள மல்லிதேவ மகாராஜன் கங்க வம்சத்தானா யிருக்கலாம். ஆனால் அச்சாசனம் மிகவும் புதியதாயிருக்கிறது. தங்க இராஜ்ஜியமாயிருந்த சேலம் ஜில்லாவின் வடபாகத்திரண்டு பல்லவ கிரந்த சாசனங்களகப்பட்டது. தென் கொங்கிலுள்ள கருவூரிலகப் பட்ட சாசனங்களால், தமிழில் சொல்லியுள்ள சோழர்களின் படை யெடுப்பு நிச்சயமானதென்றும், சோழராச்சியம் தென் கொங்கு வரையிலெட்டியிருந்ததென்றுந் தெரிகிறது. அச்சாசனங்கள் பின் வருபவருடையன.

பரகேசரி வர்மன்,வீரராசேந்திர தேவன், இராசேந்திர தேவன், இராசகேசரி வர்மன், மூன்றாவது குலோத்துங்கன் சோழர்கள் 12-ம் நூற்றாண்டின் கடையில் வலிகுன்றிப் போகவும், துவார சமுத்திரத்திலுள்ள ஒயிசலர் கொங்கைக் கைப்பற்ற முயன்றார்கள். ஒயிசலவரசனாகிய விஷ்ணுவர்த்தனன் கொங்கு நாட்டைப் பிடித்துக் கோயமுத்தூரைத் தலைகீழாக்கினதாகச் சொல்லுகிறான். பம்பாய் கெஜட்டீர் (Ⅵ 96-ம்பக்கம்)

வீரசோமேசுவரனுக்கு முன் சேலத்திலுங் கோயமுத்தூரிலும் யாதொரு ஒயிசல சாசனங்களுங்காணவில்லை. கொங்கில் வீர சோமேசுவரனுடைய அரசு கொஞ்ச காலத்தாகவிருக்க வேண்டும். பாண்டியரசனாகிய சாதவர்ம சுந்தர பாண்டியன் ஒயிசலர்களைக் கொங்கினின்று துரத்தி விட்டதாகப் பலவழிகளானுந் தெரிகிறது. பாண்டியரிடத்தினின்றும் ஒயிசலர் மறுபடியும் கொங்கு நாட்டைப் பிடித்துக் கொண்டதாக சேலம் கோயமுத்தூர் ஜில்லாக்களிலகப்பட்ட ஒயிசலவரசர் வீர விகவநாதன், வீரராமநாதன், இவர்களது சாசனங்கள் தெரிவிக்கிறது. ஒயிசலர் (கி 1327-ல்) முற்றிலு முறியடிக்கப்பட்டு முகமதியராலவருடைய இராச்சியம் 1327-ல் பிடுங்கிக் கொள்ளப் பட்டாலும், கொங்கு நாட்டில் மாத்திரமவர்கள் திரமாயிருந்ததாகத் தெரிகிறது. சேலம், கோயமுத்தூர் ஜில்லாக்களிலகப்படும் சில குறிப்புகளாலும், ஈரோட்டிற்கருகே விசயமங்கலத்தில் அரசனுக்கும், நாட்டிற்கும் நன்மையுண்டாக்கும்படி யத்தேயத்துச்சனங்கள் கொடுத்த கொடையைக் காண்பிக்கும் சாசனத்தாலும் 1905 552 பல்லாலன் என்னும் ஒயிசலவரசர் கொங்கிலரசாண்டு வந்தா னென்பது தெரிகிறது. ஒயிசலருக்குப் பின் வந்த விசயநகரத்தரசர்கள், அவர்களதிகாரத்தினாரம்பத்திலேயே கொங்கைத் தங்கள வசமாக்கிக் கொண்டார்கள். ஆரம்பத்தில் இராசவம்சத்தாரே பிரதிநிதிகளாக விருந்து வந்ததாகத் தெரிகிறது. பின் வருமரசர்களின் சாசனங்கள் கோயமுத்தூர் , சேலம் ஜில்லாக்களில் காணப்படுகிறது.

ஹரிஹரன் புத்திரன் - பக்கன்

தேவராயன் புத்திரன் - ஹரிஹரன்

விசயபூபதி, தேவராயன், அச்சுதன், சதாசிவன், வெங்கடபதி, கிருஷ்ண ராயன்

இதனாற் கொங்கு, அல்லது அதினொரு பாகம் மதுரை நாய்க்கர் களின் கைவசமாயிற்று.

கோயமுத்தூர் ஜில்லாவிலுள்ள சில சாசனங்களால் சோழ பாண்டியவரசர்களின் பெயர் கொண்ட அரசர்கள் சிலரிருந்தாகத் தெரிகிறது. அவர்கள் தனியாகவோ, அல்லது சிற்றரசர்களாகவோ கொங்கு நாட்டையாண்டவர்களென்று தோன்றுகிறது. கீழேயவர் களின் பெயர்கள் குறிக்கப்பட்டிருக்கிறது.

1. கோனாட்டான் எனப்படுகிற விக்கிரம சோழன். இவன் 1004 -ல் சிம்மாசனமேறி ஏறக்குறைய 40 வருஷங்களாண்டான். (1905-ல் 614ல்)

2. இராசாதிராசன் :- இவர் கி.பி. 1100-ல் ஆண்டிருந்தார். (1905-ல் 573,574, 576,582-ல்)

3. இராசாதிராச வீர சோழன்:- கி.பி. 1118-9ல் பட்டத்திற்கு வந்து 5 வருஷமாண்டார். (1905-ல் 593நி)

4. விக்கிரம சோழன்:- கி.பி. 1255-59-ல் பட்டத்திற்கு வந்து 7 வருஷமாண்டார். (1905-ல் 555, 578.ல்) 578-ல் இவனைத் தொடர்ந்து குலோத்துங்கன், வீரராசேந்திரன், இருவர் வந்ததாகவிருக்கிறது.

5. இராசகேசரி வர்மன் என்கிற திரிபுவன சக்கிரவர்த்தி வீரபாண்டிய தேவன் கி.பி. 1265-66 -ல் வந்து ஏறக்குறைய 15 வருஷம் ஆண்டார். (1905-ல் 544 545 நி)

6. பரகேசரி வர்மன் என்கிற திரிபுவன சக்கிரவர்த்தி, விக்கிரம சோழ தேவன் கி.பி. 1273-ல் வந்து 2 வருஷமாண்டார். (1995-ல் 610)

சகாப்தங் குறிக்கப்படாத மற்ற அரசர்களின் பெயர்கள் கீழ் கண்டிருக்கிறது.

1. வீரராசேந்திரன், சாசனத்திற்கண்ட கடைசி தேதி அவனது 42-வது வருஷம் (1905-ல் 557-ல்)

2. குலோத்துங்க சோழன் 34-வது வருஷம் (1905-ல் 661 நி)

3. வீரபாண்டியன் 19 வது வருஷம் (1905-ல் 575 நி.)

4. சுந்தர பாண்டியன் 28 வருஷம் (905-ல் 595 நி.)

*



# மூன்றாவது

# அடைவு இயல்

அடைவு என்பது முறை, வரிசை, ஒழுங்கு என்பது பொருள். நாடு ஒழுங்கு பெற ஆதற்கு அறிஞர்களாலும், அரசு வகையினராலும் தொன்மை நாட் பழக்க வழக்கங்களாலும், கடைபோக நிலைத்து நின்ற, நன்முறை என்பது. கொங்கு நாட்டு மக்கள் வரிசை கோணாது தங்கள் உரிமைகளை எவ்வாற்றானும் இழவாது தத்தம் நிலை கண்டு நிற்றல் ஆம். செங்கோல் செழித்தற்காகவும், சிறத்தற்காகவும், நீதி கண்டு நடத்தற்காக நாட்டை அளவு கண்டு கூறுகளாக்கி, அவ்வக் கூற்றங்கள் அரசிறை, நியாய விசாரணை, நாடு காவல், தேவாலயம், ஊழியப்பொறுப்பு முதலியவற்றை அங்கங்கே பொறுப்பாளிகளைக் கண்டு கொடுத்து, அவ்வ சிறிய செயல் முதல் அடைவே பெரிய அதிகாரிகள் வேந்தன் சமூகம் வரை செல்லுதற்கும் வழுவாது நிற்றற்கும் அடைவு ஆம். தன் கோவில் காணியாட்சி குரு சிஷியர் முறை காணலும், இதன் விவரமான விளக்கம், ஐந்தாவது ஒழிபு இயலில் நன்கு காட்டப்படும்.

தொன்மைக் காலந் தொட்டு சாதி சமய ஆசாரக் கொள்கை நீர்ப்பாசன வகை முதலியனவும், அன்றன்று கண்டு உரிமை, வரம்பு, கடவாது நடத்தற்காக நாடு என்ற பிரிவு செய்து ராஜாங்கத்தார் வைத்திருக்கிறார்கள். இதில் ஊர் அதிகாரி, நாட்டதிகாரி, என இரு வகை. பல சிற்றூர்கள் சேர்ந்தது ஊர். ஊர் என்பது கிராம அதிகாரி வசிக்கும் தானம். அத்தானத்தே சிவாலயம், விஷ்ணு ஆலயம், காளி மற்றும் அங்குள்ளார் தொழும் பிற தேவதைகளான கிராம தேவதை கள் கோவில்கள் விளங்கும். கிராமத் தலைவன், பெரிய தனக்காரன், என்னும் அதிகாரியின் செயல்கள் நடைபெறுதற் பொருட்டு, கணக்கன், தண்டற்காரன், ஊர் காவலர் முதலியவர்கள் இருப்பார்கள். அந்த ஊர்களில் கச்சேரி ஒன்றிருக்கும். அங்குள்ளார் தங்கள் குறை களை அவ்வூராளியிடம் தெரிவித்து, நியாயம் பெறுதல் வேண்டும்.

இனி பல கிராமங்கள் சேர்ந்தது ஒரு நாடு. நாட்டைச் சார்ந்த கிராமங்களிலுள்ள குறைகள் நாட்டதிகாரியிடம் வரும். நாட்டதி காரிக்கு நாட்டான் என்று பெயர். சாதிசமய ஆசார விவகாரமும் நீர்ப்பாசன வகை வழக்கு முதலிய பிரச்சினைகளை நாட்டான் தீர்ப்பதாக இருந்திருக்கிறது. அந்த அந்த நாட்டைச் சார்ந்த மிராசுதார் களுடன் கூடும் கூட்டத்துக்கு நாட்டார் நாட்டுக்கூட்டம் என்று பெயர். பல நாட்டார்கள் இவ்வாறு கூடும் கூட்டத்துக்கு மகாநாடு என்று பெயர். அங்கங்கு ராஜாக்களால் பட்டம் பெற்ற பட்டக்காரர்கள், காங்கேயன், காமிண்டன், அகளங்கன், பல்லவராயன், வேணாடன்,

காளிங்கராயன், வாணராயன் என்பவன வாதிப்பட்டதாரிகள் அந்த மகாநாட்டுக்கு அங்கத்தவர்களாக இருப்பார்கள். இவ்வாறு கூடுகிற மகாநாட்டுக் கூட்டம் பழய ஏடுகளால் தெரிகிறது. (தாலூகா போர்டு, ஜில்லா போர்டு முதலிய மாதிரி கூட்டங்கள் இப்பொழுது கூடுகிறது.) சாதி சமய விவகாரங் களில்லை.

பழங்கால வழக்கத்தை அனுசரித்து இன்னும் சில பல இடங்களில் நடைபெறுகிறது. செங்குந்தர்களில் வடகொங்கு ஏழுகரை நாட்டில் நடக்கிறது. திருச்செங்கோட்டில் காணலாம். அகம், புறம் முதலிய பழய சங்க நூல்களிலும், சேக்கிழார் பாடியருளிய பெரிய புராணத்தும் நாட்டு முறையாகக் கூறப்பட்டுள்ளது. சில சாசனங்களிலும் நாடுகள் கண்டிருக்கிறது. அப்பெரியார் அடிச்சுவடி பற்றியே எழுதப்பெற்று வருகிறது.

முற்காலத்து கொங்கு நாடு- வட கொங்கு , கீழ் கொங்கு, மேல் கொங்கு, மழ கொங்கு என நான்கு பிரிவுகளாகவும், பிரித்து ஆண்டார்கள். காவேரி நதிக்குக் கிழக்கும், வடக்கும் கொல்லிமலை யடங்கியதும் வடகொங்கு. பேரூர் தொடங்கியது மேல் கொங்கு. கருவூர், பழனி, கீரனூர் தென் கொங்கு ஆகும்.

இவ்வாறுள்ள கொங்கு நாட்டை இருபத்து நான்கு பிரதான நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அதுவே இவை,

| | | |
|---|---|---|
| பூந்துரை நாடு | தலையனாடு | வாழவந்திநாடு |
| தென்கரை நாடு | தட்டயநாடு | அண்டநாடு |
| காங்கேய நாடு | பூவாணிய நாடு | வெங்கால நாடு |
| பொன்கலூர் நாடு | அரையனாடு | காவடிக்கனாடு |
| ஆறை நாடு | ஒடுவங்க நாடு | ஆனைமலை நாடு |
| வாரக்கனாடு | வடகரை நாடு | ராசிபுர நாடு |
| திருவாவினன்குடி நாடு | கிழங்கு நாடு | காஞ்சிக்கோயினாடு |
| மணநாடு | கல்லுருந்தனாடு | குறும்பி நாடு |

இந்தப் பூந்துரை நாடு காவேரி நந் இடையே பெற்றது. கிழக்கே உள்ளது கீழ்கரை என்றும், மேற்கே மேல்கரை என்றும் முப்பத்திரண்டு, முப்பத்திரண்டு (ஊர்) கிராமங்களுள்ளதாக இருக்கிறது. கீழ் கரை என்பது வடகொங்கு. மேற்கே உள்ளது மேல் கொங்காம். கிழக்கே உள்ள வடகொங்குக்குப் பிரதான நகரம் சங்ககிரி துர்க்கம்.



## சங்ககிரி

முற்காலத்தில்காமதேனு சிவபிரானைப் பூசிக்கும் நிமித்தம் மேருமலையின் நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்னும் ஐந்து நாடிகளில் கூர்ம நாடிக் கொடுமுடியைப் பெயர்த்து வந்து கீழ்க்கரைப் பூந்துறை நாட்டில் வைத்து கடவுளைப் பூசித்தது. இது சங்க வடிவாக இருத்தலின் சங்ககிரி எனப் பெயர் பெற்றது. மலைமேற்கோட்டைக்குத் துருக்கம் என்று பெயர். இதனால் சங்ககிரி துருக்கம்என்கிறார்கள். இதனடிவாரத்தே சோமேகவரர் விளங்கு கிறார்.

பின்னர் ஒரு காலத்தே ஹைஜானு பவத்நிமித்தம் கௌண் டனிய மஹாரிஷி சங்ககிரியின் ஒரு குகையினிடத்தே இருந்து தவம் புரிந்தனர். ஆனால், தினமும் திருமலைக்கு எழுந்தருளி வேங்கட நாதனைத் தரிசித்து வருவார். இவ்வாறு தினகாலமும் திருமலை சென்று வரும் முனிவர் சங்ககிரி மலையிலேயே பகவான் எழுந்தருளு வாராயின் நன்றாக இருக்கும் என எண்ணினார். இந்நினைவை யோர்ந்த பெருமாள் அன்ப, உன் எண்ணப்பிரகாரமே செய்வோம் என்று அனுக்கிரகித்தனர். பகவான் அனுக்கிரகிக்கும் நன்னாள் எந்நாளோ என ஏக்கம் கொண்டிருந்தார்.வைகாசி மாத சுக்கில பட்சம் பௌர்ணமி விசாக நட்சத்திரம் சுக்கிரவாரங்கூடிய புண்ணிய தினத்தன்று உதயத்தில் தேவர்கள் முனிவர்கள் பக்தர்கள் புடைசூழ எழுந்தருளினார். கௌண்டனியர் பேரானந்தப் பெருங் கடலுள ஆழ்ந்து ஆடிப்பாடித் துதித்து முக்காலங்களிலும் நேசித்து பூசித்து வணங்கிக் கொண்டிருந்தார் என்பது வைஷ்ணவ மகத்துவம்.

சிலகா"லத்தின் பின்னர் ஏதோ காரணத்தால் அர்ச்சா மூர்த்தம் புதற்குள்.ாய் விட்டது.மலையானாலும் பசும் புற்றரை நீர் நிலைகள் செழிப்புற்றிருப்பதால் பசுக்கள் மேய்வுக்கு ஏற்றதாக இருந்தது. மேய்வு கொண்ட ஒரு காராம் பசு தினமும் ஒரு புதற்குள் செல்வதும் சற்று தாமதித்து வருவதும், வரும்பொழுது பால் சுரந்துள்ள மடி வற்றியிருப்பதையும் மேய்ப்போன் கண்டு சந்தேகம் கொண்டான். பசு போன பின் பசுவை ஒட்டி சிறுவன் தூரத்திருந்தே மறைந்திருந்து பார்த்தான். புதற்குள் பசு சென்று நின்றவுடனே தானாகவே பால் சுருந்து வடிவதைப் பார்த்தான். பின் அடுத்தடுத்தும் கண்டான். அதிசயித்துப் புதரை வெட்டினான். மண் வெட்டியில் தோண்டினான். பால் விழும் கல்லின் மீது மண் வெட்டி தாக்கவே இரத்தம் கனிந்தது. துடைக்கத் துடைக்க நிற்காமல் வடிந்தது. தண்ணீர் கொண்டு கழுவியும் நிற்கவில்லை. ஆச்சரியமும் அச்சமும் கொண்டு உடன் வந்திருந்த வாலிபர்களுக்கும் அறிவித்தான். உடனே வந்தவர்களும்

சேர்ந்து மண்களைச் சுற்றிலும் தோண்டினார்கள். சக்தியுள்ள சுவாமி யென எண்ணி துளசியும், பூவும் கொண்டு வந்து போட்டு வணங்கி னார்கள். பொழுது ஆய் விட்டது. மற்றவர்களெல்லாம் புறப்பட் டார்கள். முதலில் கண்டவன் மாத்திரம் இவ்விடத்தினின்றும், பிரிய மனமில்லாது தங்கி விட்டான். ஊருக்குச் சென்ற வாலிபர்களால் கேள்விப்பட்ட கோபாலர் குழாங்களும், ஏனை நகர மாக்களும் வந்து கண்டு ஆச்சரியப்பட்டு வணங்கிச் சென்றார்கள். முதலில் பகவானைக் கண்ட சிறுவன் புதர்களை வெட்டிச் சுத்தப்படுத்தி மண்மேடு திருத்தி பந்தல் போட்டு எந்நேரமும் துளசி முதலியன கொண்டு வந்து ஆராதித்துக் கொண்டு வந்தான்.

பின்பு, அவ்வாலிபனே பூசாரியாய்ப் பூசிக்குந் தொழிலைக் கொண்டான். சுவாமிக்குச் சிறு சாலை கட்டினார்கள். வெளியூர் வாசிகளும் தரிசிக்கச் செல்லலானார்கள். இப்பொழுது ஒருக்கா மலையில் பெருமாளை இக்குலத்தினர் பூசித்து வருவதுபோல அவ்வாலிபன் மரபினரே பூசித்து வந்தார்கள்.

நிற்க, அந்த மலைப்பிரதேசங்களிலுள்ள வேடர்களுக்குத் தலைவன், ஒரு வெண் முயலைக் கண்டு நாய் துரத்தப் பின் தொடர்ந் தான். சங்ககிரி எல்லையில் புகுதவே ஓடிய முயல் திரும்பி நாயை எதிர்த்தது. வேடன் கண்டான். இங்கே ஏதோ விசேஷமிருக்கிறது எனக் கருதி, அவ்வூரைச் சார்ந்த ஒரு சிறு குன்றில் வாச ஸ்தானமாக இருந்தான். ஒரு சிறு கோட்டையுங் கட்டிக் கொண்டு இருந்தான். இக் கோவிலுள்ளார்க்கும் ஊரிலுள்ளார்க்கும் திருடர்களால் பயமில்லாத படிக்குக் காத்தான். இதைப் பழய துருகத்துமலை என்கிறார்கள்.

இந்த மலை குன்றாக வளர்ந்து நான்கு புறமும் பார்க்கத் தெரிவ தாயும், பல வழிகளில் ஏறுதற்கு போதாதாயும் இருந்ததால் , கொங்கு நாட்டு அரசனும், சேரன், சோழன், பாண்டியன், கருநட வேந்தர்கள் தங்கள் பிரதிநிதிகள் இருக்கும் கடி ஸ்தலமாகக் கொண்டு ஒவ்வொரு வரும் அவ்வப்போதுக்கு வேண்டிய வகையாகக் கோட்டைகளைக் கட்டிக் கொண்டு ஆட்சி புரிந்து வந்தார்க்ள். அன்பர்களின் பொருட்டு வல்லவராயப் பெருமாளும், வரதராஜப் பெருமாளும் உண்டாயினர்.

கீழ்மேல் தென்வடல் 2 பர்லாங்கு விஸ்தீர்ணமுள்ள கோட்டை சூழ்ந்த நகரம். இதனுள் சோமேசுரர் சௌந்தர நாயகியம்மன்.

இதன் மேற்கே கோட்டைச் சுவர். அதில் மலைக்குச் செல்லும் வழி. அதை உழிமுகம் என்கிறார்கள். புகுந்து சென்றால் வீரபத்திர சுவாமி கோவில். கடியார வாசல் உட்புகுந்து சென்றால் கோட்டை மாரியம்மன் கோயில். அப்பால் வரதராஜப் பெருமாள் கோயில். 150-142 அடி அகலநிகளமுள்ள பிரகாரம். கிழக்குப் பார்த்த வாயில்



கருங்கல் வேலைப்பாடு உள்ளது. நாச்சியார், ஆண்டாள், கோபால கிருஷ்ண மூர்த்தி, ஆழ்வார், ஆசாரியார் சந்நிதிகளும் இருக்கின்றன. இந்த சந்நிதியில் தான் தக்கை ராமாயணம் அரங்கேறப் பெற்றதாம்.

நெல் களஞ்சியங்கள், நாகவாவி, அமுத சாகரம், அரசடி, சில்லாவி நாயகன் , கொல்ல மாரியம்மன், தாலுகா கச்சேரி, கந்தா சரகச்சேரி, கந்தாசாரச் சேவகர் வீடுகள் 130. இது தவிர, கோட்டையின் ஊர் சூழவும், சர்க்கார் கட்டிடங்கள் மாத்திரம், அசூர் கச்சேரி, தாலுகா கச்சேரி, கொத்தவால் சாவடி, சுங்கச் சாவடி, முசாபர் வில்லைச் சாவடி, துரைமார் பங்களா 2, கர்னல் ஓரன் துரைமார் பங்களா 1, கர்னல் கோல்பில்கீஸ் பங்களாக்கள் 2. மண்ட்ரோல் பங்களா 1. மக்ளோட் பங்களா 1. டாக்டர் துரை பங்களா 1. இஞ்சினியர் இதலிங்கன் பங்களா 1. பெரிய இஞ்சினியர் பங்களா 1. அசிஸ்டண்டு பிட்லிங்கன் பங்களா 1. சின்ன பாபு பங்களா 1. ஷார்ட்டன துரை பங்களா1. சார்ஜண்டு பங்களா 3. கர்ப்பனாவுக்கு வெவிஸ் பங்களா 1 முதலியன இருந்ததாக சாசனங்கள் கிடைத்துள்ளன.

இதைக் கடந்தால் புதுக்கோட்டை வாசல். இதைத்தான் மஹமதிய அரசன் கட்டினது என்பார்கள். இக்கோட்டை மூலைக் கொத்தளங்கள் பல. பெரிய பீரங்கிகளில் திருப்பி வைக்கத் தக்கவாறு அமைக்கப் பட்டுள்ளது. இக்கோட்டை வாசல் புகுந்தவுடன் 100+60+10 விஸ்தீரணமுள்ள நெல்களஞ்சியங்கள் 6 இருக்கின்றன. அடுத்தாற் போலுள்ள மண்டபத்தருகே ஒரு குகை இருக்கிறது. இதனுள் பீர்கயப் என்ற மஹமதிய சித்தர் இருந்த இடம் என்கிறார்கள். இக்குகையின் உள்ளே போனால், கல்மதம் உற்பத்தியாகிறது. மருந்துக்கு மெத்த உபயோகமானதென்று எடுக்கிறார்கள். பழக்கமுள்ளாரே உட்புகுந்து எடுக்க வேண்டுமாம்.

இதற்கு ஐதர் அலிகான் கி.பி.1721 -ல் ஒரு தானம் செய்த சாசனம் இது:-

விசு வைகாசி மாதம் சுத்த திதிய ஸ்ரீமது சகல குல சம்பன்னரான ரங்கம்யரவர்களுக்கு, அயிதரல்லிகான் பஹதரவர்கள் சலாம்.

இப்பவும் சங்ககிரியிலிருக்கும் பீர்கைபு சாஹேபு அவர் தற்காவுக்கு சங்ககிரியில் காடு 20 வள்ளம். வேம்பனேரி சமுத்திரத்தில் விரை வரி கண்டகம் இரண்டு கண்டக சகிதமாய் விவரித்து நாலு மூலைக்கும் சிலை பிரதிஷ்டை செய்வித்து மாகூம் சாய்பு அவாலத்து செய்வித்து என்னெண்ணைக்கும் சர்வ மானியமாக ஆசந்திரார்க்கமாய் நடப்பித்துக் கொண்டு வரவும்.

இப்படிக்கு

காகு மொகர் செய்யப்பட்டிருக்கிறது.

மேற்கண்ட குகையைகௌண்டனிய முனிவர் குகையெனவும் சொல்கிறார்கள். இதற்கு மேல் ரோகல திட்டி வாசல் ஆறாவது கோட்டை. இதற்கு மேல் ஏழாவது கோட்டை. இதற்குப் பூவல் திட்டி வாசல் என்பர். இடி விழுந்தாங் குன்று. எட்டாவது கோட்டை வாசல் என்பர். இங்கே கஜமுக மண்டபம் இருக்கிறது. இக்கோட்டைக்குள் மருந்துக் களஞ்சியமும் ஒன்று இருக்கிறது. 30+15+11. ஈஸ்டிண்டியா கம்பெனியாரால் கட்டப்பட்டது. இங்கே பாராமஹால் மண்டபம் (12 நாடு) இதைக் கடந்தால் ஈஸ்டு இந்தியா கம்பெனியார் கட்டிய 9-வது கோட்டை வாசல் 1799-ல் கட்டியது. இக்கோட்டைக்குள் விடாயாற்று மண்டபம். பூங்காவனம் (காஜா ராவுத்தர் ஆபீசர் வீடுகள், பாழிகள் 2, கொடி மண்டபம் 1. பாரா மஹால் மண்டபம் 6 இருந்தனவாம். மேர் திட்டி வாசல் அப்பால் 10 - வது கோட்டை மைசூரார் கோட்டை எனப் பெயர். ராமலட்சுமண தீர்த்தம் கரைமேல் வீர அனுமன் கோயில். துர்கை கோயில்.இதற்கு வடமேற்குப் பாகம் மாஞ்சுனை தண்ணீர் ருசி. தேகத்திற்கு மிகுந்த நலம். அப்பால் ராம களஞ்சியம், லட்சுமண களஞ்சியம், சீதா களஞ்சியம் எனப் பெயர் கொண்ட நெற் களஞ்சியங்கள் 3 , 150 - 30 தனித்தனி அகல நிகளமுள்ளது. நெய், நல்லெண்ணெய், விளக்கெண்ணெய்க் களஞ்சியங்கள் மூன்றிருக் கின்றன. அப்பால் ஐவர் படுக்கை. கிழக்கு நோக்கினால், 1-6-5 கட்டிடம் மேல் பாவுகல் போட்டு 1 1/4 அடி சதுர வாய் உள்ளது. உள்ளே ஆழமாகவும் இருக்கிறது. கொடிய ராஜத்துரோகிகளை இதனுள்ளிறக்கித் தொங்கவிட்டு மூடிவிடுவதாம். (கொலைக்களம்) அதற்கு அருகே கொடிக்கம்ப மண்டபம். இதற்குத் தென் திசைகளில் ராஜ மாளிகை இடிந்து போயிற்று. இருந்த குறிகள் தெரிகிறது. இதற்குச் சற்று கிழக்குத் தெற்குத் திரும்பினால் தஸ்நீகர் கோயில். இங்கே மகமதியர் அடிக்கடி சென்று தொழுது பாத்தியா கொடுக்கி றார்கள்.

அப்பால் சென்னகேசவப் பெருமாள் கோவில். 36-க்கு 34-க்கு நீகள அகலமுள்ளது. 8 - அடி அகலத்தில் முன் மண்டபமுண்டு. கட்டினவர்கள் தெரியவில்லை. ஆனால், இக்கோயிலின் பின் பாதையில் கன்னட எழுத்தில் ஸ்வஸ்திஸ்ரீ சகாப்தம் 1670 என்றிருக்கிறது. உள்ளே சுவாமி மூலவர், உற்சவர், உபய நாச்சியார்கள், ஆழ்வார், ஆசாரியார் விக்கிரகங்களிருக்கிறது. சித்திரை மாதத்தில் உத்ஸவம்.

திருமலை நாயக்கர் ஆட்சியில் வல்லவரான ஒரு தளவாய் ராமப்பய்யர் என ஒரு சமர்த்தர் இருந்தார். அவர் சங்ககிரிக்கு வந்தார். அப்பொழுது குறுநில மன்னர்கள், பாளயப்பட்டுகள், பட்டக்காரர்கள், மிட்டாதரர்கள், முதலானவர்கள், சர்க்கார் நிகுதி செலுத்தாது ஏமாற்றிக் கொண்டும், கேட்டால் வீண் சாக்குப்போக்குச் சொல்லிக் கொண்டும், மறைந்துக் கொண்டும், எதிர்த்துக் கலகம் செய்து



வந்தார்கள். அவர்களையெல்லாம் சேரத்திரட்டி இச்சங்ககிரிக் கோட்டைக்குக் கொண்டு வந்து இறை செய்தார். அக்காலத்துச் சிலநாள் சங்ககிரிக் கோட்டையிலிருக்க வேண்டி இருந்தது. தாராபுரம் கோட்டை முதலியன எல்லாம் இதுபோல மலைக் கோட்டை அன்று. மண் கோட்டையாகும். அப்போதைய எதிரிகளால் தாக்குதற்கு ஏற்றதன்று. அப்பொழுது தளவாய் ராமப்பய்யருக்கு உடம்பு நோயுற்றது. சென்னகேசவசுவாமிக்கு ஒரு மண்டலத் தினங்களுக்கு சகஸ்திர நாமார்சனை செய்ய வேண்டுமென்று பிராமண ஜோசியர்கள் சொன்னார்கள். தினப்படி பிராமண சமாராதனை ஆக வேண்டுமென்றும் சொன்னார்கள். பூசகன் கோனாரானதால் அர்ச்சனை தெரியாது என்றார்கள். வல்லனான வைஷ்ணவப் பிராமணன் செய்யட்டும் அர்ச்சக பாத்தியத்தை கோனார் எடுத்துக் கொள்ளட்டும் என்றார்கள். அவ்வாறே நடத்துங்கள் என்றார் தளவாய். மிகு விமரிசையாக வேத முழக்கத்துடன் நடந்தது.

அக்காலத்தில்தான் இந்த தளவாய் அவர்கள் பழனி பண்டாரங்களின் பூஜையை ஒதுக்கி ஆதி சைவ குருக்கள் பூஜை ஏற்படுத்தினது. இங்கே மண்டல பூஜை முடிந்தவுடனே தளவாய் அவர்களை பார்ப்பனக் கோஷ்டியார் மிகுந்த பணிவுடன் வணங்கி, " சுவாமி! ஒரு மண்டல காலமாக வேதோந்தமாக எத்தனையோ வேதபாரகர்களால் பூஜிக்கப்பட்டிருக்கிற இந்தப் பெருமாள் இனிமேலும் பிராமண பூஜையே நடந்தேறி வருமாறு தங்கள் அருமையான திருவாக்குப் பிறக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அப்படிச்செய்யலாம் இதுவரை பூசித்து வந்தவனுக்கு வேறெ ஒன்று செய்ய வேண்டுமே என்று பூசாரிக் கோனாரைக் கூப்பிடுங்கள் என்றனர். வந்து வணங்கினான். " கோனாரே! பெருமாள் உன் பேரில் கிருபை கொண்டு உனக்கு கோவிந்தப்பட்டம் கொடுக்கும்படி அனுக்கிரகித்திருக்கிறார். இந்தக்கடி ஸ்தலப் பட்டக்காரன் என இது முதல், கோவிந்தப் பட்டம் கொடுத்திருக்கிறோம். இனி உங்கள் ஜாதியாருக்கும் பல பட்டரையருக்கும் இந்தக் கடிப் பட்டகாரனாக நியமித்திருக்கிறோம் என்றனர். அது முதல் தென்கலை வைஷ்ணவ பூஜையாக இருந்தது. அதற்கு அடையாளமாக தூண்கள், மண்டபங்களில் தென்கலை நாமம் வெட்டப்பட்டிருக்கிறது.

சிற்றம்பல நாயனார் பூர்வாசாரியர். ஸ்ரீசோமேசுர சுவாமி ஆலயத்துக்குக் குருக்கள் கருமாபுரம் இம்முடி சிற்றம்பல நாயனார். இவர் தளவாய் ராமப்பய்யரவர்கள் சங்ககிரி கோட்டைக்கு விஜயம் செய்திருந்தபொழுது தளவாயர்களைக் காணும் பொருட்டாக சகல மேளவாத்தியங்களுடனேயும் கோயில் அதிகாரிகள் சிப்பந்தி

களுடனேயும், கட்டியக்காரன் வெள்ளித்தடி கொண்டு ஜனங்களை விலக்கித் தட்டுகளில் தேங்காய், பழம், புஷ்பமாதிரி சாவதங்களைத் தாங்கி வருவார் நெருங்கிவர தளவாயவர்கள் உத்திரவின் பேரில் உட்புகுந்தனர். இவர் ஆசாரியார் இலட்சணமாக விபூதியணிந்து உருத்திராக்ஷங்கள் முறைப்படிக்குச் சிரமாலை, உரமாலை, காமாலை, கௌரி சங்கர உருத்திராக்ஷங்களும் விளங்க ஆறுகட்டி காதில் அசைய சிறந்த சைவப்பழமாக முன் சென்றனர். இவரது சைவப் பொலிவைக் கண்டு சந்தோஷித்து இருக்கை ஈந்து குசலம் வினவி கோவில் விஷயங்களை வினவினர். சமீபத்திலுள்ளவர்கள், சமீபித்து மூன்று நாழிகை தூரத்துக் கருமாபுரம் என்னும் ஊர் இவரது மடம். இந்நாட்டுக் கவுண்டர்கள் இம்மடத்துச் சிஷ்யர்கள். இந்த மடத்துக்குப் பூர்வ மடம் இடைப்பாடிக்குச் சமீபத்துத் தில்லைச் சிற்றம்பல நாயனார் மடம் என்பதினின்று பிரிந்தது இவர்கள் மடம். கடி ஸ்தலத்துக்கு ஆதி சைவ மடாதிபதி இவர்கள். கிராமந்திரங்களில் நடக்கக்கூடிய கோவில் பிரதிஷ்டை சாந்தி சம்புரோணங்களெல்லாம் இவர்களாலேயே அல்லது இவர்கள் வகை சாதகர்களாலே தான் நடக்க வேண்டியது என்கிறார்கள். அப்படியா சந்தோஷம் என்று கூறி கொண்டு வந்த தேவ பிரசாதங்களைப் பெற்றுக் கொண்டனர். ஆசாரிய திருவுருவம் லட்சணமாக இருக்கிறது என்று ஜோடி சால்வை உதவி, இம்முடி என்ற பட்டம் கொடுத்தோம். இன்று முதல் இம்முடிச் சிற்றம்பல நாயனார் என்று வழங்கி வருக என்று அனுப்பினார்.

## சங்ககிரி தாமிர சாசனம்

9 தகடுகள் அதிக நீளம் 12Inch. ஏறக்குறைய அகலம் 8 இஞ்சு முதல் 5 1/2 தகடுகளில் சமஸ்கிருத ஸ்லோகங்கள் (126), 2 1/2 தகடுகளிலும் இப்போதைய கன்னட பாஷையில் கிராமங்களின் எல்லையும், சமஸ்கிருத பாட்டுக்களிலுள்ள முக்கிய விஷயங்களும் உள்கடைசி தகட்டில் தானஞ் செய்யும்போது சொல்லுகிற பாட்டுகள் இருக்கின்றன.

சங்ககிரி துர்க்க வில்க்ஸ் சொல்லுகிறதும், பெரிய சர்வே படத்திலும், டான்டன் கஜட்டில் சொல்லப்படுகிறதுமான இதற்கு வடகிழக்கேயுள்ள தாழையூர், மாங்குட்டிபட்டி என்கிற இரண்டு கிராமங்களையும் மைசூர் ராஜாவான கிருஷ்ண ராஜா தான் எட்டுப் பெண்களை கல்யாணம் செய்து கொண்டபோது முப்பத்திரண்டு பிராமணர்களுக்குத் தானஞ் செய்ததைப் பற்றி அத்தாமர சாசனம் சொல்லுகிறது. அதில் சாலி வாகன சகாப்தம் 1639 வருஷம் அ1வனி மாதம் கிருஷ்ண பட்சம் செவ்வாய்க்கிழமை (அக்டோபர் கி.பி.1717) என்று தேதி போட்டு (ஏர் விளம்பி என்றும் போடப் பட்டிருக்கிறது).



இதைத் தானஞ் செய்தவன் 1714 - 1731 வருஷம் வரையிலும் ஆண்ட தாதா கிருஷ்ண ராஜா (வில்க்ஸ் I 226-230 of the 1810 idisron ரயிஸினுடைய மைசூர் கஜடியர் I 240 சேலஞ் ஜில்லா சிக்கதேவ ராஜாவால் ஜெயிக்கப்பட்டு ராஜியத்தோடு சேர்க்கப்பட்டு கிருஷ்ண ராஜா பட்டத்திற்கு வந்தபோது அவனுக்குக் கீழ் 12 வருஷம் இருந்தது. இந்த அக்கிரஹாரம் ஏற்பட்டதற்குக் காரணம் ராஜதந்திரமும் ஒன்றாய் இருக்கும்.

முதல் 6 சுலோகங்களும், அரசனுடைய குல கோத்திரங்களும், மகிமைகளும் இருக்கிறபடியால் அவைகளை விட்டு விட்டு சங்ககிரியைப் பற்றிச் சொல்லுகிற 62 வது சுலோகங்களிலிருந்து ஆரம்பிப்போம்.

62. ஸ்ரீகிருஷ்ண ராஜா அநேக தானங்களைச் செய்துகொண்டு அக்கிரகாரம் ஒன்று உண்டாக்க எண்ணங் கொண்டார்.

63. இந்த மஹாராஜா பூஜிதரான கர்னாடக சக்கிரவர்த்தி தன்னுடைய இராஜியத்தில் நல்லசிதோஷ்ண ஸ்திதியுள்ளதும், வளப்பம் பொருந்தியதும், புண்ணிய ஸ்தலங்களைப் பொருக்கி அவைகளில் மேன்மையானதை இந்தத் தானத்திற்கு வைத்திருக்கிறார்.

64. அந்த ஸ்தலமானது தேவாதி தேவனுடை ஸ்ரீரங்க பட்டணத்திற்கு தென் கிழக்கேயுள்ள மேற்கு ரங்கம்.

65. அந்த நாடு தனதான்ய மிகுந்த கொங்கு நாடு. பெருக்கமானத காவிரி நதிக்கு இரண்டு யோஜனை தூரத்திலும்

66. ஒன்பது யோஜனை தூரத்தில் சிரங்கத்திற்கு வடமேற்கில் ஒரு புண்ணிய ஸ்தலமிருக்கிறது.

67. இங்கே குன்னத்தூர் என்று சொல்லப்பட்டு ஸ்ரீ சங்ககிரி துர்க்கம் என்னும் கோட்டை இருக்கிறது. இதன் கிழக்கு மதிலுக்குக் கிழக்கே விஜயா இருக்கிறது.

68. மலைக்கு அடிவாரத்தில் கபர்தி (Kapardin) என்கிற சோமநாதர் கோயில் ஒன்று இருக்கிறது. அந்தக் கோயிலுக்கு மேற்கே ஷாருகின் என்கிற கடவுள்.

69. வல்லபைராஜா என்னும் பெயருடன எழுந் தருளியிருக்கிறார். இந்தக் கோயிலுக்கு வடவண்டையில் இரட்டை வரிசை வீடுள்ள பிராமண அக்கிரஹாரம் கட்டினான்.

70. ஒவ்வொரு வீடுகளுக்கு முன்னால் முற்றம் 40 அடி அகலம், 120 அடி நீளம் உள்ளது.

71. முப்பத்திரண்டு பாகங்களுக்கும் தனித்தனி வீடு கட்டினான்.

72. இப்படியாக தான் நெடுநாள் கோரியிருந்த அக்கிரகாரத்தை குளிக்கிற ராம, லட்சுமண தீர்த்தங்களின் வடகரையில் கட்டினான்.

73. இந்தப் பிராமண குடிகளின் போஷனைக்காக வயல்களும், நந்தவனங்களும் கொடுத்தான்.

74. சங்ககிரிக்குச் சேர்ந்தது எழுகரை நாடு. அதில் பூர்வாணி என்னும் இணை (நாடு) ஜில்லா சேர்ந்தது.

75. வடகிழக்கே 3 கவுயாதிஸ் (7 மயில்) தூரத்தில் மாஞ்சோலைகளையும், நந்தன வனங்களையுமுடைய இரண்டு அழகிய கிராமங்களுண்டு. வரையறுக்க முடியாத நெல்லும், கரும்பும், மற்ற பழங்களும் தானியங்களும் வளரப் பெற்றன.

76. ஒன்று கிருஷ்ணராஜபுரம் என்ற தாழையூர். மற்றொன்று மாங்குட்டிப்பட்டி இக்கிராமங்கள்.

77. வருஷா வருஷம் தனந்தானியம் பழம், எட்டுவித விளைவும் பொருள்களையும் வேண்டிய வரையில் கொடுக்கும்.

78. இராஜா இந்தக் கிராமங்களை 32 பாகங்களாகப் பிரித்து இவைகளைக் கொண்டு அந்தப் பிராமணர்களுக்குச் சாப்பாட்டிற்குக் கொடுத்தான்.

79. இப்படித் தானே ஏற்படுத்திய அக்கிரகாரத்திற்கு அப்பிரதம கிருஷ்ணராஜபுரம் என்று பெயர் வைத்தான். வேத வேதாங்கங்களில் வல்லவர்களாகிய பிராமணர்களைக் குடி ஏற்றினான்.

80. 86 வரை நீண்ட இராஜப்பட்டம்.

87,88. வேதவேதாங்கங்களில் வல்லவர்களும், மத வழக்கங்கள் தெரிந்தவர்களும், சகல சாஸ்திர விற்பன்னரும், சுத்தரும், நற்குடிப் பிறந்தவரும், இல்லறத்தரும், நல்ல பிராமணாச்சாரமுடையரும், சாதுக்களாயுமுள்ள ஸ்ரீ வைஷ்ணவ, மாத்வ, அத்வைத பிராமணர்களைத் தேர்ந்தெடுத்தான்.

89,90. அவர்களுக்கு, இந்த இரண்டு பெரிய அழகிய சன சங்கையுள்ள கிராமங்களாகிய தாழையூரையும், மாங்குட்டி பட்டியையும், 32 (பங்குகளுடன்) குடும்ப போஷனைக்காகக் கொடுத்தான். அவர்களுடைய எல்லைகள். குள்ளர்களுடைய சிலையுடைய குறிக்கல்லுகளால் குறிக்கப்பட்டிருக்கிறது.

91. பாவங்களைப் போக்குகின்ற காவிரி அலைகளால் மோதப்பெற்ற ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருக்கின்ற ரங்கநாதர் ஸ்தலமாகிய இவ்விடத்தில் இந்தத் தானத்தைச் செய்தான்.

92. ஸ்ரீதேவி பூதேவி சமேதராய் சேஷ சயனத்தில் சாய்ந்து கொண்டிருக்கும் ரங்கனாதர்க்கு முன்னால் தானஞ் செய்தான்.



93. தானங் கொடுக்கிற பழக்கப் பிரகாரம் "கடவுளுக்குப் பிரீதியாய் இதைப் பிராமணர்களுக்குக் கொடுக்கிறேன்" என்றான். பிறகு தன்னால் தேர்ந்தெடுக்கப்பட்டு வேறு வேறு குலத்தில் பிறந்தவரும், வேறு வேதங்களையுடையவருமான பிராமணர்களை தன்னையணுகச் செய்து,

94. பட்டுத்தலப்பா, குண்டலங்கள், பட்டு அரை வஸ்திரங்கள், விரல் மோதிரங்கள், பஞ்சு வஸ்திரங்கள், வாசனைகள், பூக்களால் அலங்காரஞ் செய்து,

95,96. கிருஷ்ண ராஜேந்திரன் இந்த இரண்டு பல்வளங்கள் பொருந்திய கிராமங்களை கரங்க முதலியவைகளுடன் கொடுத்தான். கொடுப்பதற்கு முன்னால் இது என்னுடையதல்ல, இது என்னுடையதல்ல , கடவுளையுடைய தானமாகட்டும் என்று தாரை வார்த்துக் கொடுத்தான். இம்மாதிரியாக அரசன் இவ்விரண்டு கிராமங்களும் (32 பாகங்களுடன்) தானஞ் செய்தான்.

பிறகு 125 சுலோகம் முடிய தானம் வாங்கிய பிராமணர்களின் பெயரும், பாட்டன் முப்பாட்டன் பெயரும் குலம் கோத்திரம் வரிசைக்கிரமமாய் எழுதப்பட்டிருக்கிறது.

126. இதில் நாலு எல்லைகளின் வரையறுப்புக்கள் சொல்லப் பட்டிருக்கிறது

இது 138 சுலோகம் வரை.

139. இம்மாதிரியாக 34 கல்லுள்ள குள்ளர்களின் உருவத்துடன் சுற்றிலும் அமைக்கப் பெற்று இவ்விரண்டு கிராமங்களுக்கும் எல்லையாகயிருக்கிறது.

140. இந்த அப்ரிதிம கிருஷ்ணராஜபுரத்தில் குடி ஏறி இருக்கிற முப்பத்திரண்டு பிராமணர்களுக்கும் வரியில்லாத கிராமங்களாக, சூரிய சந்திரர்களுள்ள வரையில், பூமி ஆகாசமிருக்கிற வரையில், தலை முறை தலைமுறையாக, இந்த வயல்களையும், புஞ்சை நிலங்களையும், நந்தவனங்களையும், வீட்டு நிலங்களையும், வீடு கட்டக்கூடிய இடங்களையும், புல்தரைகளையும், மா முதலிய மரங்களையும், குளம், கிணறு, வாய்க்கால், தண்ணீர்த்தரை சாகுபடியாகாத கட்டாந் தரைகளையும், சதுப்பு நிலங்களையும், பிராமணர் வீட்டுக் குட்டிச் சுவர்களையும், சூத்திரர் வீட்டுக் குட்டிச் சுவர்களையும், கைக்கோளர் வீட்டு வரிகளையும், புகையிலை வரிகளையும், புல் வரிகளையும், சுங்க வரிகளையும், விலைபொருள் வரிகளையும், கிராம ஆள் வரிகளையும், கலப்பை வரிகளையும், ஆடு வரிகளையும், மதக் குற்றங்களையும், கோயில் வரவுகளையும்,

அரசனுக்குச் சேர வேண்டியவைகளையும், மற்றும் தானிய வரிகளை யும், இன்னுமுள்ள கிராம வரிகளையும், விளைவு வரிகளையும், கால வரிகளும் வாங்கவும், இன்னும் இதர சொந்தங்களையும், மேல் சொன்ன கல்லுகளால் சூழப் பெற்ற இரண்டு கிராமங்களில் இராசன் கொடுத்தான்.

இந்த முப்பத்திரண்டு பாகங்களையும் இவர்கள் அனுபவித்துக் கொண்டு வருகிறவரை, எல்லா வரிகளும், கிராம நாலுபக்க எல்லை களுள் இருக்கப்பட்ட சுதந்திரங்களையும், நிலங்களுக்குச் சேர்ந்த சுரங்கங்கள், புதையல்கள், தண்ணீர், கல் மரம், இனிவரப் போகும் லாபங்கள், இருக்கிற லாபம், எதிர்பாராத லாபம் முதலிய எட்டு உரிமைகளும், இவைகளுடன் இந்த கிராமங்களில் இருக்கிற உரிமைகளும், நியாயமாய் எழுகிற உரிமைகளும், எல்லாம் இந்த முப்பத்திரண்டு பங்குக்காரர்களும் எப்பொதும் அனுபவிப்பார்களாக.

142. இந்தத் தேதியிலிருந்து இந்த முப்பத்திரண்டு பாகங்களும் சொந்தக்காரர்கள் இஷ்டப் பிரகாரம் கொதவு வைக்கலாம், விற்கலாம், தானஞ் செய்யலாம்.

143. சூரி சந்திரன் இருக்கிற வரையில் தன்னால் ஏற்படுத்தப் பட்ட அந்த பிராமண அக்கிரகாரம் யாதொரு தீர்வைக்கும் உட்படாத தாய் இருக்கட்டுமென்று சொல்லி, வேறு வேறு வம்சத்திலும் வேதத் திலும் பிறந்த இந்த கிராமத்தில் குடிஏறின 32 பங்குக்களர்களுக்கும் அர்க்கியம் வார்த்து இந்த 32 நிலச் சொந்தக்காரர்களும் தங்களுடைய வம்சத்தார்களாகிய பிள்ளை, பேரன்கள் எல்லாம் சந்திர சூரியர் உள்ளவரையில் தாழையூர், ...ங்குட்டிபட்டி கிராமங்களிலுள்ள மேற் சொன்ன சகல உரிமைகளையும் உடையவர்களாய் வாழட்டுமென்று, அப்பிரதம நரபதி வீர ஸ்ரீகிருஷ்ண ராஜா (மைசூர் உடையார்) இந்த பூதானத்தை தாமரத் தகடுகளில் எழுதச் செய்து, தன்னுடைய சொந்தக் கையினால் கையெழுத்துமிட்டு, தன்னடைய பூதேவி காட்டுப் பன்றியுமுடைய சீலும் வைத்தார்.

144-154 வரை ஓப்படிப்பட்ட காலங்களில் பாடப்பட்ட பாட்டுகள் (சங்கிரியின் உயரம் 2345 அடி)

கன்னடத்தில் ஸ்ரீ கிருஷ்ணராஜா கையெழுத்து.

இவ்வூர்க் கோட்டையில் ஆயர்குலத்தில் எம்பெருமான் என்னம் பெயர் கொண்ட ஒரு கல்விமான் தோன்றினர். அவர் இங்குள்ள அரசர் கச்சேரியில் உத்தியோகத்திலமர்ந்தார். அவரை மதுரைக்கு மாற்றினார் கள். அங்கே கல்வியையும் பெருக்கிக் கொண்டு வேந்தன் மகிழுமாறு நடந்து வேதனமும் அதிகம் பெற்றார். அழகர் கோவிலில் தன் குலத்துக்கேற்ற பெண்ணை மணந்தார். அப்பெண் வித்வ மணி.



இலக்கிய இலக்கணமும் வடமொழிப் பயிற்சியும் அத்துவித உணர்ச்சியும் கொண்டவர் என்பதுதாரமங்கலம் கட்டி முதலியார் மனைவியார் சின்னம்மாளவர்களும் இந்த அம்மாளும் சேர்ந்து கண்ணொளி, கதிரொளி என ஒரு அத்துவித நூலியற்றியதாகத் தெரிகிறது. பவானி சங்கமேசுர ஆலயத்து, அந்த அம்மாளின் சிலாசாசனம் இருக்கிறது. எம்பெருமான் கவிராயரின் மனைவியார் பெயர் பூங்கோதையார். இப்பூங்கோதையார் திருச்செங்கோட்டுக் குறவஞ்சி என்னும் பிரபந்தமும் கூறியுள்ளார்.

புலவர் பெருமானைப் பார்க்கச் சில வித்வான்கள் அவர் மனையை யணுகினர். கவிராயர் வெளியிற் சென்றிருந்தனராதலின் வந்தோர் சல்லாபஞ் செய்து கொண்டிருந்தனர். அவற்றுட் பெண்கள் எவ்வளவு கற்றுணர்ந்தவர்களாயினும் முதிர்ந்த அறிவு பெறாதவர்கள் என்ப தாய்ப் பெண்மக்களை இழித்துப் பேசினார். இதனை அம்மனையு ளிருந்து கேள்வியுற்ற இந்நங்கையார் பொறாராய் ஒரு வெண்பா எழுதிய சிறு சீட்டை ஒரு சிறுமிவசமனுப்பினார்.

' அறிவி விளைஞரே ஆண்மக்கண் மாதர்
அறிவின் முதிஞரே யாவர் - அறிகரியோ
தான் கண்ட சூலறிவர் தந்தைய ராண்மக்கள்
தான் கொண்ட சூலறியார் தான் என்பது,

இதனை வாசித்து வியப்புற்று ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துப் பேச நாணங் கொண்டு திகைத்து இருந்தனர். சென்று வந்த பக்தர் பாடியார் இவரை வரவேற்று நல்வரவு கூறிப் பேசிக் கொண்டிருக்கும்பொழுது சீட்டைப் புலவர்கள் காட்டினார்கள். முறுவலித்து ஆண் மக்களை இழித்துக் கூறலாமோ என மனைவியை வினவினர். அந்நங்கையார் மனையுள்ளிருந்தே ஐய, இகழவில்லையே. ஆன்மாவானது நீர்த்துளி வழி பூமியிற் சேர்ந்து உணவு வழியாகப் புருஷ கற்பத்துத் தங்கிப் பெண்ணின் கருப்பையுற்றுக் கற்பமுற்றிச் சிசு பிறக்கிறது, என்பதை உபநிஷதம் முதலிய பேராதரவு காட்டி நிலைநாட்டினர். ஆதலால் பெண்கள் தாங்கள் கருக்கொண்டதை அறிந்து கொள்வது போல ஆண்மக்கள், தாங்கள் கருப்பமுற்றதை தெரிந்திலர் என்று தானே கூறினன் என்றனர்.

சங்ககிரி நகரத்துக்கு அடுத்தாற்போல ஒரு ஊர் கட்டி வெங்கட நாயக்கன்பாளையம் எனப் பெயரிட்டவன் மகன் சென்னராய பிள்ளை. இவன் பெயர்தான் மலைமேல் சென்னராயப் பெருமாள் கோவில் முன்கதவில் எழுதப்பட்டிருக்கிறது. இவன் சங்ககிரி யிலிருந்த வல்லபராயப் பெருமாளை 1811ல் வெங்கடநாயக்கன் பாளையத்தில் பிரதிஷ்டித்தான். 1803ல் மங்கலம், பருத்திப்பள்ளி,

கொண்ணையாறு, பாண்ட மங்கலம், மிட்டாக்களை உடையவனானான். லார்டு கிளைவால் கொடுக்கப் பெற்ற மிட்டா. 1803ல் நரசயப்பரென்பவர் கிஸ்தி செலுத்தாமையால் ஏலமான சங்ககிரி மிட்டாவை இவன் எடுத்தான். அந்த ஐந்து மிட்டாக்களும் 1820ல் சர்க்கார் தாக்கலாய் விட்டது. அவர் மகன் பூமடந்தை அப்பீலில் சங்ககிரி ஜுஙி 1836ல் திருப்பிக் கொடுக்கப்பட்டது. ஷெயாள் பேரன் ராமசாமி பிள்ளை சங்ககிரி மிட்டா ஒரு பகுதியை கைலாசக் கவுண்டருக்கு விற்றார்.

மேற்குறித்த வெங்கடாசலம் பிள்ளை பாலமேட்டில் கொண்ணையாற்றில் சில தர்மங்கள் செய்திருக்கிறான். அதை ஆங்கு ஆங்கு காண்க.குடி தண்ணீருக்கு பால் பாவித் தண்ணீர் விசேஷம். செல்லாண்டியம்மன் கோயில் நாகர் பாவிக்கரையிலிருக்கிறது. சித்திரை மாதம் திருவிழா. சைவ வேளாளன் பூஜை. கோட்டை மாரியம்மன் இடையர்கள் மாரியம்மனுக்கும் இவனே பூஜை. அங்காளம்மன் சிவராத்திரியில் விசேஷம். காளப்பநாயக்கன்பட்டி பவிஜரவுத்துகள் பேர் குடிகள்.

வெகு நாளாக ரோமன் கதோலிக் சர்ச் ஒன்று இருக்கிறது. இதற்கு வண்ணார்கள் வருகிறார்கள். புரோட்டஸ்டாண்டு சர்ச்க இருக்கிறது. எலிமெண்ரி பாடசாலை, பெண்கள் பாடசாலை முசாபர் பங்களாவும் இருக்கிறது. பரம்பரையாக ஆந்திர சாஸ்திர வைத்தியர் பிரசித்தமாக இருக்கிறார்கள்.

சென்னகேசவப் பெருமாள் கோவிலில் சமீப வருஷங்களில் இருமுறை திருடன் புகுந்து பிடுங்கிவிட்டான். ஆனால் அந்தத் திருடன் பெருமாளிடத்து மிகுந்த பக்தியுள்ளவன். மணல் கொண்டு போய்ப் பரப்பி பட்டுப்பரிவட்டம் விரித்து பிபத்துக்கு எவ்விதக் கெடுதலும் இன்றி வைத்துப் போயிருக்கிறான். ஒருமுறை சங்ககிரி மிட்டாதாரராக இருந்த எஸ்.எம். சுப்பராயக் கவுண்டர் அஷ்ட பந்தனம் சாத்தி வைத்தார். அதே சமயத்தில் கோனார் தெரு மாரியம்மனுக்கு திருச்செங்கோடு தி.அ.முத்துசாமிக் கோனார் கலசம் வைத்து சம்புரோட்சணம் செய்தார். ஸ்ரீ சோமேசுரருக்கு ஏதேனும் விசேஷக் கைங்கரியம் செய்வதாக முயற்சி நடந்தால் பெருமாளைப் பிடுங்கி விடுகிற செயல் நடப்பதால் அர்ச்சகா செயல் இது என்று நினைக்க இடமிருக்கிறது என்கிறார்கள்.

சங்ககிரி மிட்டாதாரர் கைலாசக் கவுண்டர் ஸ்ரீசோமேசுரர் கோயிலின் முன் பெரிய மண்டபம் கட்டினதாகச் சொல்கிறார்கள். அதற்கு இருபுறம் அடைப்புச் சுவர் 15 வருஷத்திற்கு முன் திருச்செங் கோடு தி.அ.முத்துசாமிக் கோனார் சோமேசுரர் ஸ்தூபியும், சௌந்தர வல்லியம்மன் ஸ்தூபியும் செய்தார்.



அவ்வாலயத்திற்குச் சுப்பிரமணியருக்குக் கருங்கல்லில் கோயிலும் ஸ்தூபியும் சங்ககிரி கரு.அம்மணி என்னும் தாஸி நீலாயதாட்சி புதிதாகச் செய்வித்துள்ளாள்.

சென்னகேசவப் பெருமாளுக்கு மேளவாத்திய முதலியனவும், வேறு, சோமேசுரர் முதலிய தேவஸ்தானத்தது தான் வர வேண்டும். திருச்செங்கோட்டிற்கு ஏகதேசம் வருஷத்தில் 3000 ரூபாய்க்கு அதிகம் உபயம் வருகிறது. உத்சவத்தில் தேவஸ்தானத்துக்கு வரவு உண்டு. சங்ககிரிக்கு ஒரு பத்துரூபாய்கூட வரவு உண்டு என்று சொல்வதற்கில்லையே. சென்னகேசவப் பெருமாள் தேவஸ்தானத்திற்குத் தஸ்திகு வெகு சொற்பம். இதற்கு உத்ஸவம் முடிவுறும் வரை நெய் தீவட்டி பிடிக்க வேண்டுமாம். சிவாலயத்துப் பணத்தை எடுக்கக்கூடாதென்று டிரஸ்டியார் தி.அ. முத்துசாமிக் கோனார் ஆட்சேபித்தார். இதனாலே அவர்மேல் பிடுங்கித் தின்னிகளுக்கு வருத்தம். ஆனால் போர்டுக்கு எழுதி அந்தந்த தேவஸ்தானத்துப் பணத்தை அது அதற்கே செலவிட வேண்டுமென்று எண்டோன்மெண்டு போர்டு உத்தரவிட்டிருக்கிறார்கள். மற்றொரு சமயத்தில் தான் சிவாலய டிரஸ்டியாக இருக்கும் பொழுது மேற்குறித்த மாரியம்மன் கோயிலில் விக்னேசுரப் பிரதிஷ்டை ஒன்று செய்வித்தார். வருஷம் பூஜைக்கு உள்ள பணத்தை அதே பூஜகர் இந்த விநாயகனுக்கும் பூஜை செய்ய வேண்டுமென்று திட்டம் செய்தார். இவ்வூர் மலை உயரம் 2345 அடி.

ஒரு ஆச்சரியமான மகத்துவம். பலபட்டரை அல்லாக் கோயிலுக்கு அருகில் உத்தமியான ஒரு மஹமதிய சர்தார் மனைவி இறந்து போக, சமாதி செய்தார்கள். அதற்கு அழகிய கட்டிடம் உண்டு. பலர் அங்கு சென்று பாத்தியாக் கொடுத்து வணங்குதலுமுண்டு. முறை செய்து கொண்ட காரியம் சித்தியாகும். அத்துடன், ஏழைகளானவர்கள் நாளை கலியாணம் இன்ன இன்ன நகைகள் வேண்டுமென்று மாலை போய்க் கேட்டால் அப்படியே தருகிறேன் நாளை வாவென மறுமொழி கோயிலுள்ளிருந்து பிறக்கும். அதிகாலையில் போனால், கேட்ட நகைகளெல்லாம் வாசற்படிக் கதவருகில் வைத்திருக்கும். வணங்கி எடுத்துக் கொண்டு வந்து கலியாணம் தீர்ந்தவுடன் போய்...... பீபீ என்றால் ஏன் என்ற சப்தம் தோன்றும். வாங்கிப் போன நகைகளை வைத்து வணங்கிப் போய் வருகிறேன் எனககூறி விட்டு மறுபடியும் வணங்கி வருவார்கள். இப்படிப் பல காலம் நடந்து வந்தது. யாரே ஒருவர் வாங்கிப் போன நகைகளைக் கொடாது வைத்துக் கொண்டனர்கள். அது முதல் கூப்பிட்டால், கேட்பதில்லை. நகைகளும் கொடுப்பதில்லையாம். இது சுமார் 70 வருஷங்களுக்கு முன்னும் நடந்தது. பார்த்தவர்கள் இருக்கிறார்கள்.

# திருச்செங்கோடு

திருச்செங்கோடு அழகிய சிகப்பான மலை என்பது பொருள். செங்குன்றூர் என்றால் சிவந்த மலையையுடைய ஊர் என்பதாம். நாக மலை என்றால் பாம்பு போன்ற மலை என்றாம். ஒரு காலத்தில் ஆதிசேஷன் தான் வலியோன் என்றான். வாயுதேவன் தான் வலியோன் என்றான். நாகராஜன் தான் ஆயிரம் சிரமுள்ள பாரிய படத்தை விரித்து மேருமலையை மூடிக் கொண்டான். வாயு தன் பாலுள்ள பலத்தைக் கொண்டு மிகுவலுவற வீசியும் படத்தை நகர்த்த முடியவில்லை. தேவர்கள் வேண்ட ஒரு இழை புகுதுமாறு படத்தை சேஷன் தூக்கினான். வாயு வலுவுறத் தாக்கவே ஆதிசேஷனுடைய ஒரு முடியும் மேருவின் மூன்று சிகரங்களும் பெயர்க்கப்பட்டன. அவற்றுள் ஒரு சிகரமும் சேஷன் சிரமும் கீழ்கரைப் பூந்துறை நாட்டில் விழுந்தது. துண்டு பட்டு வருங்கால் ஒன்றுடன் ஒன்று உறாய்ந்ததால் சேஷனது இரத்தம் சிகரத்தில் தங்கியதால் சிவப்புற்றது. கீழ்ப்புறம் இரு நாகபடம் போல இரண்டு உயர்ந்தும் நிருதி மூலையாக பாம்பு உடல் போலச் சிறுத்து ஓடிப் பாம்பு போல விழுந்து கிடக்கிறது. கீழ்ப் புறம் சமுத்திர மட்டத்துக்கு மேல் 800 அடி உயர்ந்துள்ள சிகரத்துக்கு வரடிகல் என்று பெயர். அதில் பாண்டீசுரர் கோவிலிருக்கிறது. அதற்கடுத்த வரடிகல், மோகனிகஜம் என்ற இரண்டு குன்றுகளுண்டு. இவற்றைத் தான் பிள்ளை வேண்டினோர் சுற்றுவது. அந்த வரடி கல்லின் வடஅருகு பலபனை ஆழமுள்ளது. தவறினால் கீழே வந்துதான் விழ வேண்டுவது.

இந்த வரடிகல்லைப் பார்த்தால்:-

அங்கோட் டகலல்கு லாயிழையா ணம்மோடு
செங்கோடு பாய்துமே என்றாண்மற் றங்கோட்டின்
மேற்காண மின்மையால் மேவா தொழிந்தாளே
காற்கானோய் காட்டிக் கலுழ்ந்து.

இந்த நாலடி வெண்பா வாசித்தோர்க்கு ஞாபகம் வரும்.

இச்சிகரத்தின்மேல் பால் இதற்குத் தாழ்ந்தது மற்றொரு சிகரம். அதற்கு பஞ்சபாண்டவர் கிடை என்பார்கள். இப்பாம்பு போன்ற மலையின் முதுகின (நடுவில) ஸ்ரீ அர்த்தநாரீசுரர் ஆலயம்.

ஸ்ரீ அர்த்த நாரீசுரர் என்பது. ( அர்த்தம் - பாதி, நாரி - தேவி, ஈசுரர் - சிவபெருமான்) பாதி மங்கைக் கடவுள். மங்கை பாதியன்.

பூர்வம் கைலாயத்தில் சபா மண்டபத்தில் உமா தேவியாரோடு சிவபெருமான் வீற்றிருந்தருளினார். மூவர்களும், தேவர்களும், அம்மனையும் அப்பரையும் வணங்கிச் சென்றனர். பிருங்கி என்ற ரிஷி மாத்திரம் சுவாமியை மாத்திரம் பிரதக்ஷணம் செய்து வணங்கிச்



சென்றனன். இதைப் பார்வதி தேவியார் கவனித்தனர். மறுநாள் சுவாமியோடு நெருங்கி அணைத்திருந்தனர். பிருங்கி நோக்கி, ஒரு வண்டுருக் கொண்டு, இருவர் தழுவி இருப்பினும் இருவர் கழுத்தின் பாகம் சந்து படுமாதலின் அந்த வழியே பறந்து புகுந்து சுவாமியை வணங்கினன். தேவியார், ஏ! பிருங்கி ரிஷியே, என்னை அவமதித் தனை யன்றோ? உன் உடம்பிலுள்ள எனது கூறினை விட்டு விடு, எனக் கூறியவுடன் பிருங்கி தேகத்திலுள்ள மாமிசம் முதலியன கழன்று விழுந்து விட்டது. இறைச்சிப் பிடிப்பு இல்லாமையால் விழச் சாய்ந்த னன். சுவாமி கருணை கூர்ந்து மற்றொரு காலும், தண்டும் ஈந்தருளி னர். முக்கால் முனிவராக நின்றனன். சிவசக்தி சம்பந்தத்தைப் போதித்தனர். பிருங்கிக்கு அந்தப் பேத எண்ணம் மாறிற்று.

பின்னர் தேவியார் நாம் வேறாக இருந்தமையாலன்றோ ஒரு ரிஷியும் அவமதிக்க நேர்ந்தது எனச்சிந்தித்து, கேதாரத்தும், காசி யினும், காஞ்சியினும், அருணையினும் தவம் நோற்றுப்பின் நாகா சலத்துத் தேவதீர்த்தத்துக் கேதார விரதம் தொடங்கி இருபத் தோராயிரம் ஆண்டு தவம் புரிந்தனர். புரட்டாசி மாதம் அபாபட்சச் சதுர்த்தசி யன்று சுவாமி எழுந்தருளி தமது இடப் பாகத்தை வழங்கினர். அம்மனும், சுவாமியும், இடப்புறம் அம்மன் வடிவாயும், வலப்புறம் சுவாமி வடிவாயும் ஒருருவானார்கள். தண்டாயுதத்தைத் துடையில் ஊன்றி அத்தண்டின் துணைப்பாகத்தின் மேல் மூன்று விரல்களை ஊன்றியதான வலப்புறமும், சரி வளையணிந்து துடையில் வைத்துள்ள இடப்புறமாக தேவதீர்த்தத்தின் மீது மேற்குத் திருமுகமாக விளங்குகிறார். இம்மலைக்கும், சுவாமிக்கும் பற்பல சரித்திரங்கள் உண்டு.

அர்த்தநாரீசுரரைத் தரிசிக்கச் செல்லும் முதற்படி வாசலும் அதிலுள்ள விநாயகனும் கொல்ல எல்லன். தெலுங்கில் கொல்ல என்றால் இடையன். பொக்கிஷ கொல்லன் என்பார்கள். பழய காலமுதல், பொக்கிஷம் இம்மரபினர் உட்புக எடுக்க இருப்பது வழக்கம். இவர்களால் கட்டப்பட்டது. அடுத்தாப்போல இவர்களது மடம். நாளும் கொல்லர் மடம் என்றிருக்கிறது. இவர் சேகரத்திலே ஒருவன் முத்தியாலு நாயக்கன் என்றிருந்தனன். அவனால் ஒரு மண்டபமும் , நல்ல தண்ணீர்க் கிணறும் உண்டாக்கப்பட்டது. முத்தியாலு நாயக்கன் மண்டபம், முத்தியாலு நாயக்கன் கிணறு என வழங்குகிறது.

சீறும் பணிமலையைச் சேவிக்க வேஅடியா
ரேறும் படிபதினாறீரானை - சீருடனே
செய்தான் மடமுஞ் சிறந்தகுன்றைக் கொல்ல வெல்ல
னுய்ந்தா னிருந்தா னுகம்.

- திருப்பணி மாலை.

அதன்மேல் 6,7 படி ஏறினால் முதல் மண்டபம் இது:-

சைவசேகரன் நாரமங் கையில்வரு தலத்தான்
தெய்வவேதிய னல்லயன் சிவத்துசர் திலகன்
மைவரும்பணி மலையடி வாரமே சிறக்க
மெய்வரும்பத மண்டப மன்புடன் விதித்தான்.

- திருப்பணி மாலை

குருக்கள் தில்லை சிற்றம்பல நாயனார் வகையினர் கட்டினது என்றுள்ளது.

முதல் மண்டபம் மேலே சென்றால், திருமுடியார் மண்டபம். உத்ஸவ கா லத்தில் மலையினின்றும் சுவாமி இறங்கி வருங்காலத்தில் ஊரினின்று பக்த ஜனங்கள் இம்மண்டபத்துக்கு வந்து தரிசித்து, சுவாமியை அழைப்பது வழக்கம். அதன் மேல் தைலி மண்டபம். உத்சவம் மடிந்து சுவாமி மலைக்கு எழுந்தருளும் காலத்தில் இந்த மண்டபம் வரையில் பக்தர்கள் வந்து சுவாமியை வழியனுப்பித் திரும்புவது. அடுத்தாப்போல நந்தி, அப்பால் நாகர், இது 60 அடி நீளமுள்ளது. ஐந்து தலைப்படத்தில் ஒரு சிவலிங்கமிருக்கிறது. இந்த மலையே இந்த நாகராயும், மலைமேலுள்ள ஈசுரரே இந்த லிங்க சொருபமாயும், முற்கூறிய நந்தியிருக்கும் அணிமலையே மலைரூப சிவபெருமானின் நந்தியாயும், அந்த அணிமலை மேலுள்ள நந்தியே சூட்சும ரூபமாக எடுத்துக்காட்டிய நாக படத்திலுள்ள சிவலிங்கத் திற்கு நந்தியாயும், சிறு உருவமாக நாக மலையையும், சுவாமியையும் அமைக்கப்பட்டுள்ளது. பசுக்கள் நன்றாகப் பால்கொடுக்கும் என்று வெண்ணெய் கொண்டு வந்து இந்த நந்தி மீது அப்புகிறார்கள். பூர்வம் மல்லுடையார் என்பவரால் செய்து வைக்கப் பட்டது. காடுகளில் இரவு பகல் சஞ்சரிக்கும் காலத்தில் பாம்பினால் துன்பம் நேரிடாதிருக் கும்படி கோழி சாவல்களைப் பலியிட்டு கொங்கு நாட்டினர் பொங்கலிட்டு வணங்குகிறார்கள். முக்காலத்தில் மல்ல சமுத்திரம் கணக்கன் திருக்கைவேலப்பிள்ளை மகன் சுப்பிரமணியப் பிள்ளை இதைச் செய்வித்தனன்.

அப்பாற் சென்றால் கைகோளர் மண்டபம். சற்று தூரம் சென்றால் சிங்க மண்டபம். இது மோரூர் நாட்டார்களில் சின்ன வகை யாருடையதாக இருக்கிறது.அடுத்தது அறுபதாம்படி. இது சத்தியப் படி ஐகோர்ட்டுக்குப் போயும் சம்மதப்படாத விவகாரம். இங்கு வந்து சொன்னால் மறு கட்சிக்காரன் விட்டுவிடுகிறான். தேவஸ்தானத் துக்குக் காணிக்கை கொடுத்து மேளத்துடன் வந்த சொல்ல வேண்டும்.



சத்தியப்படி என்னும் அறுபதாம்படியிலுள்ள சுப்பிரமணியரை மெத்த பக்தி சிரத்தையாக மோளைக் கவுண்டன் பாளையம் காட்டு வேட்டுவர்கள் என்னும் கூட்டத்தினர் நேசித்துப் பூசித்து அன்பு பாராட்டுகிறார்கள். இவர்கள் முன்னோர்கள் பிரதிஷ்டித்த கடவுளாம். அதற்கடுத்தது அறுபதாம்படி மண்டபம். அதுவும் மோரூர்க் கண்ண குலத்தார்களுடையது என்றாலும், சில வருஷங்களின் முன் சாணார் களுக்குக் கொடுத்து விட்டார்கள். அதன் மேல் செட்டியாக் கவுண்டன் மண்டபம். அதன் ஒருபகுதி, வள்ளி என்னும் தூர குல மாதுவால் கட்டப்பட்டது. அப்பால் தேவடியாள் மண்டபம். குருவப்ப மணிக்குக் கட்டினது. பாபநாசத்துத் தீர்த்தத்துக் கரைப்பாறையில் மூன்று சிரம், மூன்று கரம், மூன்று பதமுள்ள சுரகண்டீசுர விம்பம் அமைக்கப்பெற்றுள்ளது. விடா ஜுரம் வந்தால், அதனைப் பூசித்து வணங்கினால், நீங்கிப் போகிறதென்று அபிஷேகித்துப் பூ பெய்து தொழுகிறார்கள். இரக்கத்தில் சோகியர் மடம் என்பதனருகே குரட்டின் மீது இந்த பிம்பம் ஒன்று பிரதிட்டிக்கப் பெற்றுள்ளது. அதன் மேல் இளைப்பாற்று மண்டபம். இது மோரூர் நல்லதம்பிக் காங்கேயன் கட்டியது. பெரிய வகையார் கட்டளை நடத்துகிறார்கள். அதற்கு மேலே சென்றால் கோபுர வாசல் மண்டபம். இது ராசிபுரம் விழிய குலத்தார் கட்டளை நடத்துகிறார்கள். அப்பால் திருமதில் கோபுரம். பொதுஜன உபயமாகக் கட்டியது.

ஸ்ரீ அர்த்தநாரீசுரர் உயர்ந்த புருஷா கிருதியாக பால் வண்ணத் திருமேனியாய்ப் பஞ்ச வர்ணப் பிரகாசத்தோடு விளங்குகிறார். திருமேனி சிலையன்று. லோகமன்று. மகத்தான சித்தர்கள் அமைப்பு என்று பெரியோர்கள் கருதுகிறார்கள். சுவாமியின் தென்பாக அருகில் தேவி பூசித்த மரகதலிங்கமென்று பேடகத்துளிருக்கிறது. மேற்குத் திரு முக மண்டலமாதலின் மகாமண்டபத்தினின்றும் மேற்கு வாயி லில்லை. பல கணி வாயிலுண்டு. தென் வாயிலினின்றும் புகுந்து வந்து சுவாமியைத் தரிசித்தல் வேண்டும். மேற்கண்ட பலகணி மூலம் விமானம் சபா மண்டபம், கடலைதின்ற நந்தி மண்டபம், துஜஸ் தம்பம் பலிகுறடு திருமதில் கதவு முதலிய குறுக்கே இருந்தும், வருஷத்தில் மூன்று நாள் பலகணியின் ஒன்பது துவராத்துட் சென்று சூரிய பிம்பம் ஒன்பது ஒளி பாதத்தைத் தொட்டுத் திருமுடி கண்டு மறைகிறது.

வெளி சபா மண்டபம்.மிகுந்த சிற்பவேலை உள்ளது. அம் மண்டபத்தின் மேல் ஒரு கமலம் செதுக்கப்பட்டுள்ளது. மூன்று இதழ் வரிசையுண்டு. அதன் நடு வரிசை யிதழில் கிளிகள் கால் ஊன்றி, உள் முதல் வரிசைப்பூ விதழை மூக்கில் கொத்தி, வெளி வரிசையிதழில் வால் பட அமைக்கப்பட்டுள்ளன. அவ்விதழ்கள் பொருந்திய பூவின் நடுவில் பூ மொட்டு இருக்கிறது. அதன் காம்பு அடியில் ஒரு வளைய

மிருக்கிறது. அது சுற்றினால் சுற்றுகிறது. இப் பூமொட்டு, இதழ் கிளி இவைகளை லோகத்தால் செய்துள்ளதாகவே கருத வேண்டும். அச்சமாக இருக்கிறது. அந்தத் தாமரைப்பூ வட்டத்தைச் சுற்றி ஒரு நாற்சதுரம் காட்டி அதன் நான்கு மூலைகளிலும் மன் மதனும், மற்ற பாகங்களில் ரதி மதன் சேனை மாதர்களுமாக கரும்பு வில் புஷ்ப பாணத்துடனும் செய்துள்ளது. இங்கே பல கற்சங்கலிகள் தொங்கு கின்றன. சித்திர கண்டச் சிங்கந் தாங்கிய உத்திர மேல் வரிசையில் ஸ்காந்தக் கதைகள் செதுக்கப்பட்டிருக்கின்றன.

இந்த மண்டபத்தின் தூண்களில் மனைவியர்களுடன் நல்லதம்பிக் காங்கேயன் முதலிய அவர்களது சகோதரர் முதலானோர் மனைவி மார்களுடன்அமைக்கப் பெற்றிருக்கிறது. அவர்களுடைய பெயர்கள் சாசனங்களில் கண்டிருக்கின்றன.

### அர்த்தசிவாம்பிகை ரூபத்தியானம்

சீர் பெற்ற செழுஞ்சடையுந் திருக்குடிலுஞ் செயனுதலுஞ் சிவந்த நோக்குங்
கூர்பெற்றகயல்விழியுங் குழைப்பணியுங் குழைத்தோடுங் குமுதவாயுந்
தார்பெற்ற கதைக்கரமுஞ் சரிக்கரமுந்தடவுரமுந் தனப்பொன்மார்பு
மேர்பெற்றவதட்டுகிலு மிகற்பதமுஞ்சிலம்படியு மிதயஞ் சேர்ப்பாம்.

- புராணம்

### திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் திருக்கூட்டத்தாருடன் எழுந்து அருளிய தேவாரம்

### திருச்சிற்றம்பலம்

வெந்தவெண் ணீறணிந்து விரி நூறிதழ் மார்பினல்ல
பந்தண வும்விரலாளொரு பாகம மர்ந்தருளிக்
கொந்தணவும்பொழில்சூழ் கொடி மாடச் செங் குன்றூர்நின்ற
வந்தணனைத் தொழுவா ரவலமறுப்பாரே.
அலை மலிதண்புனல்சூழ்ந் தழகார்புகலிந் நகர்பேணுந்
தலைமகனாகி நின்ற தமிழ்ஞான சம்பந்தன்
கொலைமலி மூவிலை யான்கொடி மாடச்செங் குன்றூரேத்து
நலமலி பாடல் வல்லார் வினையான நாசமே



### குமாரர் ரூபத்தியானம்

குஞ்சிமுடிச்சிகை மகரகுண்டலமு நகைமுகமுங் குளிர்ந்த நோக்குந்
தஞ்சமெனவேலெடுத்த திருக்கரமுங் குக்குடங்கை தரிசித்தசிரும்,
மஞ்சணிறத்துகிலுடைய மணியணி பொற்பதக்க முத்து மாலை மார்பும்,
செஞ்சரணத் திருவழகுந் திகழரவா சலக்குகனைச் சிந்தை செய்வாம்.

### ஸ்ரீ அருணகிரிநாதர் அடியார்களுடன் வந்து திருக்குமாரரை இருகண்கள் களிப்பநோக்கி ஓதியருளிய கந்தரலங்காரம்

மாலோன் மருகனைமன்றாடி மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெஞ்ஞான தெய்வத்தை மேதினியிற்
சேலார் வயற்பொழிற் செங்கோடனைச் சென்று கண்டு தொழ
நாலாயிரங்கண் படைத்தில னேயந்த நான்முகனே.

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கண் மெய்ம்மைகுன்றா
மொழிக்குத் துணைமுரு காவெனு நாமங்கண் முன்புசெய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலுஞ் செங்கோடன் மயூரமுமே.

### திருப்புகழ்

அன்பாகவந்து நின்றாள் வணங்கி ஐம்பூதமொன்ற நினையாமல்
அன்பால்மிகுந்து நஞ்சாருகஞ்க ளம்போருகங்கள் முலைதானும்
கொத்தேமிகுந்து வண்டாடி நின்று கொண்டாடுகின்ற குழலாரைக்
கொண்டே நினைந்து மன்பேதுமண்டி குன்றுமலைந்து மலைவேனோ

மன்றாடிதந்த மைந்தாமிகுந்த லம்பார்..ம்பை யணிவோனே
வந்தே பணிந்து நின்றார்பவங்க ள்வம்வே தொலைந்த வடிவேலா
சென்றேயிடங்கள் கந்தா எனும் பொசேஞ் சேவல் கொண்டு வரவேணும்
செஞ்சாலிகஞ்ச மொன்றாய் வளர்ந்த செங்கோடமர்ந்த பெருமாளே.

**குமாரர் அர்த்த மண்டபத்தின் மேல் சுவரிலுள்ளது.**

1. ஸ்வஸ்திஸ்ரீ ஸகாப்தம் 1521 மித
2. ன் மெல் செல்லாநின்ற சாற்வரி ஹ
3. சித்திரை மீ கிழ்கரை பூந்துறை னாட்டி

4. ல் மோரூரிலிருக்கும் வெள்ளாழக்
5. கண்ணர்களில்த் திருமலைப் யத்தப்
6. ப.நல்லதம்பி காங்கேயன் உபை
7. யம் பெரியாண்டவர் சன்னதி நிறந்ர
8. மண்டபம் அணி ஒட்டிக்கால் எட்டுசித்
9. தரகண்டக்கால் எட்டுயிதுக்குண்டானபா
10. க்கல் தளவிசை உள்படமு கிப்பித்தார் அனெ
11. கதற்மம்.

அர்த்த மண்டபத்தின் தென் சுவரிலுள்ளது

1. ஸ்வஸ்திஸ்ரீ ஸகாப்தம் 1546 யிதி
2. ன் மெல் சொல்லா நின்ற விப ஹ
3. சித்திரை மீ கீழ்கரைப் பூந்துறைனா
4. ட்டில் மோரூரிலிருக்கும் வெள்ளா
5. ழகண்ணர்களில்த் திருமலை யத்த
6. ப்ப நல்லதம்பி காங்கையன் குமார
7. அத்தப்ப இம்முடி நல்லதம்பி
8. காங்கையன் தம்பி குமார சுவாமி காங்கையன்
9. உபயம் நாரிகணபதியார் மகாமண்டபமும் இதுக்
10. கு தெற்கு வாசல் சுதவும் விலாச மண்டபமும் சிங்க
11. க்கால் முருத்தாண்ட வத்தூனுடன் பன்னிர
12. ண்டு சித்திரகண்டக்கால் எட்டும் பாக்கல்தள
13. விசைஉடன் முகிப்பித்தான் சொல்லு நால்தன்ம
14. த்திநால் அரிச்சந்திரன் போல் இருந்தான.

சுப்பிரமணியர் கோயிலின் அர்த்த மண்டபத்தின்
வடசுவரிலுள்ளது

1. ஸ்வஸ்திஸ்ரீ ஸகாப்தம் 1541 வி
2. தின் மேல் செல்லாநின்ற சித்
3. தாற்தி வரு. சித்திரை மீ கீழ்கரைப்
4. பூந்துறை னாட்டில் மோரூரிலிருக்கு
5. ம் வெள்ளாழக்கண்ணர்களில் தி
6. ருமலை யத்தப்ப நல்லதம்பி காங்
7. கையன் குமார அத்தப்ப இம்முடி



8. நல்லதம்பி காங்கையர் க(வு)ண்
9. ட( ந் உ) பையம் குமார சுவாமியார் (மகா)ம
10. ண்டபமும் இதுக்(கு) வடபுறம் சிறந்த பத்தி
11. பெரியாண்டவர் சன்னிதி கூட சிங்கக்கால்
12. குதிரைக்கால் 22 சக்கரகண்டக்கால்
12 இதுக்குண்டான பாக்கல் தளவி
13. சை உள்பட முகிப்பித்தான் புண்ணியத்தி
னால் அன்னதான சொமனெனயிருந்

ஸ்வஸ்திஸ்ரீ சகாப்தம் 1550 இதன்மேற் சொல்லி
நின்ற சுக்கில வைகாசி மாதம் கீழ்கரைப் பூந்துறை
நாட்டில் மோரூரிலிருக்கும் வேளாளர்கண்ணர்
குலத்தில் திருமலை அத்தப்ப நல்லதம்பிக் காங்
கேய குமாரசாமிக் காங்கேய கவுண்டன் உபயம்.

விமானம் : - ஆதி கூர்மம் அஷ்ட நாகம், அஷ்ட கஜம், அஷ்ட வித்தியேசுரர் முதலிய தேவர்கள் விளங்கும் பீடத்தில் நான்கு தூண்களின் மீது விமான தேவதைகள் சிறந்து இருக்க நல்ல மரவேலைப் பாடாகச் செய்யப்பெற்று, அதனுள்ளே பெட்டியாய் வில் யந்திரம் வைக்கப்பட்டிருக்கிறது. இதன் சிறு துவரத்தினுள்ளே பத்திர புஷ்பங்களைக் கொட்டி யந்திரத்துக் கட்டியுள்ள கயற்றை அசைத்தால், உள்ளமைத்துள்ள யந்திர சத்தியால் மேலுள்ள துவாரத்தின் வழியாக ஒவ்வொரு பத்திர புஷ்பங்கள் விழும். அது விடாயாற்று உத்சவத்தன்று அங்கு எழுந்தருளிய சுவாமி மீது விழும். அப்பொழுது அர்ச்சனை சொல்வார். விமானத்தினின்றும் பத்திர புஷ்பங்கள் விழுதலை நோக்கி அன்பர்கள் சந்தோஷப்படுவார்கள்.

திருக் கோயிலுக்குக் கிழக்கே குப்பண பரதேசி குகை:- கொடி யேற்றத்தன்று சுவாமி அங்கு எழுந்தருளுவார். அங்கு குப்பணப் பரதேசி என்ற துறவி இருந்தார். மிகுந்த பக்திமான். தெய்வ அருள் பெற்றவர். பல திருத்தொண்டு செய்து கொண்டிருந்தார். அன்னம் அருந்துவதில்லை. சப்பராயா என்ற வயோதிக பிராமணர் சாவடி கட்டி உத்சவம் நாககிரி பண்டிதர் வழியாக நடத்தி வந்தார். பின்னர் வட்டூர் செங்குன்னி குலத்தார் மண்டபம் கட்டி விழாவை நடத்துகிறார்கள்.

இவர் பசுக்களை வளர்த்துப் பால் கொண்டு அதனை அபிஷேக காலத்திற்கு ஸ்வாமி அபிஷேகத்திற்கும் நந்தவனம் வைத்துப்

புஷ்பங்களை மூன்று காலத்திற்கும் சுவாமிக்கு அர்ப்பணப் செய்து கொண்டும் வந்தனர். நோயுற்ற அன்பர்கள் வந்து தங்கள் குறைப் பாட்டைக் கூறினால் இத்தனை தினம் ஆலயவலம் வந்தால் நீங்கி விடும் என்றவாறு செய்தால் நீங்கிவிடுமாம். டி.எஸ். வெங்கட ரமணய்யர் வைதிகர் மண்டபம் கட்டி விழா நடத்துகிறார். குமாரர் கோவில் கூட உள்ள அணிபொட்டி மண்டபம் மோரூர் நல்லதம்பிக் காங்கேயன் கட்டினது. ஸ்ரீகுமாரர் கோவில் சபாமண்டபம் இருப்புலி இளையாக் கவண்டன் கட்டினது. இதுவும் சுவாமி கோவில் மண்டபம் போலவே சிற்ப வேலைகள் மேலே கமலம், கிளி, கற்சங்கிலிக ளிருக் கின்றன. இந்த மண்டபத்தில் ஒரு தூணில் 10-கைகளுடன் உயரமாக வீரபத்திரர் தக்கனை மல்லாற்றுப் போட்டு மேலே நின்று சூலாயுதத்தில் வலுக்கொண்டு குற்றும் கோப சொரூபமாக இருக்கிறது. அந்த சூலம் தலையில் ஊடுருவி அதன் நுனி சிறிது தெரிவதாகவும் தோற்றுகிறது. வியப்பு, சடையில் இருக்கும் பாம்பு, தேள் வேலைப்பாடு மிகு நுட்பமும் வனப்புமாக விளங்குகிறது. மற்றொரு தூணில் வேட்டையாடிய பட்சிகளைக் கோர்த்துத் தொங்கப் பிடித்திருப்பது, குறத்தி அழகாகப் பின்னிய மூங்கிற் கூடையை ஒரு முழங்கை ஒள்ளிட்டு இடுக்கி ஒயிலாக நிற்கிறது, இவைகளெல்லாம் திரிபங்கமான அங்க இலட்சணத்துடன் அமைந்திருப்பது சிற்ப நுட்பம் தெரிந்தவர்கள் மிக வியக்கத் தக்கனவாகும். இம்மண்டபதிலிருக்கும் ஸ்ரீகுமாரர் சந்நதி துவார பாலகர் நல்ல சிற்ப வேலை. அந்தத் துவாரபாலகர் மார்பிலுள்ள மணி வடங்களின், ஒவ்வொரு மணியும் இடையினும் ஈர்க்கு விட்டால் நுழைந்து செல்லுமாறு நுட்பமான வேலை செய்யப் பட்டுள்ளது. லண்டன் சிறு ஊசிதான் செல்லும். நல்ல கட்டி, செங்கோடன் என்னும் நகரத்துச் செட்டிகள் செய்வித்தது. நாரி கணபதி மண்டபம், தாண்டவ பத்திரை விலாச ஊர்த்துவ தாண்டவ மூர்த்திக்கு எதிராக பத்திரகாளி நடனம் செய்வது ஆனதால் இப்பெயர் கொண்டது. இவைகள் மோரூர் குமாரசாமிக் காங்கேயன் கட்டினது. அதில் ஒரு தூணில் டொப்பி வைத்துக் கொண்டு உலாவல் சிறுதடி ஊன்றிக் கொண்டு பே விஸ் நிற்கிறார். இவர் கி.பி. 1823-ல் சேலம் ஆக்டிங் கலெக்டராக இருந்தவர். இந்தத் தூறும் மற்றொன்றுமாக இரண்டு தூண்கள் மேலே எழுதப்பட்ட உத்திரப்பாக்கல்வராதபடி போட்டிருக் கிறான். இத்துரை சேலம் சிவன் கோயிலில் ஒரு மண்டபம் கட்டியுள்ளான்.

ஸ்ரீ நாகேசுரர் கோவில், சுற்றிலும் சிறிய சிறிய பிரதமைகள் செதுக்கியது. பரமத்திக்கடுத்த வடகரையாற்றூரிருந்த இம்முடி இளையா நாயக்கன் என்னும் வேட்டுவர் தலைவனால் கட்டப்



பட்டது. இவன் வட கரையாற்றூரினின்று பிரியும் ராஜ வாய்க்கால் இவனாற் செய்யப்பட்டது. மைசூர் நஞ்சையன் கொள்ளை கொண்டு போன சுவாமி பொருளை மீட்டுக் கொணர்ந்த உபகாரி. அடுத்தாற் போல் ஸ்ரீ ஆதிகேசவர் கோயில். இந்த ஆலயத்தின் மேற்கு சற்று தூரத்தில் கார்த்திகையில் கூம்பு வைக்கும் இடம். அதனால் கூம்பு வாரை என்பார்கள். இந்த மலையில் கணபதி தீர்த்தம், தேவ தீர்த்தம் உள்பட நாற்பது தீர்த்தங்கள் சரித்திரமுள்ளவைகளாக இருக்கின்றன.

மேலே காட்டிய சத்தியப்படி சுப்பிரமணியர் மீது திருப்புகழ்

அத்த வேட்கை பற்றி நோக்கத்
தத்தை மார்க்குத் தமராயன்
பற்ற கூட்டத் திற்ப ராக்குற்
றச்சு தோட்பற் றியவோடும்
சித்த மீட்டுப் பொய்த்த வாழ்க்கைச்
சிக்கை நீக்கித் தணிதாய
சித்ரவாக்குப்பெற்று வாழ்த்திச்
செச்சை சாத்தப் பெறுவேனோ

கொத்து நூற்றுப் பத்து நாட்டக்
கொற்ற வேத்துக் கரசாய
குக்கு டாத்தச் சர்ப்ப கோத்ரக்
கொற்ற வேற்கைக் குமரேசா
தத்வ நாற்பத்தெட்டு நாற்பத்
தெட்டு மேற்றுத் திடமேவும்
தர்க்க சாத்ரத் தக்க மார்க்கச்
சத்ய வாக்யப் பெருமாளே.

கவிராஜ பண்டிதர் என்னம் பெரியாரால் செய்யுளில் இத்தல புராணம் சொல்லப்பட்டுசிற்றம்பலக் கவிராயரால் உரை எழுதப்பட்டு அச்சிடப்பட்டிருக்கிறது. தி.அ.முத்துசாமிக் கோனாரால் திருச்செங் கோடு மான்மியம் என உரை நூலெழுதி அச்சிடப்பட்டிருக்கிறது.

ஊரின் நடுவில் அழகிய கோபுரமுள்ள ஆலயமிருக்கிறது. சுவாமி ஸ்ரீ கைலாசநாதர், பரிமளவல்லி, இப்போதுள்ள சுவாமி கோயில் நகரத்துச் செட்டிகளாலும், மோரூர் நல்லதம்பிக் காங்கேயனால் அம்மன் கோயிலும் கட்டப்பட்டது. திருமுன்னுள்ள கிணற்றுக்கு நந்தி கூபம் என்று பெயர். கிணற்றின் மேல் வேலைத் திறமாக நந்தி

ஒன்று செய்துள்ளது. அதன் உரத்தில் வழிவிட்டிருக்கிறது. அதன் வழி இறங்கி தண்ணீர் கொண்டு வருகிறார்கள். இதனால் இப்பெயர் கொண்டது. கோபுரத்தின் முன் கல்லால் ஒரு தீபஸ்தபமிருக்கிறது. 31 பட்டை தீர்ந்து 60 அடி உயரமுள்ளது. அமரகோணி நகரத்துச் செட்டி களில் அர்த்தனாரி செட்டி என்பவன் செய்வித்தது. இதை எடுத்து நிறுத்தின சரித்திரம் சிறந்தது.

இவ்வூரின் தெற்கில் மலை காவலர் கோயில். இம்மலைக்கு வருபவர்களெல்லாம் அங்கு சென்று தரிசிப்பார்கள். அர்த்தநாரீசுவர் கோயிலைக் கொள்ளையடித்து அழிக்கச் சில துடுக்கான துலுக்கர்கள் வந்தார்கள். முத்தணன், ஓவணன், ரங்கணன் என மூவர்கள் வடதேசத்தினர் தங்கியிருந்தார்கள். மனம்பொறாது துலுக்கர்களுடன் எதிர்த்துத் துரத்தினர். ஓடும்பொழுது அம்மூவரையும் வெட்டி விட்டார்கள். அர்த்நாரீசுவரர் அனுக்கிரகத்தால் தெய்வசக்தியடைந்து விளங்குகிறார்கள். அசுவபதி ராயர், கஜபதி ராயர் எனக் கொண்டாடப் பெறுகிறது. விஜயநகர அரச சம்பந்தமான அசுவபதி, கஜபதி ராய அரசர்களாக இருக்க வேண்டுமெனச் சில குறிகளால் தோற்றுகிறது. வங்கிய சூடாமணி பாண்டியனை, விக்கிரம சோழன் சேனைகளோடு எதிர்த்தான். பாண்டியன் முறையிட சோமசுந்தரக் கடவுள் ஒரு வேடராசனாக பாண்டிய சேனாதிபதி வந்தார். அப்போரில்,

கயபதிகாய் சின நாபதி பாய் துரகதபதி யே முதலா
மயமிகு தோள் வடதிசை யினராதிபர் வலிகெழுசேனையினோ
டியமிடியேறி மிழிசையென வாய்விட விரதமதேறிநடா அய்ப்
பயன்மலி காவிரி நதியருகே யுறைபதி கொடுமேயினனால்.

என திருவிளையாடற் புராணம் சுந்தரப் பேரம் பெய்த படலத்திற் கூறப்படுகிறது. கயபதி ராயருக்கு ஓரத்தில் ஒரு சிறு சமாது இருக்கிறது. அதை பங்கடு சுல்தான் என மகமதியர் கொண்டாடு கிறார்கள். யோக ஞானியாம். அழிக்க வந்தவர்களாக இருக்க வேண்டும். நரபதியென்பவர்தான் தட்டான் குட்டையில் கோயில் கட்டிக் கொண்டிருப்பது எனச் சொல்கிறார்கள். கொங்கு நாட்டினுள்ளும் வெளியினும் கருப்பு, பேய், பிசாசு, சூனியம் முதலிய துன்பமுற்றோர் இங்கு வந்தால் நீங்கிவிடுகிறது. பிசாசு பிடித்தவர்கள் வந்தால் ஓடுகிறேன் என்று சொல்லி ஓடுகிறது. வரக்கூடாதவர்களுக்கு விபூதியும், பிசாசுகளின் உபத்திரவமுள்ள இடத்திற்குச் சீட்டும் கொடுக்கிறார்கள். ஆனால் பூசாரிகளுக்குக் கட்டுக் காணிக்கை கொடுக்க வேண்டும். இந்தத் தெய்வத்தின் பெயர் சொன்னால் வெள்ளாட்டுக் கடாக்கள் அதிக உயரம் வளர்ந்து விடுகிறது என்கிறார்கள்.



## இன்னதென விளங்காத சாசனம்

ஸ்வஸ்திஸ்ரீ கோராஜ கெஸரி மன்மற் குயாண்டுபதி
னாலாவது இவ்வாண்டு திருச்செங்கோடுத் திருவாதி
ரைக்கணப் பெருமக்கள் கையில்லி செங்கோனடி
கள் தேவியார் முரிகாமக்கணார் ஏகவிரதிவாரேதேவரே
சார்த்திவைத்த செம்பொன்கா செட்டாங்கல்லால இ
ருபதின் கழஞ்சு இப்பொன்னின் பலசை கொண்டு
திருவாதிரை தோறுந்திங்களிருபது பிராமணரை சந்
திராதித்தவல் ஊட்டுவதாக என்னுந்திருவாதிரைகக
ணபெருமக்களோம். (11)

## சோழன் பரகேசரி வன்மன் காலத்தது

ஸ்வஸ்திஸ்ரீ (11) கோப்பர கெசரிபன்மக்கு செல்லா
நின்றயாண்டு இருபத்தெட்டாவது இவ்வாண்டு திருச்
செங்கோடு திருமலைமேல் துவாதசிக்கும் திருவாதிரை
திருவோணத்துக்குமாக சந்திராதித்யவல் ஊட்டுவதாக நர்த்தன
வச்ச செம்பொன் முக்கழஞ்சு இப்பொன் ப்பலிநெசய்(வெ)கொண்(டு)
(இர) கலம் ஊட்டுவோமானாம் மன்று கணப்பெருமக்களெர(ம்)
பெருமக்கள்ரக்ஷை.

## நாகர் குன்று கல்லின் மேல் பக்கமுள்ளது

1. ஸ்வஸ்திஸ்ரீ கோவிராஜ கேசரிபன்மக்கு திருவெழுதிட்டு
ச் செல்லாநி
2. ன்ற மாண்டு பதினாறாவது இவ்வாண்டு திருச்செங்கோட்டு
பன்னிரண்
3. டு நாட்டுப் பெருமக்கள் கையஇல் இனங்கொனடிகள்
தெவியார் மு.சு.....
4. ர் அமுதனாா திருச்செங்கோட்டு ஆள்வார்க்கு ஒரு
நொந்தா விளக்கொன்று எரி
5. ப்பதாக வைத்த செம்பொன் செட்டாங்கல்லால்
பதினெங்கழஞ்சு இப்போ
6. ன்னின் பலிகை கொண்டு --திராதித்தவல் நொந்தா விளக்கு
--ரிப்பதாக என்றோம்.

முன்னாளில் தருமங்களை நடத்துதற்கென்றே பெரியோர்கள் சேர்ந்த சபைகளிருந்தன. அந்தக் கூட்டத்தைச் சார்ந்தவர்களுக்கு கணப்பெருமக்கள் எனப் பெயர். அதுவும் பிரிவுகளாகத் தெரிகிறது. திருவாதிரை நடத்துபவர்களை திருவாதிரை கணப்பெருமக்கள் என்றும், துவாதசி நடத்துபவர்களை துவாதசி கணப்பெருமக்கள் என்றும், அந்தக் காரியத்தின் பெயரால் சபை ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. அந்த அந்த சபையில் சேரும் பணத்தை வட்டிக்குக் கொடுத்து அந்த லாபத்தைக் குறித்த தருமம் நடத்தப் பெறும். பாராமஹால் என்று சொல்வதை பன்னிரண்டு நாடு என்று சாசனத்தால் தெரிகிறது.

நாகர் குண்டுக்கு மேல் பக்கத்திலுள்ளது

கோவிராஜ கேசரி வன்மற்கு யாண்டு பதின்மூன்றாவது திருச்செங்கோட்டு பன்னிரண்டு நாட்டு.... மக்கள் கோயிலிலிளங்க கோவடிகள் தேவியார் மக்கனூர் திருவெகாதசிக் கணத்து குடுத்தச் செம்பொன் க.செட்டி.... கல்லால் இருபதின் கழஞ்சு இப்பொன்னின் பலிசைக் கொண்டு, சந்திராதித்தவல் திருவேகாதசி தோறும் இருபது, பிராமணரை யூட்டுவதாக ... திருவேகா... க்கணப் பெருமக்களோம்.

டி இடத்திலுள்ளது

ஸ்வஸ்திஸ்ரீ கொப்பரகேசரி பன்மர்கு செல்லாநின்ற யாண்டு, பன்னிரண்டாவது திருச்செங்கோட்டு சோணாட்டுப் பெரும... இ...ட்டிலிருக்கும் உத்தமன் கணவதி வைத்த பொன் இருபத்திறு கழஞ்சு இப்பொன்னின் பலிசை கொண்டு இறு...ந்த நாழி மாழிசிதிரு.... மடை நாழ் மலையில் சிவ பிராமண போஜனஞ் சந்திராதித்தவல் செய்வதாக என்றோம், சோணாட்டு பெருமக்களில் உத்தமரான கணவதி.

**கிள்ளி என்னும் பழய காலத்துச் சோழர்களில் ஒருவர்.**

தாவும் பணியசலத் தாழ்வரையின் றோணியிலே
மேவும் படிக்கு விதமாகப் - பாவின்ப
வேதமிகு சாத்தனையும் வெள்ளானையு மமைத்தான்
**சோதிமிகு கிள்ளிநற்சோழன் (ஐயனார் கோயில்)**

டி இடத்திலுள்ளது

ஸ்வஸதிஸ்ரீ கொப்பரகேசரி பந்மராகிய ஸ்ரீராஜேந்திர சோழ தேவர்க்கு யாண்டு 18-வது திருச்செங்கோட்டு தேவர்க்கு... உவச்சர்களோம். திருமலை மேல்கோயிலில், தேவர்க்கு திருப்பள்ளி எழுச்சி இவ்வாண்டு முதல் கொண்டு, சந்திராதித்தவரை கொட்டுவதாகக் கொண்டு... துரா... வங்கலது இத்தேவர்.... உடைய உவச்சர்.... பெருவார்த்தரை... நித்துக்கு இடவழிப்ப...ழைஞ்சு வார



ஒழுக்கு நெல் முக்கால்... மாவும் கொண்டு திருப்பள்ளி எழிச்சி கொண்ட ....

இதைக்கூர்ந்து பார்த்தால் இத்தலத்து முற்காலத்து ஆலயங்களில் மேளங் கொட்டுதல் உவச்சர்களாக இருப்பதாய்த் தெரிகிறது. கைக் கோளர் (செங்குந்தர்)கள் என்பார் பிற்காலத்து வந்தவர்களாக இருக்கலாம் போலும்.

குமாரர் கோயில் வடக்கு குமுத வரி

கலியுக (சாலி) சகாப்தம் 1444-ல் விஜய நகரம் ஸ்ரீ கிருஷ்ணதேவ மஹாராயர் கொங்கரன வீர சோழ மண்டலத்து குன்றத்தூர் துர்க்கம் சூழ்ந்த பன்னிரண்டு பற்றும் திரியம்பக உடையார் கீழ்கரைப் பூந்துறை நாட்டில் ஸ்ரீ அர்த்தநாரீசுரமுடைய தம்பிரானாருக்கு உத்தராட நட்சத்திரத்தில் துவஜரரோகணமும் ரேவதி நட்சத்திரத்தில் தெப்பத்திரு நாளும் நடத்தத்தக்கதாக சந்தையிலுண்டான கங்கம் தரகு மகிமை முதலியவைகளைத் தாரை வார்த்துக் கொடுத்ததாக... இந்த தர்மத்தைக் குன்றத்தூர் துர்க்கத்துக்கு வந்த ராஜாக்களும் இத்தானத்துக்கு வந்த அதிகாரிகளும் இந்த நாட்டாண்மைக்காரக் கவுண்டர்களும் நடத்தி வைக்க...

கர்ப்ப கிரகத்தின் சுவரிலுள்ளது

நரஸிம்ஹராய உடையர் காரியத்துக் கடவ மொம்மரச உடையர் கொன வீர சோழ மண்டலத்துக் கீழ்க்கரைப் பூந்துரை நாட்டுத் திருச்செங்கோட்டு திருமலைமேல் எழுந்தருளிய அர்த்தநாரீசு வரனுக்கும் சுப்பிரமணியனுக்கும் தர்ம கானப்ரமாணம் பண்ணிக் கொடுத்த பரிசாவது இந்த நாட்டுச் சூரப்பள்ளியான அகரம் ண்ணாக்கி ...த்தி முன்னாக நான் கெல்லைக்குட்பட்டநஞ் செய்புஞ்மெ னெக்கினமர.

டி இடத்திலுள்ளது

சுபமஸ்து ஸ்ரீசாலிவாகன சகாப்தம் 1580 அன்மேல் செல்லா நின்ற கிலக வருஷம் மாசி மீ 13 ஸ்ரீ மது காசிபர் கோத்திரம் விஸ்வனாத னாயக்கர் திருமலை நாயக்கர் முத்து வீரப்ப னாயக்கர், குமார சொக்கனாத னாயக்கர் திருச்செங்கோடு தானத் தாருக் குவிக்கினாபனம் திருச்செங்கோடு அர்த்தநாரிசர் சுவாமிக்கும் விசுவனாதர்க்கும்.

**கைலாய நாதர் கோபுரத்தின் மேல் பாவுக்கல்லில் உள்ளது**

ஸ்வஸ்திஸ்ரீ சகாப்தம் இதின் மேல் செல்லா நின்ற சொபகிறது வருஷம் ஆவணி மாதம் ஸ்ரீமது விசுவநாத சொக்கலிங்க னாயக்கரய்யவர்கள் ராச்சிய பரிபாலணம் பண்ணுகையில்,

நணிய கையிலாய னாதருக் குப்பூசை

அணிகிளருங் கோபுரமுண்டாக்கிப் - பணிமலை மேல்

காசிவிகவே சருக்குக் கற்கோயிலும் பணித்தான்

றேசருணைச் சேஷாத்திரி

கைலாய நரதர் கோயிலின் நிருத்த மண்டபத்தின் கீழ் சுவற்றிலுள்ளது.

ருதிரோற்காரி வருசம் மாசி 19 ஸ்ரீ சுவாமி கைலாய நாதர் சன்னதி முன் நிற்தத மண்டபம் பெத்து நாயக்கர் குமாரன் எறம செட்டி நாயக்கர் தேவி பங்காரம்மன் கட்டி விச்ச உபயம்

உத்ஸவர் ஸ்ரீ அர்த்தநாரீசுவரர் பிரபையிலுள்ளது

அர்த்தநாரீஸ்வர சுவாமியாயாருக்கு, பூந்துறை நாட்டு கணக்கு. அர்த்தனாரியன் வெலய்யன் குமாரன் பெரி அய்யன் தற்மம் சதாசேவை. அட்சய வருஷம் தை மாதம் 13தேதி.

சண்டிகேசுரர் பீடத்திலுள்ளது

திருச்செங்கோடு விவேகதவாகரன் பத்திராதிபர் தி.அ.முத்துசாமிக் கோனார் சதா சேவை.

கைலாய நாதர் கோயிலிலுள்ளது

காலயுக்தி வருஷம் கார்த்திகை 6 தேதி வட கரை னாட்டில் அந்தியூரிலிருக்கும் நகரந்தனில் வணக்கா கொத்திரத்தில் பாகம் பெரியா செட்டியார் மகன் குமாரவேல் செட்டி அளகை நாச்சியம்மன் கொளமும் குமாரர் கோவிலும் கட்டி விச்சார் அவருடைய உபயம்.

இடைய, செல்லன்

கோதை யழகியம்மை குறடுபலி மண்டபமும்

மாதயவா கச்சமைத்து வைத்தானே - நீதிபுனை

கோபால கிருஷ்ண குலதீப மான செல்ல

பூபாலன் பெற்றான் புகழ் (திருப்)

கோபாலன்

மாபத்திரேத்திட வைகாசி வீதி வடசிறகிற்

கூபத்தருகி லழகாக வேயொரு கோவில் கட்டித்

தாபத்தை மாற்றிடு மாயன்கோ பாலன் றருவனையான்

ஆபத்துக் காத்தவி நாயக னாரையுண் டாக்கினனே. (திருப்)

சிரணியுஞ் செங்கோட்டி லர்த்தநாரீசரிட சித்தமேவ , காரணிக வயிரவனார் சிகரந்தன் புண்ணியமாய்க் கட்டி வைத்தான், தாரணி யெண் குமர மங்கைக் கவுண்டணியன் குழந்தையப்பன்றந்த



மைந்த்ன், வாரணி முன்னூன் மார்பன் பொன்னய்யனிப் புவியின் வாழ்க மாதோ.

செந்தமிழ்சேர் குமரமங்கையானங்கூரும் சித்தளந்தூர்தோகை நந்தந்தோகைபாடி, நந்துலவு மோடமங்கை யணிமூர் தேவணாங் குறிச்சி கோழிக்கால்நத்தந்தானும், முத்துதிருமங்கையுடன் செக்கு நத்தம் முளசைமகாசாத்தபுரஞ் சூரப்பள்ளி, இந்தநகர் பதினாலுஞ் சைலஞ் சூழ ஏரகத்ததார்படித்ர்ரதுக் கீந்ததாமே.

சாலி வாகன சகாப்தம் 1556 ல் அர்த்தநாரீசுர்முடைய தம்பிரா னாலயத்தில் வேதவொலிசிறந்து ஒங்குமாறு மாம்பூண்டியை அக்கிராரமாக அரசனது புண்ணியமென்று தானம் செய்தனன்.

ஆதி சைவர்

கோராஜ கேசரி வன்மரான (முதல்) ராஜ ராஜதேவர் தஞ்சாவூரை ராஜதானியாகக் கொண்டு ஆட்சி புரிந்திருந்தான். தமிழ்நாடு முற்றிலும் ஆண்டதால் மும்முடிச்சோழனெனப்பட்டான். திருமுறை கண்ட சோழனிவனே. குலசேகர சோழனென்னும் பெயருமுடையன். கோயில்கள் சிறப்பாக இருக்க வேண்டுமென்று பிரஹதீசுரர் ஆலயம் கட்டினான். கோயில்களில் பூஜைகள் நன்றாக நடக்க வேண்டுமென்று வடநாட்டிலிருந்து பிராமணரைக் குடியேற்றினான். இக்கொங்கு நாடு இவன் ஆட்சிக்கு உட்பட்ட காலத்தில் ஆகமந் தெரிந்தவர்களில்லை எனக்கண்டு தன்னாட்டுச் சீர்காழியில் ஆலம்பாயன கோத்திரத்துள்ள ஒரு ஆதிசைவ விற்பன்னரை இங்கு கொண்டு வந்து வேண்டுவன உதவி' குலசேகர பட்டர்' எனத் தன் பெயர் கொடுத்து ஸ்தாபித்தான். இந்த சோழன் கி.பி.985 முதல் 1012 வரை ஆண்டனன். கோராஜ கேசரி பன்மரான திரிபுவனச் சக்கிரவர்த்திகள் உடையார் ஸ்ரீராஜேந்திர சோழ தேவர் என்பவர் பேரம்பலம் பொன் வேய்ந்தவர், சீகாழியினின்று காசிப கோத்திரமுள்ள ஒரு ஆதி சைவரைக் கொண்டு வந்து குலோத்துங்கப் பட்டன் எனத் தன் பெயர் கொடுத்து வேண்டுவன உதவி ஸ்தாபித்தனன் திருமடமும். இந்தச் சோழன் 1070 முதல் 1118-9 வரை ஆண்டவன். இச்சோழர்களால் ஸ்தாபிக்கப் பெற்ற குலசேகரபட்டர் வழியில் சுப்பிரமணிய குருக்கள், சதாசிவ குருக்கள், நாககிரி பண்டிதர் என மூவரும், குலோத்துங்கப் பட்டர் வழியில் வேதநாயக குருக்கள், அர்த்தனாரி குருக்கள், சேனாபதி குருக்கள் என மூவருமாக ஆறு குருக்கள் ஆசாரிய புருஷர்களாக இருக்கிறார்கள். இவர்கள் வடமொழி, தென்மொழி வாசிப்பாலும், ஆசார ஒழுக்கங் களாலும், அன்பின் திறத்தாலும் உலகம் மதிக்க வாழ்ந்து வந்தார்கள்.

அவர்களில் அர்த்தனாரி பண்டிதர் வகையில் ஒருவர் இசைத் தமிழ் வல்லுனராய் பகற்பண், இராப்பண், பொதுப்பண், முதலியவற்றின்

பேதங்கள் நன்கு தெரிந்து ஓதவல்லவராயினர். அவருக்கு சம்பளம் கொடுக்கும் நியதி செய்து தேவார நம்பி எனப்பட்டம் கொடுத்தார். அவரே தேவாரம் ஓதற் தொழில் கொண்டு தேவார நம்பி எனப் பெயர் பெற்றனர். இவ்வாறு சில காலம் நடந்து வந்தது.

பின்பு மஹிசூர் அரசனது தளவாயாக மாவை ஆட்கொண்டான் புதல்வன்மாவைக் குமாரசாமி முதலியார் வந்தனர். இவர் வெண்கலக் கிணறு பொத்தனூர், வாங்கல் ஆறு மாநிலம் இன்னும் பல ஸ்ரீ அர்த்த நாரீசுரருக்குக் கட்டளை செய்து நித்நிச னென்பவனுக்கு விவாகம் சிவபூஜைக்குக் கல்கட்டிடம், நந்தவனம், கறவை இரண்டு, பசுவும் கொடுத்து ஓதுவார் சம்பள கொல்லையும் கொடுத்து இன்னும் பல சிறப்புகள் செய்தனர். அதுமுதல் ஓதுவார் என ஒரு ஆசாமி ஏற்பட்டது. மாவைக் குமாரசாமி முதலியார் கல்சாசனமும் உண்டு.

சதாசிவ ராயர் கொங்கு நாடு ஆளுங்காலத்தில் நரசிங்கராமாஞ்சி என்பவருக்கு ஏழு கரை நாட்டதிகாரம் வந்தது. அப்பொழுதுதான் கைலாய நாதர் கோயில் கற்பம், நிறுத்தியது. சதாசிவ குருக்கள் வகையில் ஒருவர் இலக்கண இலக்கியங்கள் நன்கு கற்று ஆசு கவி பாடவும் இருந்தார். இத்தலத்துக்கு திருப்பணி செய்வதை அவர் அவ்வப்பொழுது பாட்டுப்பாடி வரவேண்டியது. அதற்காக தேவஸ் தானத்தில் சம்பளம். ஆலயப்பிரசாதம் கொடுத்து வரவேண்டியது என்றும், ஏழுகரை நாட்டு நம்பி என்ற பட்டமும் கொடுத்து கவுரவித்தார்.

ஆறாந்திருவிழாவன்று சுவாமி கிரிவலமாக வரும்பொழுது கரட்டுப்பாளையத்தருகு செங்கல் மண்டபம் கட்டி அதில் விநாயகப் பிரதிஷ்டையும் முன்போலச் செய்து மண்டப கட்டளையும் நாககிரி பண்டிதர் முன்னோரைப் போல நடத்தினர். மலையில் முன் நவக் கிரகங்களுக்கு குறடு பிரதிஷ்டையும், நாரி கணபதி உத்ஸவரையும் புதிதாகக் கண்டு பிரதிஷ்டையும் செல்லக் குருக்கள் குமாரர் நாகேசுர குருக்கள் செய்தனர்.

இரக்கம் கைலாசநாதர் ஆலயத்தில் தந்தை செய்வித்த குறடு பிரித்துப் புதிதாகச் செய்து நவக்கிரஹம் பிரதிஷ்டை சேனாபதி குருக்கள் செய்தனர்.

ஆறுமுகப் பெருமாள் பிரதிஷ்டை உத்ஸவம் தேர். இந்தக் கோயிலில் ஒரு பூஜனைக் கூடம் உண்டு. அதைச் சேர்ந்த அடியார்கள் தினப்படி ஆறு பைசாவாகத் தாண்டி செலவுபோக மீதியை வட்டிக்குக் கொடுத்துப் பெருக்கி மயில் வாகனத்துடன் ஆறுமுகப் பெருமாளை யும், இரு அம்மனையும் நல்ல சிற்பியைக் கொண்டு வார்த்து பிரதிஷ்டித்து விழா நடத்துகிறார்கள். அந்தக் கோயிலுக்குத் தம்பான்



செட்டியார் என்பவர் தன் கடையை எழுதி வைத்தார். அதன் வாடகையைக் கொண்டு இரதோத்ஸவம், அவர் வெள்ளி மயில் வாகனம் செய்வித்திருக்கிறார். நல்ல பத்திமான். இப்பஜனை அடியார்கள் நல்ல அன்பர்கள்.

## ஓரி சிலை

ஓரி என்பவன் கொல்லிமலைக்கு அரசன். ஆதனோரி வல்விலோரி எனவும் கூறுவர். 'வல்விலோரி கொல்லிக் குடவரை (குறுந்தொகை) இரவலர்க்கு வரையாது கொடுக்கும் வன்மையான், கடையெழு வள்ளலின் ஒருவன். கடையெழுவள்ளலின் மற்றொருவன் காரி திருக் கோவிலூருக்குத் தலைவன். இவ்விருவருக்கும் பெரும்பகை. ஒரு காலத்தே ஒருவரை ஒருவர் துரத்தி வந்தார்கள். அவ்விருவர் படையை யும் பெருமழையால் நிறுத்தி வைத்துசற்று ஓய்ந்து சென்றார்கள். இவ்விரு வள்ளல்களின் பிம்பங்களில் ஒன்று மேற்கு வாசல் முனியப்பன் கோயிலுக்கு மேற்கு அடுத்தாப்போல குதிரையோடு நிற்பதாகும். வைத்தியர் ஜிஹாங்கீர் சாஹேபு கட்டியுள்ள தர்காவுக்கு மேற்கே போகும் சந்தில் அவர் வீட்டு அருகே குதிரையோடு இருப்பது மற்றொன்று. இவற்றைச் சாதாரண மனிதர்கள் குதிரைக்கல் என்கிறார்கள்.

## திருவிழா

வைகாசி மாதத்தில் ஸ்ரீ அர்த்தநாரீசுரர் திருத்தேர்விழா. பூசத்தில் செங்கோட்டு வேலருக்கும் ஸ்ரீ அர்த்தநாரீசுரர்க்கும் கொடியேற்றம். இதன் நான்காம் திருவிழாவன்று ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாளுக்குக் கொடியேற்றம். என்றாலும், சுவாமிக்கு புருஷ சக்தியும் பரிவார தேவதையுமானதால் 3 நாளும் சுவாமி புறப்படும் போதெல்லாம் ஆதிகேசவப் பெருமாள் கூடவே புறப்படும். செங் கோட்டு வேலர் உத்ஸவர் இரக்கத்திலெழுந்தருளி யிருப்பது. யாக சாலையும் இங்கேயே. திருவிழாக் காலை சுவாமி புறப்பட்டு வழி மண்டபம் கட்டளைகள் நடத்திக் கொண்டு மாலை 6 மணிக்கு மேல் திருமுடியான் மண்டபத்துக்கு வந்து சேரும். (திருமுடியான் என்றால் மிருந்த பொறுப்பேற்றவன். அறை காவல், மெய் காவல், திருமேனி காவலான பதவி) அங்கு சென்று அன்பர்களெல்லாம் தரிசித்து சுமார் 10 மணிக்கு சுவாமியை அழைத்து வருவார்கள். இங்கே மூத்த பிள்ளையாராகிய விநாயகரும், இளைய பிள்ளையாராகிய சுப்பிர மணியரும், தத்துப் பிள்ளையாராகிய சண்டிகேசுரருடன் கோயிலி லின்று அன்பர் குழாங்கள் நெருக்கமுறச் சென்று பல நாள் பிரிந்து வரும் மாதா பிதாக்கள் வருதலைக் காணவந்தார் போன்று மூன்று பிள்ளைகளுக்கும், பதினாயிரக்கணக்கான அன்பர் குழாங்கள்

கண்ணிமையாது ஆனந்தம் மேலுற நிற்பார்கள். செல்ல குலத்தார் உடையதான நாலுகால் மண்டபத்துள் சுவாமி எழுந்து வரவே, மூன்று மக்களும் சுவாமியை வலம்புரிந்து எதிரே வந்து நிற்பார்கள். பிரிந்து வந்து நெருங்கிய மக்களைக் கண்டு மகிழ்வுறப் பெரியார் வழங்குதல் போல சுவாமியிடமிருந்து வஸ்திரம், புஷ்பமாலை முதலியன வந்து தரிக்குங்கால் வெகு பணிவுடன் தாழ்ந்து ஏற்றுக் கொள்ளும் எழுச்சி அன்பர்களின் மனமகிழ்ச்சியை உண்டாக்கும். உத்சவங்கள் முடிந்து மலைக்கு சுவாமி செல்லுங்கால் முன்சொன்ன மண்டபத்தின் முன் ஜங்கமர் மண்டபத்தில் சுவாமி புகுந்தவுடன் மேற்கூறிய மூன்று பிள்ளைகளும் மும்முறை வலம் வந்து எதிர் நிற்பார்கள். அப்பொழுது பிரிதல் காரணமாக சுவாமியிடமிருந்து வஸ்திரம் மாலை வருதலை மிகவும் பணிவுடன் தாழ்ந்து ஏற்றுக் கொள்வார்கள். அப்பொழுது ஹரஹர முழக்கமும் கரகோஷமும் எழும்பும். அத்துடனே சுவாமி பிரிகிறார் என்ற வதினாயிரக்கணக்காக நின்றுள்ள அன்புள்ள ஆண், பெண் அடங்கலும் கண்ணீர் வடிப்பார்கள். சுவாமி திருமலையினின்று இறங்கி வரும் காலத்தும், திருமலைக்கு எழுந்தருளுங் காலத்தும் மக்களின் மனதை அம்மையப்பர் ஆகருஷித்துக் கொண்டு மலை ஏறுவர்.இந்த இரண்டு சமயமும் அவசியம் அன்புள்ளவர்கள் காண வேண்டுவது அவசியம். பின்பு சுவாமி பிள்ளைகளும் அன்பர்களும் பொலிவிழந்தவர்களாகத் திரும்புகிறார்கள்.

தைமாதத்தில் கைலாய நாதர் திருத்தேர் விழா நடக்கும் சித்திரை அமாவாசையில் அழகு நாச்சியம்மன் என்னும் பத்திரகாளிக்குக் கொடியேற்றமாய் அமாவாசையிரவில் தேர் நடக்கும்.

சீகாழியில் அவதரித்த திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் பல நாடுகளிற் சென்று தேவாரப் பதிகங்கள் பாடிக் கொண்டு கொங்கு நாட்டிற் காவேரிக்குத் தென் கரையிலுள்ள ஆலயங்களைத் தரிசனஞ் செய்து கொண்டு வட கரையிலுள்ள திருச்செங்கோடு என வழங்குங் கொடி மாடச் செங்குன்றூருக்குக் கெழுந்தருளினர். தேவாரம் பாடி ஸ்ரீ அர்த்தநாரீசுரரைத் தரிசித்துப் பொன்னி நதிக்கு மேல் பாலில் திருநணா முதலிய தல யாத்திரை செய்து கொண்டு மறுபடியுந் திருச்செங் கோட்டுக்கு எழுந்தருளினார். அப்பொழுது பனிப்பருவம் வந்தது. பலநாள் அங்கு வசித்திருந்தமையால் அந்நாட்டில் அக்காலத்து வருந்தும் குளிர் முன்னான சுரம் திருக்கூட்டத்தாரையும் பீடித்தது. அறிந்த ஞான சம்பந்தப் பெருந்தகையார், "அவ்வினைக் கிவ்வினை யாம்" என்ற பதிகத்தைத் தொடங்கி அடியார்களைத் தீண்டப்படா என்று ஆணை வைத்துத் திருநீலகண்டப் பதிகத்தை ஓதியருளினார். உடனே திரக்கூட்டத்தாரை அன்றியே அந்நாட்டிலுமே அந்நோய் நீங்கிவிட்டது. இந்தத் திருநீல கண்டப் பதிகத்தை மந்திரமாக ஓதி



விபூதி பூசினும் நாளும் நளிர் குளிர்சுரம் நீங்கிப்போம் என்பது அன்பர்களின் நம்பிக்கை.

அவ்வினைக்கிவ்வினை யாமென்று சொல்லு மதுவறியீர்
உய்வினை நாடாதிருப்பது முந்தமக் கூனமன்றே
கைவினை செய்தெம் பிரான் கழல் போற்றுது நாமடி யேஞ்
செய்வினை வந்தெமைத் தீண்டப் பெறாதிரு நீலகண்டம்

திருவள்ளுவர், திருக்குறள் என்னும் ஒப்பில்லாத நூலைப்பாடி அரங்கேற்றுதற்கு மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரிடம் கொண்டு போயினர். அவர்கள் கல்விச் செருக்கால் இவரை மதித்து இருப்புக் கொடுக்கவில்லை. இச்சுவடிக்காவது இடங்கொடுத்தல் வேண்டு மென வள்ளுவர் கேட்டனர். ஒப்பினார்கள். குறள் நூலை வைத்தனர். தெய்வீகமான சங்கப் பலகை, அச்சுவடி யளவாகச் சுருங்கி விட்டது. சங்கப் புலவர்கள் இறங்க வேண்டி நேர்ந்தது. வள்ளுவர் பின்பு வாசித்தனர். அதன் அருமை கண்டு வியந்து அச்சங்கப் புலவர்கள் நாற்பத்தொன்பதின்மரும், ஆகாய வாணியும், ஔவை, இடைக்காடர் ஆகிய ஐம்பத்தொருவரும் தனித்தனி ஒவ்வொரு வெண்பாக் கூறினர். அவர்களில் ஒருவரான மதுரைத் தமிழாசிரியர் செங்குன்றூர்க்கிழாரும் ஒரு வெண்பாக் கூறினார். இவைகளெல்லாஞ் சேர்ந்தது திருவள்ளுவ மாலை. இவர்களுள்ளே "புலவர் திருவள்ளுவரன்றிப் பூமேல்" என்னும் வெண்பாக் கூறிய செங்குன்றூர் கிழார் பிறந்தவூர் செங்குன்றூரான திருச் செங்கோடு.

புலவர் திருவள்ளுவரன்றிப் பூமேற்
சிலவர் புலவரெனச் செப்பல் - நிலவு
பிறங்கொளிமா லைக்கும் பெயராகு மற்றுங்
கறங்கிருண்மா லைக்கும் பெயர். - (திருவள்ளுவ மாலை)

பாண்டி நாட்டில் திருக்குருகூரில் பிரதிவாதி பயங்கரன் எனப் பிரபல பண்டிதன் ஒருவன் இருந்தான். அவன் தேச சஞ்சாரஞ் செய்து அங்கு அங்கு உள்ள சமஸ்தானங்களிற் சென்று அவ்விடத்திலுள்ள வித்துவான்களிடத்துத் தர்க்கித்துச் சயங்கொண்டு அப்பபுலவர்கள் பொருள்களையும் நூல்களையும் கொள்ளை கொண்டு வருவான். அவன் திருச்செங்கோட்டு எல்லையில் வந்து தன்முன் பாம்பு வடிவமாகத் தோற்றும் நாகாசலத்தை நோக்கிப் பல்லக்கிலிருந்த படியே,

சமர முகத்திருச் செங்கோடு சர்ப்ப சயிலமென
வமரிற் படம்விரித் தாடாத தென்னை?

என இரண்டாமடியினை முடிக்க இயலாது சிறிது நேரம் மயங்கினான். இதன் முன்னே அந்நகரத்துக்குக் குணசீலன் என்னும் வித்துவான் இந்த பிரதிவாதிபயங்கரன் விடுத்த ஓலையைக் கண்டு பயந்து செங்கோட்டு வேலர் திருவடியைத் துதித்து நித்திரை கொண்டான். கனவில் ஒரு வித்வானாகக் குமரக் கடவுள் தோன்றி அன்பனே! அஞ்சாதே பிரதிவாதி பயங்கரனைப் பயமுறுத்தி ஓட்டி விடுகிறேன் என்ற கூறி மறைந்தனர். அவ்வண்ணமே மாடு மேய்ப்பவனாக பாண்டி நாட்டுக் கவிராயன் முன்னின்று,

அஃதாய்ந்திலையோ

தமரின் குறவள்ளி பங்க னெழுகரை நாட்டு யர்ந்த

குமரன் திருமரு கன்மயில் வாகனங் கொத்துமென்றே.

எனப்பாடி முடித்தனன்.இதனைக் கேட்ட பிரதிவாத பயங்கரன் ஒன்றுந்தோன்றாது திகைப்புற்று பல்லக்கினின்று கீழே இறங்கி நாம் மனத்தினினைத்த கலித்துறையை நிமிஷத்தில் முடிவு செய்தனனே, இவன் தெய்வீக கவிஞனாக இருக்கிறான்; தொழிலோ மாடு மேய்க்குந் தொழிலாக இருக்கிறது. இவன் முகத்தில் சரசுவதி நடனம் புரிகிறாள் எனச் சிந்தித்து அப்பா! உன் வரலாறு என்ன? புகல வேண்டுமென்றனன். கவிஞரே! இத்திருச் செங்கோட்டில் குணசீலன் என்னும் வித்துவானின் கடை மாணாக்கன்.

கண்ட கத்தி பாடுவதில் தாமதமுடையவன் என்றனன். நன்கு கற்ற வித்துவானாக இருந்து, மேய்க்குந் தொழிலை நீர் வகித்த காரணமென்னை? எனவே, புலவரே எல்லா வுலகத்துமுள்ள உயிர் வகைகளில் பசுக்களைப் போன்ற உபகார ஜன்ம முள்ளவை ஒன்று மில்லை. எல்லாத் தேவர்களும், எல்லாப் புண்ணிய நதிகளும் பசுவுரு'ரபில் பொருந்தியுள்ளன. அதன் மலமும் ஜலமும் பரிசுத்தமாக் கத்தக்கது என்பதை அறிந்திருக்கிலீ போலும் எனப் புகன்றனன். இதனைக் கேட்ட பிரதிவாதி பயங்கரன் மனம் நடுங்கி இவனே இவ்வளவு ஆகம சாஸ்தர ஆராய்ச்சியும் நினைவு அறியும் ஆற்றலு முடையவனாயின் இவனது ஆசிரியர் எத்தன்மையாக இருப்பர் என்று பல்லக்கைத் திருப்பிக் கொண்டு போய்விட்டான். இதனை சுவாமி குணசீலனுக்கு அறிவித்தனர். அடங்கா மகிழ்ச்சி யடைந்தனன்.

## வித்துவான்கள்

இவ்வூரில் முற்காலத்திலிருந்த வித்வான்கள், மதுரைத் தமிழாசிரியர் செங்குன்றூர்க்கிழார்.

### எழுகரை நாட்டு நம்பி, சதாசிவ பண்டிதர்

இவர் திருச்செங்கோடு ஆதிசைவரில் ஆலம்பாயன கோத்திரத்தில் தோன்றிய சதாசிவ பண்டிதர் என்பார். தமிழ்மொழி நன்குணர்ந்தவர்.



ஏழுகன்ர நாட்டு நம்பி எனப் பட்டப் பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. இவர் இந்தத் திருப்பணி மாலையைத் தொடங்கப் பாடியிருக்கிறார். திருப்பணி செய்பவர்களுக்கு ஒரு கிளர்ச்சி தோன்றுமாறு பிரதிஷ்டை நடக்கும்பொழுது திருப்பணி மாலையிற் சேர்க்கப்பாடி அரங் கேற்றுவது. அதற்காக திருப்பணிக்கு உரியோர் ஏதோ சன்மானம் செய்வர். இதற்காகத் தேவஸ்தானத்தில் தினம் இரண்டு சாதம் அபூபம் மாதச்சம்பளம் ஆறுபொன்னும் கொடுக்கப்பட்டிருக்கிறது. இவருக்குப் பின் வேறொருவர் இந்தத் தானத்தைப் பெற்றிருக் கிறார்கள். ( திருச்-திருப்பணிமாலை 220. திருச் செங்கோட்டுச் சதகம்) இவர் பாடியன வேறு பிரபந்தம் செய்திருப்பதாகக் காணப் படவில்லை.

### வீரபத்திரக் கவிராயர்

திருச் செங்கோட்டில் ஏகாலியர் குலத்தில் வீரபத்திரன் என்பவன் இளமையிலேயே அவ்வூர்த் தமிழ் வித்துவான்களிடத்து வாசித்துக் கல்வி கேள்விகளிற் சிறந்தவனானான். இவன் காரை ஆனூர் நல்லத்தம்பிச் சர்க்கரையைக்காண அங்குச் சென்றிருந்த பொழுது, சர்க்கரைமன்றாடி, தன்னை இகழ்ந்ததாக அநுமானித்துச் சினந்து திரும்பி விட்டான். மன்றாடியார் விரைந்து சென்று வழிமறித்து, இகழ வில்லையென்று கொதிக்க வைத்த நெய்யில் கைவிட்டுச் சத்தியஞ் செய்தபின் உடனிருந்து உணவருந்தி என் எச்சில் வாயைக் கழுவி விடுக என்றான். சர்க்கரை மன்றாடியும் கழுவிவிட அப் பொழுது மகிழ்ந்து இக்காதல் பாடினான் என்பது கீழே குறித்த வெண்பாவால் தெரிகிறது.

வெண்பா

காரையா னூர்மேவு காராள நல்லதம்பி

சீரைவிரித் துக்காதல் செப்பினான் - பேருலகெண்

கோதைநகர் வண்ணார் குலவீர பத்திரனெனு

மூதறிஞ னன்பு முதிர்ந்து

இவன் காலம் சுமார் 300 வருஷங்களுக்கு முன்னானாக இருக்கலாம்.

### [illegible] பம் கடலை தின்றது

நவகோடி சித்தவாச புரமான திருவாவடுதுறையி லெழுந்தருளியிருந்த சிவப்பிரகாசர் திருச்செங்கோட்டுக்கு எழுந்தருளினர். அவர் வரும் வழியிற் செய்த அற்புதங்களைக் கேள்வியுற்ற அக்கோயிலின் வந்தாரிற் சில அறிவிலிகள் அற்புதம் செய்திருப்பரேல் (ஸ்ரீ அர்த்த நாரீசுரர் திருமுன் கஜஸ்தம்பத்தருகிலுள்ள) இந்தக் கல் இடபம் எழுந்து, நாங்கள் வைக்கும் கடலையை உண்ணட்டும் பார்க்கலாம்

என இழிவுரையாடினார்கள். இதனைப் பொறாது தப் ஆசிரியரை அடியார்கள்வேண்டினார்கள். சிவபெருமான் அருளுளதேல் இது ஒரு பெரிதோ என்று விபூதியைக் கையிலெடுத்துக் கொண்டு, " வில்லோர் பொதுச்சபையின் வித்தகர் என்னும் முதலையுடைய வெண்பாவைக் கூறவே, அவர்கள் திடுக்கிடும்படி முக்காரமிட்டு, எழுந்து வைத்த கடலையை உண்டு பழய படியே படுத்தது.

வில்லார் பொதுச்சபையின வித்தகா நீயுமுனங்
கல்லானைக் கிக்கருத்திக் காட்டியவுன் - வல்லாண்மை
கட்டுரையே யாயினிந்தக் கல்லே றெழீஇக்கடலை
இட்ட இவர் முன்றினச் செய்யே

(அத்துவிதவெண்பா முகவுரை)

பொன்னின் மழை பொழிந்த தெங்கள் நாடு- வண்ணப்
பூமலரின் மாரிமிகப் பொழிந்த தெங்கள் நாடு
கன்னி யுமைக்கிடம்பகர்ந்த நாடு- நல்ல
கல்லிடபங் கடலை தின்று சொல்லுயர்ந்த நாடு

(திருச்செங்-குறவஞ்சி)

வேலூரிலிருந்த விருபாட்சிராயர் மந்திரியைக் காணுமாறு வீர சைவ தீட்சை இவர் பெற்றதாகச் சரித்திரங் காணப்படுகிறது. இதனால் இது நடந்தது. இவ்வரசர் காலமாகிய கி.பி. 1467 முதல் 1465 -க்கு இடைக்காலமாக இருக்க வேண்டும். இச்சரித விரிவ அத்வைத வெண்பா - திருச்செங்கோட்டு மான்மியத்திலும், சேலம் ஜில்லா கஜட்டியரிலுங் காணலாம்.

## பள்ளத்தாசன்

1840-ம் வருஷத்தில் திருச்செங்கோட்டில் இப்பொழுது பழமண்டபம் என்னும் ஆசாரிகள் பஞ்சாளத்தார் மண்டபத்தில் பள்ளத்தாசன் என்று ஜனங்களால் சொல்லும் ஒருவர் இருந்தார். அவர் அந்த மண்டபத்திற் பெரும்பான்மை நேரம் இருப்பதுண்டு. வாழைப் பழ வண்டியில் போட்டு வரும் வாழைச்சருகுகளை மண்டபத் தூண்களில் தோரணமாகக் கட்டித் தொங்கவிட்டுத் தன் காலிலும் கையிலும் இடையிலும் அவற்றைச் சுற்றிக் கொண்டு ஒரு மூங்கிலை இரு துடை இடையில் செலுத்தி, ஒரு நுனி பின்னால் நிலத்துற மற்றொரு தலைப்பை முன் கையில் பிடித்துக் கொண்டு டீ,டீ என்று சொல்லிக் கொண்டு குதிரை சவாரி செய்பவர் பின்புறம் தட்டியது போல மூங்கிலை அடித்துக் கொண்டு ஓடித் திரிவர். ஒருவரிடமும் ஒருவர் வீட்டிலும் யாசிப்பதில்லை. எச்சில் இலைகள் பல



கிடப்பதைச் சேர்த்து அதிலுள்ள அன்னத்தைப் புசிப்பதை இது எழுதியவரும் பார்த்திருக்கிறார். இவர் எவ்வகையினும் பிறருக்குச் சிறு சிரமமும் கொடுத்ததில்லை. பேசுவதுண்டு. கேட்டவைகளுக்குப் பதிலாகவோ, அல்லது தானாக ஒரு சங்கதியோ தொடர்ந்து பேசியதில்லை. ஒருவகைப் பயித்தியகாரன் என்றே சொல்வார்கள். எங்களுக்குத் தெரிந்த மட்டில் 40-50 வருஷகாலமாக இப்படியே இவ்விடத்தே இருந்து வருகிறானென்று சொல்வார்கள். ஆனால் நரையில்லை. திட சரீரமாகவே இருக்கும்.

பல்லடத்தில் தாசில் உத்தியோகம் செய்யும் ஒரு நாயுடுகாரு வகுப்பைச் சார்ந்த ஒருவர் மனையாட்டியுடன் இவ்வூருக்கு வந்தார். பள்ளத்தாச சுவாமிகள் எங்கே இருக்கிறார் என விசாரித்தார். இவ்வூரிலேயே இருக்கிறாராம் அவரைக் காண்பியுங்கள் எனப் பலரைக் கேட்டார். ஒருவருக்கும் புலப்படவில்லை என்றாலும் ஒருவர் பள்ளத்தாசனாக இருக்குமோ என ஐயுற்று, நீங்கள் கூறுதற்கேற்பப் பள்ளத்தாசன் என்னும் பயித்தியக்காரன் எச்சிலைத் தின்று கொண்டு திரிபவனைவிட வேறு ஒருவருமில்லை என்றார்கள். அப்படியானால் காண்பிக்கிறேன் வாருங்கள் என ஒரு சிறுவன் அழைத்து வந்து அக்கிராகாரத் தலைப்பில் பலகூடை எச்சிலையைச் சேர்த்து அதனிடையே உட்கார்ந்து அதிலுள்ள அன்னவகைகளை எடுத்துச் சேர்த்துத் தின்றுகொண்டிருப்பதை, காண்பித்து இவனைத்தான் பள்ளத்தாசன் என்று சொன்னது என்று அச்சிறுவன் காண்பித்தான். அவர்களுக்கு எவ்விதம் தோன்றிற்றோ தெரியாது, வந்த அவர் இருவரும் சுவாமி அடியேங்களைக் காப்பாற்ற வேண்டும் எனத் தரையில் விழுந்தார்கள். குறுஞ்சிரிப்புடன் வா வா என அருகு அழைத்துத் தான் சேர்த்த எச்சில் சோற்றுக் கவளத்தில் கடித்தது போக மீதியை வந்த தாசில் நாயுடு கையில் போச்சு போச்சுபோ போச்சு போ என்று சொல்லிக் கொடுக்க அதை இரு கையாலும் பணிவுடன் ஏற்று இரண்டு கண்களிலும் ஒற்றி அண்ணாந்து வாயிலிட்டு விழுங்கி விட்டனர். மீதியிருந்த ஒரு சிறுகவளத்தை அவர் மனைவி கையில் கொடுத்துத் தன் வயிற்றைத் தடவி வரும்போ வரும்போ என்று சொல்லிக் கொடுத்தனர். அந்த அம்மாளும் மெத்தப் பணிவுடன் பெற்று விழுங்கி விட்டனர். சரி போ போ எனவே பிரிய மனமுமில்லாவிடினும் மறுத்து நிற்றற்கு அஞ்சி அவ்விடம் விட்டுச் சென்றனர்.

தாங்கள் தங்குமிடமாகக் கொண்ட மடத்துக்குச் செல்லவே இவரைப் பார்ப்பதற்கு அதிகாரிகளும் மற்றும் பெரிய மனிதர்களும் வந்தார்கள். தனக்கு 7 வருஷமாக குன்மவலி மிதமிஞ்சியதாக இருக்கிறது. அதற்கு பல வைத்தியர்களைக் கொண்டு சிகிச்சை

பெற்றும் குணப்படாது ஓய்ந்தேன். ஒரு பெரியவரைச் சந்தித்தேன். இந்நோய் கர்மநோய். இது ஒரு மஹான் மூலமாகத்தான் தீரவேண்டு மென்றார். மஹான் இக்காலத்து இருக்கிறார்களா- அவரை நான் எங்கு காண்பேன் என்றேன். திருச் செங்கோட்டில் எச்சிலைப் பள்ளத்தாசன் எனப் பயித்தியம் பிடித்தவனைப் போல ஒருவர் இருக்கிறார். அங்கு சென்று அவரை வணங்கவாயேல் உன் நோய் நீங்கும். உம் மனைவியும் சூலுற்று குழந்தை பெறுவர் என்பது உறுதியென்றார். தூரதேசமுமன்று சிரமமும் அன்று எனச் சொல்லிப் புறப்பட்டேன். வந்தேன் காணப்பெற்றேன். நாளை ஸ்ரீ அர்த்தநாரீசுரர் தரிசனம் செய்து கொண்டு ஊருக்குத் திரும்புவேன் என்றனர். மலைக்குப் போய்ச் சுவாமி தரிசனம் செய்து வந்தார். சுவாமிகள் உதவிய பிரசாதம் என வயற்றுட் சென்ற பின் வலி போய்விட்டது. ஆரோக்கியமாக இருகிறது என்று மனதாரப் புகழ்ந்தனர். வேஷ்டிகள் வாங்கிக் கொண்டு போய் முன் வைத்து வணங்கி உடுத்துக் கொள்ள வேண்டு மென இரந்து கேட்டனர். வழியில் போவான் ஒருவனை எடுத்துக் கொள்ளும்படி செய்தனர். இனி எச்சிலிலை சாப்பிடாது உணவருந்து மாறு ஒரு மூட்டை அரிசி வாங்கி ஒருவரிடத்தில் கொடுத்து புசிப்பிக்க வேண்டினர். அதை ஒப்புக் கொள்ளவில்லை. அது முதல் குன்மம் நீங்கிவிட்டது. அவர் மனைவியார் கற்பமுற்றுக் குழந்தையை எடுத்துக் கொண்டு வந்து அவர் அடியிற்போட்டு வணங்கினார்கள். புன்சிரிப்புடன்' நல்லா இருப்பீர்கள்' போங்கள் என்றனர்.

பின்பு அவரை கவனிக்க நேர்ந்தது. உட்கார்ந்தும் படுத்தும் இருப்பதன்றித் தூங்குவதில்லை எனக் கண்டார்கள். சில சமயங்களில் படுத்திருக்கும்பொழுது கை,கால், தலை வேறு வேறாகத் துண்டம் துண்டமாகக் கிடக்கிறது. எழுந்தால் சேர்ந்து கொள்கிறது என்றும் சொல்வாருண்டு. எனக்குத் தெரிய சுமார் 30 வருஷ காலம் அன்று கண்ட மேனியாகவே இருந்தார். இங்கு ஒரு நூறு வருஷகாலமாக அவர் இருந்ததாக ஏற்படுகிறது. பின்பு மறைந்து விட்டனர். எங்கு சென்றார் எவ்வாறானார் என்பது தெரியவில்லை.

## J.D.மானியூல்

இன்றைக்கு சுமார் 60 வருஷங்களின் முன் 1870 ம் ஆண்டு வாக்கில், கால மழை பெய்து நல்ல விளைவு கொண்டு நாடு செழிப்புற்று இருந்தது. கொங்கணாபுரம், சங்ககிரி, குமாரமங்கலம், கொக்கராயன் பேட்டை, பாலமேடு, மானத்தி, கருமனூர் முதலிய இடத்து மிட்டாதாரர்கள் ஒருவருக்கொருவர் நட்புளராய் மகிழ்ச்சியோடு வாழ்ந்தார்கள். கலகம் விளைவிக்கும் துன்மார்க்கர்கள் அணுகவும் மாட்டார்கள். குடிகளை மெத்த அபிமானித்து காலத்துக்கு வேண்டி



யுள்ள உதவி செய்து மகிழ்வார்கள். கடன் படுவதில்லை. அற்ப விவகாரங்களைத் தொடர்வதில்லை. குடிகள் வீண் செலவு முதலியன இன்றி பயிர்த் தொழில், கால் நடைப் பெருக்கு முதலியவற்றில் கண்ணுங்கருத்துமாகத் திகழ்வார்கள். நகரவாசிகள் தங்கள் தொழில் களை நியாயமாயும், சத்தியமாயும் நடத்துவார்கள். தெய்வபக்தி, பெரியோர் பக்தி, பெரியோரிடத்து வணக்கம் மெலியோரிடத்து இரக்கம் கொண்டு வாழ்ந்தார்கள். அக்காலத்தில் Mr.J.D.மானியூல் என்பவர் திருச் செங்கோடு தாலூகா தாசில்தாரராக வந்தார். அவர் தான்அடைந்த உத்தியோக முறையில் மேலதிகாரிகள் சந்தோஷமும், கீழதிகாரிகள், குடிகள் மகிழ்வாயும் விளங்கத் தன் அலுவலைச் செய்வர். அவர் கிருஸ்து மார்க்காதுசாரியாக இருக்கினும் மற்ற மதத்தினர் கொண்டாடும்படி இருப்பார். தமிழ் மொழியில் மெத்த ஆசையுள்ளவரென்பது மாத்திரமன்று. திறமை வாய்ந்த வித்துவானு மாவார். ஸ்காந்தப் புராணம் ஆறு காண்டத்தையும் தமிழ் கீர்த்தன மாகச் செய்த சேலம் குமாரசாமி முதலியார் என்பவரைத் தனது ஆப்த நண்பராயும், வித்துவானாயும் வைத்துக் கொண்டிருந்தார். சர்க்கார் அலுவல் கழிந்தவுடன் தமிழ்ப் பிரசங்க ஆராய்ச்சியே காலப் போக்காகக் கொண்டவர். இதனால் ஊர் சுற்றிலுமுள்ள வாசித்த புலவர்கள் சூழ்ந்திருப்பார்கள். சென்ற இடம், தங்குமிடங்க ளெல்லா மும் திகழ்ந்திருக்கும். தென்னாட்டுப் புலவர்கள் கீழ்நாடு, வடநாட்டு வித்தவான்களும் செறிவார்கள். தமிழ் வித்வான்கள் மட்டிலுமோ, சங்கீத வித்வான்கள் கச்சேரிகள் உண்டு. வீணை, சாரந்தர், பிடில், சுர மண்டலம், வேணு-ஜலதரங்கம், மிருதங்கம், தபிலா, நாககரம், முதலிய வாத்தியங்களில் சிறந்தோர் மிகச்சிறப்பாக வாசிப்பர். இவ்வித வித்வான்கள் பல நாளிருப்பார்கள். அவர்கள் கல்வி நலனைச் செவ்வனே அனுபவித்த பின்னரே திரும்பிவிடுவர். தக்க சன்மானம் பெறுவர். இதனால் யாவரும் பல வகையான கல்வி இன்பத்தை அனுபவித்திருப்பார்கள். இவர்களுக்குத் தன் சொந்தப் பொருள் ஈவது மாத்திரமன்று. மற்றைய கன்வான்களும் உதவுவார் கள்.

இங்கு குழுமியிருந்த கேட்டு வர்த்தகர்களும் கிராமப் பெரியதனக் காரர்களும் அனுபவித்த தாங்கள் மறுபடியும் கேட்க ஆசைப்பட்டுத் தங்கள் ஊருக்கு அழைத்துப் போய் கச்சேரி செய்வித்து மகிழ்வார்கள். அப்பொழுது வக்கீல்கள் இல்லாத காலமாதலால் வீண் விவகாரத் தொல்லையின்றித் தங்கள் தங்கள் சொந்தக் காரியங்கள் பார்த்த பொழுது போக மீதி நேரம் இதிற்கழித்து மகிழ்வார்கள். துர்வியாச்சி யங்களில்லாமையால் ஒருவரோடொருவர் நட்புப் பூண்டிருப்பர். இப் பொழுது போல வீண் வம்புச் செலவில்லாமையால் கையிருப்பில் பணமிருக்கும். ஏதோ சில சந்தர்ப்பங்களில் கலகமூட்டு கூட்டத்

தினரால் கலகமூட்டப்பட்டு ஒருவர்க்கொரு மனத்தாங்கல் தோன்றினால், மேற்கூறிய தாசில்தாரவர்கள் இருவரையும் அழைத்து சமாதானப்படுத்தி அனுப்புவர். தனது அதிகாரத்துக்கு உள்பட்ட கீழ் அதிகாரிகள் ஏதேனும் தவறு செய்தால் தவறுதலை எடுத்துக் காட்டி கூடியமட்டில் கண்டித்து இனி அப்படிச் செய்யாதிருக்குமாறு நற்புத்தி போதித்து அனுப்புவர். பெரும்பிழை செய்திருந்தால் தப்பிதத்தை எடுத்துக் காட்டி வேலையை விட்டுவிடும்படி செய்து சந்ததியிருந்தால் அவர்பேரால் அவ் வேலையைச் செய்வித்து உபகரிப்பர். இவ்வளவுக்கும் பொருந்தாததாக உள்ளதைக் குற்றவாளியை வரவழைத்து உன்னை நீக்கிவிடும்படி எழுதாமலிருக்க முடியவில்லை. ஆனதால் நீ பிழைத்துக் கொள்ளும் வழி இருந்தால் தேடிக் கொள் என்று உத்திரவிடுவர்.

ஸ்ரீ அர்த்த நாரீசுரர் பெரிய தேர் இழுக்கும்பொழுது தண்ணீர் ஓடும் அருகு வாய்க்காலில் இறங்கிவிட்டது. அது மேடேற ஆன 2 நாளும் தேரடியிலே மிகுந்த அக்கரையுடனிருந்து மேடேற்றி நடத்து வித்தனர். கிராமப் பெரியதனக்காரர்களுக்கு எழுதி வடத்துக்கு ஆட்கள் தருவித்து இழுப்பர். மஹம்மதியர் பள்ளிவாசல் விழுந்து விட்டது. அதைச் சார்ந்தவர்கள் சக்தியற்றவர்களானதால் தக்க முயற்சியும் உதவியும் செய்து கட்டுவித்தனர். இவ்வாறு மத வித்தியாசங்களின்றி மனிதனாகப் பிறந்தவர்கள் தான் பெற்ற செல்வாக்கை பரோபகாரத்தில் உபயோகிக்க வேண்டுமென்று தான் நடப்பதுமன்றி பிறருக்கும் போதிப்பர்.

இவர்மீது மாம்பழக் கவிராயர் பல பாடியிருக்கிறார். மேற்கண்ட சுந்தர முதலியார் மாநுவல் குறவஞ்சி என ஒரு பிரபந்தமும் பாடியிருக்கிறார். தந்தை நன்கு கற்ற புலவர். இனிமையுற யாவரிடத்தும் பேசுவர். பல புலவர்கள் அக்காலத்துத் தாங்கள் இயற்றிய நூல்களைக் காண்பிப்பர். சந்தோஷமாக வாசித்துப் பார்த்துச் சாற்றுகவியும் கொடுத்துள்ளார். முற்கூறிய குமாரசாமி முதலியாரது புத்திரர் சுந்தர முதலியார் என்பவர், திருச்செங்கோட்டு வேலவர் மீது கலம்பகம் செய்தார். அதற்கு இவர் கூறிய சாற்று கவி.

**சேலம் ஹஜுஉர பென்ஷனெட் திரான்ஸ்லேட்டராகிய மேஸ்தர் ஜே.பி.மானுவேல்த் துரையவர்களியற்றிய**

**கட்டளைக்கலிப்பா**

வாக்குஞ்சொற் பொலி வுந்துறை மார்க்கமும்
வண்ணமும் பொருட் கொள்ளும் வகையதும்
நோக்குஞ் சீர்ப்பா நோக்கமு மேலவர்
நோன்மைசெய்யத்தகை பெறுவண்மையும்
பார்க்கவின்ப முறுவத லாற்றிகழ்
பாவலோர்கடுதிக்கக் கலம்பகம்
ஆர்க்கு மேர்க்கப் புகல்சுந்தரன்றனை
ஆதிகம்பனெனச் சொல்லலாகுமே.

இன்னும் பல பாடியுள்ளார்.

பத்திரகாளி அழகு நாச்சியம்மன், பெரிய மாரியம்மன் பண்டாரம் பூஜை.

சின்ன மாரியம்மன் பண்டாரம், பூஜை.

கிழக்குத்தெரு ஓங்காளியம்மன் குலாலர் பூஜை.

மேற்குத் தெரு ஓங்காளியம்மன் பண்டாரம் பூஜை

சைவ சமாஜம்

ரிபன் இன்ஸ்டுட்

தெலுங்கு ஜங்கமர் பஜனைக்கூடம்.

ஆறுமுகப் பெருமாள் கோயில் பஜனைக்கூடம்.

தெலுங்கு செட்டிகள் பஜனைக்கூடம்.

வெள்ளான் செட்டிகள் பஜனைக்கூடம்.

பாவடியார் பஜனைக்கூடம்.

பிருங்கி பஜனைக்கூடம்.

ஐஸ்கூல், போர்டு பெண்கள் பாடசாலை, மஹமதியர் பாடசாலை, போர்டு எலிமெண்டரி பாடசாலை, சம்ஸ்கிருத பாடசாலை. (குருக்கள்)

அச்சாபீசுகள் - 3, ஜினிங் பாக்டெரிகள் 8. தாலூகா கச்சேரி. ஸ்டேஷனரி மாஜிஸ்திரேட் கோர்ட்டு. போலீஸ் ஸ்டேஷன். ஆஸ்பிடல் வைத்தியசாலை 1. கால்நடை வைத்திய சாலை 1. சிசுபரிபாலன சாலை 1. டாக்டர் டி.ஜி. நாராயண அய்யர் (எல்.எம்.பி) வைத்திய சாலை. முசாபர் பங்களா. எய்டட் பள்ளிக்கூடம்.

## மோரூர்

### திருச் செங்கோட்டு மலை

குருக்கோடு நவமணியும் நவநிதியும் நவரசமும் கொழிக்குங்கோடு
தருக்கோடு சுரபியுஞ் சிந்தாமணியுந் தழைத்த தெய்வத்தானமாமால்
இருக்கோடு பலகலைக ளாகமங்கள் குரவோர்களிரைக்குங்கோடு,
செருக்கோடு முமையரனைப் பிரியாமலினிதிருக்கும் திருச்
செங்கோடே.

ஆன்பொருந்தருங்காஞ்சி யலகுமுறியாறு தொப்பை யாறுவாரி,
மீன்பொருந்துங்காவேரி திருமணிமுத்தாநதிசூழ் மேருவாமால்,
கான் பொருந்துங் கொல்லிபன்றி குருடிமலை பாலைமலை
கஞ்சநாகம்,
கோன் பொருந்து மெழுகரை நன்னாட்டினுக்கு நாயகமாங்
கோனதயூரே.

### பூந்துறை நாடு

பொன்னாடு புகழ்நாடு பொன்னியு முத்தாநதியும் பெருந்துநாடு,
மின்னாடவுடனாடுஞ் சங்கரனாருமையுடனே மேவுநாடு,
தென்னாடு வடநாடு குடநாடு குணநாடெண் டிசையும் போற்றும்,
தொன்னாடு வடிவேலர் மலடிகட்கு மகவருள்பூந்துறை நன்னாடே.
இவை திருப்பணி மாலை.

### கீழ்கரைப் பூந்துறை நாட்டு ஊர்கள்

மோரூருடன் முளசை குலவுமே மப்பள்ளி முற்றுதக டப்பாடியும்
மோடமங்கலமேழி பள்ளியிரு புலிபிரிதி முட்டில்சிறு முளசையணிமூர்
நீரூர்க்கு மரமங்கை யகரஞ்சே தாபுரம் நிழலுற்ற கருமாபுரம்
நீதிவட்டூர் மணலிகோக்களையுமுஞ்சினியுநிலைகொள் கூத்தம் பூண்டியும்
சிரூருமானங்கூர் கொக்கராயன்பேட்டை தேவை காடைச்சி நல்லூர்
செயமா விரட்டியுட னேலத்தி வாடியுஞ் செய்ய படை வீடுபட்லூர்
ஏரூர் வயற்கழனூர் மண்டபத் தூர்தோக்கை யின்பமிகு சித்தளந்தூர்
இணையில் கத்தாரியுடன் முப்பத் திரண்டூர்களினிய பூந்துறை நாடே.
(ஊர்த்தொகை)

இவற்றுள்ளே இந்நாட்டுக்குத் தலைமையானது மோரூர். இந்த வடகொங்கில் விசேஷ தேவஸ்தானமான திருச்செங்கோட்டுக்கும், ராஜஸ்தானமான குன்றத்தூர்க்கூற்றம் சங்ககிரி தூர்க்கத்துக்கும் நெருங்கி நடுவே உள்ள ஊர் இது. இந்த மோரூர் 60 தண்டிகை 70 - காங்கேயர்கள் சிறந்து விளங்கிய ஊர். பல சரித்திரங்கள் சிறந்த ஊருமாகும்.

இவ்வூரில் பாம்பலக்கார ஈசுரன், பங்கஜவல்லியம்மன் கோயில் நன்றாக இருக்கிறது. பெருமாள் சென்னராயப் பெருமாள், நல்லபுள்ளி



அம்மன். இப்பெயர் வந்ததற்குக் காரணம் என்னை வெளியே சிலர் விக்கிரகம் செய்து பிரதிஷ்டையாகும் தருவாயில் ஒரு சிற்ப நூல் வல்லோன் வந்து பார்த்து இதற்குள் தேரை உயிருடன் இருக்கிறது என்றனன். அது எப்படித் தெரியுமென்னவே, சந்தனத்தைக் குழம்பாகக் கரைத்து விக்கிரகத்தின் மேலெல்லாம் பூசினான். காய்ந்தது. ஒரு பாகத்தில் உள்ளங்கை அகலம் காயவில்லை. இதற்கு என்ன செய்வது என்றார்கள். அதை வெளிப்படுத்துகிறேன் என்றனன். ஒரு உளி கொண்டு ஈரமான இடத்தில் தட்டினான். ஒரு சிறாய் பெயர்ந்தது. உள்ளே இருந்த தேரை வெளியே குதித்து ஓடிற்று. இதைக் கண்டவர்கள் ஆச்சரியப்பட்டதுடன் சமயத்தில் சுவாமி பின்னப்பட்டு விட்டதே என விசனித்தார்கள். அந்த சிற்ப சாஸ்திரி அவர்களைப் பார்த்து, இந்த இந்த இடங்களில் இவ்வளவு அளவில் பின்னப் பட்டால் குற்றமில்லை என்று சாஸ்திரம் காட்டி இந்தப் புள்ளி நல்ல புள்ளி என்று கூறி இந்த அம்மனுக்கு நல்லபுள்ளி அம்மன் என்று பெயரிடுங்கள் என்றனன். அவ்வாறே பிரதிஷ்டித்துப் பெயரிட் டார்கள். இப்பொழுது நல்ல புள்ளி அம்மன் என வழங்கிவருகிறது. இவ்வூரில் வெகு புகழுடன் வாழ்ந்தவர்கள் பலர். பல சரித்திரங்களும் வழங்கிவருகின்றன. ஆனால் சுருக்கி முறைப்படுத்துதல் கஷ்டமாக இருந்தது என்றாலும், எழுதி முடிக்கவேண்டி யிருத்தலின் இதுவரை எனக்குக் கிடைத்துள்ள பிரபந்தங்கள், சாசனங்கள், பட்டயங்கள், கர்ண பரம்பரை வழக்குகளையும் ஒத்திட்டு எழுதலானேன். சரித்திர மேற்பட்ட வரையில் மோரூர்க் கண்ணர்களுக்கு மூல புருஷன் சூரிய காங்கேயன்.

இவன் வெகு காலத்தின் முன்னவனெனச் சரித்திரம் பதிந்துள்ளார்கள். இவனுக்கு ஆகவாரம பாண்டியன் என்ற பட்டப் பெயருண்டு.

சேலம் ஜில்லாவும், ஆற்காடு ஜில்லாவும் சேர்கின்ற இடத்தில் ஒன்றன்பின் ஒன்றாக ஆறு அகழிகளால் சூழப்பெற்றது ஆறகழூர். அது மகத மண்டலம் ( அது மலரடு ஜனநாதவளநாடு) மாவலிவாண வமிசத்தவர்கள் வசிப்பது. வாண ராச்சியம் என்பதும் உண்டு. ஒரு வாண அரசன் மிகுந்த பராக்கிரமத்தோடும், தெய்வ பக்தியோடும் வித்துவான்கள் கொண்டாடும் வகையாயும் ஆண்டு வந்தான். மகதம் என்னும் நடுநாட்டதிபதியானதால் மகதைப் பெருமான் என்னும் மற்றொரு பெயரும் உண்டு. ஆனால் மூவேந்தரையும் இவன் மதிப்பதில்லை. குறும்பு செய்வன். இவனை யாரேனும் பிடித்து வந்து என் முன் நிறுத்துவரேல் அவர்கள் வேண்டுவன உதவுவேன் என பண்டியன் பறையறிவித்தான். கீழ்கரைப்பூந்துறை மோரூர்க் கண்ண குலத்தான் சூரியன் என்னும் சேனா வீரனான வாலிபன், இதனை

முடிப்பதாக முன் வந்தான். தனக்கு வேண்டிய சாதனங்களைப் பெற்றுப் போய் ஆற்றூர் சேர்ந்தான். ஆற்றூரில் சில நாள்தங்கி, ஆறகழூர் விவரங்களை அறிந்து கொண்டான். அங்கு தங்குதற்குத் தகுமான இடமும் கேள்வியுற்றுப் புறப்பட்டான். ஆறகழூரை அடுத்தனன். பல பகக்கள் நிரம்பியுள்ள ஒரு பகக் கோட்டத்தைக் கண்ணுற்றான். அதன் தலைவனைக் கண்டான். தான் கொங்கு நாட்டினன் இங்கு சில நாளிருப்பேன். அதுவரை தங்களை அடைக் கலம் புகுந்தேன் எனத் தாழ்மையுடன் கூறினான். ஊண், உறக்கம் இங்குத் தாழ்வின்றிப் பெறலாம். உம்மைப் பார்த்தால் நலிவாழ்வு டையவரெனத் தோற்றுகிறது. பயமின்றி வசிக்கலாம் என்றனன். மகிழ்ச்சி கொண்டு மாறுவேடம் பூண்டு உளவறிந்திருந்தான். சமயம் வாய்த்தபொழுது உடன் வந்த துணையாளர்களுடன் சிவிகை தூக்கிகளாய் எடுத்தபடியே மகதை எல்லை கடந்து கொண்டு வந்து விட்டான். இடையே வைக்கப் பட்டிருந்த பாண்டி வீரர்கள் சேர்ந்து கொண்டார்கள். மலைமேற் சுற்றுக் கோட்டைகளுள்ள சங்ககிரி துர்க்கத்திற் பாண்டியராஜன் முன், கொண்டு வந்து நிறுத்தினார்கள்.

ஆறை வாணனைக் குறித்த செய்யுட்கள் திருவண்ணாமலை அருணாசலேசுவரர் ஆலய முதற்பிரகாரத்து வடவண்டைச் சுவரில் செதுக்கப்பட்டுள்ளன. அவற்றுளொன்று :-

'கொங்குக் கலிங்கமுங் கொண்டகண் டாகொடித் தேருதியர்
தங்கும் படிகொண்ட வாணாதிபா தணியாத தென்கொல்
பொங்குஞ் சினப்படை வங்கார தொங்கன் புரண்டு விழச்
செங்குன்ற மின்று பிணக்குன்ற மாக்கிய தேர்மன்னனே.'

இவனைப் பற்றிய சாசனம் ஆறகழூர் காமநாதேசுரர் ஆலயத்துமிருக் கிறது. கி.பி.1178-ல் இருந்திருக்கிறான். அப்பொழுது மூன்றாம் குலோத்துங்கன் காலம்.

### சூரிய காங்கேயனைப் பற்றிய செய்யுட்கள்.

மிண்டாறை வாணனைமுன் வெட்டாமற் பாண்டியனோர்
கொண்டுவந்து நிற்கவிட்ட கொற்றவனு நீயலையோ
தெண்டிரைசேர் மோரூரிற் றென்னன்மகு டாசலனே
மண்டலிகர் தேர்ந்துமெச்ச வாழ்சூரிய காங்கேயனே

கொங்கு மண்டல சதகம் 84. மேற்கோள்

இவனுக்குப் பிறகு மோரூரில் பிரசித்தி பெற்றவர்கள்:-

வடுகாண்ட நாயக காங்கேயன் என்று பெயர் வருவதற்குக் காரணம் தெரியவில்லை. ஆனால் இவன் பேரில் அநுராக மாலை என



ஒரு பிரபந்தம் நல்லவாக்கு. காப்பாரில்லாமையால் ராமபாணப் பூச்சிவாய்ப்பட்டுள்ளது.

இவனுக்குப் பின் இளையான் காங்கேயன். இவன் வரலாறு தெரியவில்லை என்றாலும் புள்ளியம்மாள் பள்ளென ஒரு பிரபந்தம் பாடுவித்திருக்கிறான். இவனுக்குப் பின் வேங்கி காங்கேயன் வேங்கிபாளையம் என்பது இவன் பெயராலானது போலும். கிள்ளை விடுதூது என்னும் பிரபந்தம் கேட்டிருப்பதாகத் தெரிகிறது.

வேறு விவரம் ஒன்றும் தெரியவில்லை. இவர்களே அன்றிச்சில தலைமுறையாரும் இடை இடையே இருந்திருக்க வேண்டுமெனக் காலத்தாற் தெரிகிறது.

தமிழிலக்கியங் கற்றவர்கள் எளிதிற் பாடஞ் செய்யவும், தெரிந்து கொள்ளவும் உதவியாகும்படி உரிச்சொல் நிகண்டு என வெண்பவாற் செய்துதவிய காங்கேயன் என்பவனும் மற்றொருவனாகும்.

பலகலைதேர் காங்கேயன் பட்ட முடையான்
உலகறியச் சொன்ன வுரிச்சொல் - ( உரிச் சொல் நிகண்டு)
முந்து காங்கேய னுரிச்சொல் - (ஆசிரிய நிகண்டு)

பெருத்த நூல்பலவுஞ் சுருக்கித் தமிழில்
உரிச்சொல் நிகண்டென உரைத்த காங்கேயன்.
(பாம்பண கவுண்டன் குறவஞ்சி)

காங்கேயனென்பது பட்டப்பெயர். இவன் இன்ன பெயரை உடைய காங்கேயனென்று விளங்கவில்லை.

கங்கை குலத்தவரான வேளாண்டலைவருக்குக் காங்கேயன் என்ற பட்டப்பெயரிட்டு அரசர் அழைத்திருக்கின்றனர் போலும். புதுவைக் காங்கேயன் ஆட்கொண்ட காங்கேயன் எனும் பெயர்கள் வழங்கி வந்திருக்கின்றன. கங்கா புத்ரஸய காங்கேய என்ற நியாயம் பற்றி சுப்பிரமணியருக்கும் காங்கேயன் எனப்பெயர் ஆயிற்று.

..வேறொருவர் இவ்வுரிச்சொல் நிகண்டு செய்தனர் எனச் சொல்வாருமுளர்.

கொங்குமண்டல சதகத்துள் 54,64 இவ்வெண்களுள்ள செய்யுட்கள் இம் மோரூர்க் காங்கேயர்களைக் குறித்தன. இவர்களுக்கு இம்முடி என்ற பட்டப்பெயரிருக்கிறது.

## திருமலை காங்கேயன்

இந்தத் திருமலை காங்கேயனது சரித்திரம் தெரியவில்லை. ஆனால் எழுகரை நாட்டு அதிகாரத்தை வெகு கீர்த்தியோடு நடத்தியிருக்கிறான் என்று தெரிகிறது. கீழ்கரைப் பூந்துறையைச் சார்ந்த சித்தளந்தூரில் ஒரு சிலா சாசனம் கிடைத்துள்ளது. அது இது:-

ஸ்வஸ்தி ஸ்ரீ விஜயாத்புதய சாலி வாகன சகாப்தம் 1455 மேல் செல்லா நின்று சுபானு வருஷம் கார்த்திகை மாதம் 23 தேதி பௌர்ணமையும், ஞாயிற்றுக்கிழமையும் பெற்ற புண்ணிய காலத்திலே ஸ்ரீமான் ராஜாதி ராஜன், ராஜபரமேசுவரன், ராசமார்த் தாண்டன் பூர்வ தட்சிண, பச்சிம உத்திர சமுத்திராபதி எம் மண்டலமும் கொண்டருளிய ஸ்ரீ வீரப்பிரதாப கிருஷ்ண ராயர் மஹாராயர் பிரிதிவிராச்சியம் பண்ணியருளா நின்ற காலத்து முளவாய் சார்ந்த எயினூர்ச் சாவடி செங்கோல் செலுத்தும் திரியம்பக உடையார் காரியத்துக்குக் கடவரான சாமநாயனார்க்கு நடக்கிற காலத்தில் எழுகரைப் பூந்துறை நாட்டு மோரூரில் திருமலை காங்கேயன் சீமையான சிற்றஞந்தூரில் என்காணி சொத்தில் (செ.138 1015) கொங்குமண்டலச் சதகம் 64, என்றுள்ளது.

அடுத்தவன் அத்தப்ப காங்கேயனென்று தெரியவருகிறது. அன்றி வேறு சரித்திரம் நன்கு தெரியவில்லை. எழுகரை நாட்டு அதிகாரம் செலுத்தியவன். இவன் மீது சில பிரதந்தங்களிருக்கின்றன. பாம்பலங் காரர் கோயில், மலையேறு படிகள், நான்கு வீதிகள் உண்டாக்கி யுள்ளான். மலைக்கும் இரக்கத்துக்கும் நித்திய பூஜை வேண்டுவன உதவியிருக்கிறான். குருக்கள் முதலிய தேவ கன்மியர்களை மெத்த ஆதரித்துள்ளான். நந்தவனம், கிணறுகள் உண்டாக்கினான். அடுத்த படி சொல்லப்படுபவன் நல்லதம்பிக் காங்கேயன்.

இவன் கல்வி கேள்விகளிற் சிறந்தவன். தெய்வபக்தி மிகுந்துள்ள வன், ஆலயத் திருப்பணி செய்வதில் ஓயாத எண்ணமுள்ளவன், கல்வி மான்களிடத்து மிகுந்த பக்தியுள்ளவன். தனக்கும் தன் குலத்துக்கும், தன் நாட்டுக்கும் புகழ் சம்பாதிக்கும் கருத்துள்ளவன், எம்பெருமாள் என்னும் வித்துவானைத் தக்கை ராமாயணம் பாடும்படி வேண்டி அரங்கேற்றுவித்தவன் இவனே.

மெத்தவே கண்ணன் வெண்ணெய் தனில் விருத்தச் சிராமாயணத்தைச்
சுத்தநாக்கம்ப நாடன் சொன்னான் சொன்னபொருள் தக்கையிசையாலே
பத்தர்பாடி எம்பெருமானாற் பகரும்படி செய்தான் மோரூரான்
அர்த்தநாரிசொல் நல்லதம்பி யமலனருள் பெற்று வாழ்வாரே.

என்னும் தக்கை ராமாயணப்பாயிரச் செய்யுளால் தெரிகிறது இதுவன்றி "மோரூரிலகு புகழ்நலநாயகன் இதய மகலாத செங்கோடை வாழர்த்த நாரீசுரமகா தேவனே" என்னும் மகுடமுள்ள ஒரு நீதி சதகத்தைப் பாடுவித்திருக்கிறான். மோரூர்ப் பாம்பலங்காரர் ஆலயங் கட்டினவனும் இவனே.

அன்றியும் திருச்செங்கோட்டில் ஸ்ரீ அர்த்தநாரீசுரர் மஹா மண்டபம், பலகணி வாசல் மண்டபம், அணியொட்டி பெரிய சித்த மண்டபம் கட்டியுள்ளான். திருச்செங்கோடு திருப்பணி மாலை (270 - 272 - 272)



தக்கை ராமாயணம் அரங்கேற்றிய வரலாறு தக்கை ராமாயண முகவுரையில் இருக்கிறது.

இந்த மண்டபங் கட்டுவதற்கு நல்ல சிற்பிகளைத் தேர்ந்து கொண்டுவர வேண்டுமென்று நினைந்து மதுரைக்குப் போனான். அங்கே சிற்பிகளைக் கண்டு பேசினான். வருகிறோம் என்றார்களா னாலும் 40 வீட்டுக்காரர்களை இவன் வைத்துச் சுதாரிப்பானா- என்ற சந்தேகம் சிற்பத் தலைவனுக்குத் தோன்றிற்று. ஆயினும் பார்க்கலாம் என நினைத்து ஐயாவே இப்பொழுது மழை கால ஆரம்பமாயிற்று. இது நிற்க சுமார் 3 மாத கால அளவு செல்லும் அதன் பின்புதான் வருவதை நிலைப்படுத்த வேண்டியிருக்கிறது. இப்பொழுது இங்கே விறகுக்கு மெத்தக் கஷ்டமாக இருக்கிறது. இந்த மூன்று மாதத்திற்கும் விறகுக் கஷ்டத்தை நீக்கவல்லீரேல் எங்களை வைத்து ஆள மாட்டுவீர் என்றனன். பார்க்கலாம் என்றனன். சந்தனக் கட்டைகள் விற்கும் இடத்துக்கும் சென்றான். 40 வீட்டுக்குத் 90 நாளைக்கு எவ்வளவு விறகு செல்லும் என நிதானித்து அவ்வளவு சந்தனக் கட்டைகளை விலைக்குப் பேசிப் பொன் கொடுத்து சிற்பி வீடுகளில் நிறைந்து ஐயா சிற்பியாரே இந்த விறகையே நீங்கள் எடுக்க வேண்டும். இன்னும் வேண்டியிருந்தால் கொடுக்கிறேன் என்றனன். அப்படியே ஒப்புக் கொண்டு அடுப்பு எரித்தார்கள். உயர்ந்த சந்தனக் கட்டைப் புகை வாசனை ஊரையே மணமூட்டி விட்டது. இது தெரிந்த மற்றுள்ள சிற்பிகளும் நான் நான் என்று முன்வரத் தொடங்கினார்கள். இதனைக் கேட்டவர்களுக்கு ஒரு ராச்சியாதிபதியும் இவ்வளவு உதாரமாகச் செய்ய மாட்டார்கள் என்று மகிழ்ந்து மழை நின்றவுடனே சந்தோஷமாக வந்து மனதார வேலை செய்தார்கள் எனப் பெரியோர் கள் சொல்கிறார்கள்.

இவன் அர்த்தநாரீசுரர் கோயிலுக்கு வேண்டிய சகல பாத்திர முதலியவைகளெல்லாம் கொடுத்திருக்கிறான்.

பூஜைமணி, அபிஷேக கலசம், ஒன்பது கும்பம், கொப்பரை, கிடாரங்கள், செப்புக்குடம், தவலை, உருளை, அரிமாணம், தூபார்த்தி, யேகார்த்தி, பஞ்சார்த்தி, வசவார்த்தி, புருஷார்த்தி, அடுக்கார்த்தி, அன்னார்த்தி, திரிதளார்த்தி, மங்களார்த்தி, குடம், நாகார்த்தி, திருவார்த்தி, கற்பூரார்த்தி, விபூதி மடல், குடை, ஆல வட்டம், கண்ணாடி, உபயசாமரம், மெத்தை, தலையணை, சிவிகை கட்டில், முத்துப்பந்தல், பதினெட்டு வாத்தியங்கள், (திருப்பணி மாலை. 271-272)

சங்ககிரி வரும் அரசப்பிரதிநிதிகளிடத்தில் விசேஷ அன்பு பூண்டவனாக இருந்தான்.

மும்முடி நல்லதம்பிக் காங்கேயன் நல்லதம்பிக்காங்கேயனுக்கு

நான்கு குமாரர்கள். இவர்களில் இவன் ராஜாங்கத்தாரிடத்தில் விசேஷமான மதிப்புப்பெற்று, பராக்கிரமத்திலும், கல்வியிலும், செல்வத்திலும், கொடையிலும், பெருமதிப்பு உற்றிருக்கிறான். உரிச்சொல் நிகண்டு என வெண்பாவால் ஒரு நிகண்டு செய்திருக் கிறான்.

" பலகலை தேர் காங்கேயர் பட்டமுடையான் உலகறியச் சொன்ன உரிச்சொல்' -என்னும் வெண்பாவாலும் கொங்கு மண்டல சதகத்தாலும், பாம்பண கவுண்டன் குறவஞ்சியாலும் காணலாகும்.

தென்னாட்டினான ஒரு சமயம் வித்துவான் சிவிகையில் வந்தான். கையேட்டுக்காரரை அனுப்பினான். பரசமய கோளரி என்னும் பெயருடைய விகவகன்ம குலத்தவனென்றும் அவதானமும் செய்யவல்லானென்றும் கூறினார்கள். அணுக்கமுள்ளவர்கள் பேசி, இந்த சமஸ்தானத்தில் கம்மாளனை சரி வைத்துப் பிரசங்கம் கேட்பதா - என்று புள்ளியம்மன் கோயில் பூஜை செய்யும் பண்டாரங்களில் வித்துவானாக உள்ளவன் ஆட்சேபித்தான். இது கேட்ட காங்கேயன் மனது தளர்ந்து இதற்கு என்ன செய்யலாம் என்றனன். நான் எப்படி யாவது சாக்குப் போக்கு சொல்லி தாட்டிவிடுகிறேன் என்றனன். அவ்வாறே கையேட்டுக்காரர்களிடம் வெகு இரக்கமும் பட்சமுமாக அபிநயத்து ஐயா, தாங்கள் இங்கு வந்தது சற்று சௌகரியப்படாத காலமாக இருப்பதைப் பற்றிக் கனம் காங்கேயரவர்கள் வருந்து கிறார்கள். அதாவது கந்தப்புராணம் நியமமாக நிதமும் படனமா கிறது. நிறுத்த வகையில்லை. மற்றொரு முறை திரும்புகாலில் வைத்துக் கொள்ளலாம். வழிச் செலவுக்கு உதவினார்கள் எனத் தொகை கொஞ்சம் கொடுத்து வினயமாகக் கேட்டுக் கொண்டனன். உண்மை எனக்கருதிப் புறப்பட்டுச் சென்றனர்.

சில பகல் கழிந்தமேல் திரும்புகாலில் கையேட்டுக்காரர்கள் வந்தனர். இப்பொழுதுந் தாட்டி விடுகிறேன் என்று அந்த ஆண்டிப் புலவனே சென்று இப்பொழுதும் ஈன சந்தர்ப்பமன்றோ இருக்கிறது, இராமாயண காலாட்சேபம் நடக்கிறது என்றனன். இதனைக் கேட்டவுடன் கையேட்டுக்காரன் திரும்பிவந்து விபரம் அறிவித்தான். வித்துவானுக்கு மனவருத்தமாயிற்று. ஒரு வெண்பா எழுதினார்.

> செட்டியார் தன்கதையில் செட்டிமா ம்ன்கதையில்
> இட்டுணவேண் டாமென் றிருக்கிறதா - அட்டபால்
> மோரூராத் தப்பன்மொழியுநல்ல தம்பியெனப்
> பேரான தெப்படி நீ பேசு.

இதனைப் பார்த்தவுடன் காங்கேயர் அச்சமுற்றுக் கவிராயரை எதிர் சென்றழைத்து இருத்திக் குசலம் வினவி பிரசங்கங்கள் கேட்டு



சந்தோஷமுற்று சிலநாள் இருந்தார்கள். அவர் ஸ்ரீ அர்த்தநாரிகரர்மீது

> புகழ்புனையும் நீதிபுனை திருச்செங்கோடார்க்
> ககவல் விருத்தம்நூ றன்பாய்ப் பகருதற்கு
> நம்பிக்கை கூப்புவர்நீ ணன்மை பெறக் காக்கும்
> தும்பிக்கை யானை துணை

## அடுத்தபடி பிரசித்தமாக வாய்ந்தவன் குமாரசாமிக் காங்கேயன்

இவன் மிகுந்த தைரியசாலி, பக்திமான், புத்திமான். பொறாமை யின்றித் தன்னைப்போலப் பிறருமிருக்க வேண்டுமென்ற கருத்துள் ளவன். ஏரி, குளம், பல கிணறுகள், தரும சத்திரங்கள், தேவாலய பூஜை, ஸ்தலவந்தர்களுக்கு ஆதரவு, இன்னும் பல தருமங்கள் செய்துள்ளான். இவனைப் பற்றிய சாசனங்கள் திருச்செங்கோட்டு ஆலயத்திலிருக்கின்றன.

**விமானத்தின் உத்திரத்திலுள்ளது**

ஸ்வஸ்தி சகாப்தம்1550 இதன் செல்லா நின்ற பிரசோற்பத்தி ஆண்டு ஆடி மாதம் குமாரசாமி காங்கேயன் காரியத்துக்குக் கர்த்தரான சுப்ப ணாயக்கன் மகன் சாமணன் உபயம். ( சந்தனக்குறடு)

மோரூர் கண்ணகுலம் வேலபூபதி சந்ததி குமார நல்லான் தம்பி வெற்றிக்குமாரசுவாமி சாலியவாகன சகாப்தம் 1599 நளவருடத்தில் ஸ்ரீ அர்த்தனாரீசுரர் முன் கிழக்கில் விசுவேசுரர் விசாலாட்சியம்மை நந்தி பலிபீடம் பிரதிஷ்டித்தான்.

படிக்காசுப் புலவர் என்னும் பெரிய வித்துவான் இராமநாதபுரத்தி லிருந்து கொங்குநாடு யாத்திரியாகக் கவரையென்னும் நகரையணுகி அங்குள்ள மசக்காளி மன்றாடியென்னும் கொடையாளியைக் கண்டு அவர் அகத்தில் கொங்குநாட்டுப் புலவரின் சிலருக்கும் இவருக்கும் கல்விப் போர் நடந்தது. அப்போரில் வென்றவர்களான கொங்குப் புலவர்கள் படிக்காசுப் புலவரேறி வந்த சிவிகை முதலியவற்றைப் பிடுங்கிக் கொண்டார்கள். கால்நடையாகவே திருச்செங்கோடு வந்து சேர்ந்தனர். கொங்கு நாட்டுப் புலவர்களால் ஏவிய சூனியத்தால் துன்புற்று ஸ்ரீ அர்த்தனாரீசுரர் மீது வருகைப் பதிகம் பாடிக் குணமடைந்து உமைபாகப் பதிகம் பாடி அர்த்தபாகத்தைத் தரிசித்தனர். அவ்வாலயத்தை கற்பனியால் சிறப்புறச் செய்தவர்கள் சமீபத்து 3 மையிலிருப்பதாகக் கேள்வியுற்று ஆங்குச் சென்றனர்.

அவ்விடத்தே ஒரு நீர்தேங்கு மடையிருந்தது. அதனருகே மோரூர்க் குமாரசாமிக் காங்கேயரின் சமூக வித்துவானான பாகம் பிரியா

னென்னும் புலவர் நின்றிருந்தார். அவரை நோக்கி, ' ஐய, நீங்கள் குடியிருப்பு எந்தவூர்' என்றனர். படிக்காசுப் புலவரெனத் தெரிந்து கொண்ட அப்புலவர்,

' பூதத்துணை கொண்ட போர்வாணன் மாறனிரு
பாதத்துணை காணப் பண்ணினோர் - ஓதுமிசை
ராமாயணங்கேட்டோர் நாவலர்வைப் புப்பொருளாங்
கோயான்வாழ் மோரூர் குடி'

என இதனைக் கேட்ட படிக்காசர் உளமகிழ்ந்தவராய் அப்புலவரை நோக்கி மோரூர் என்று பெயர் வந்த காரணம் யாதோ? என அப்புலவர்,

' நான் மறைப்பண் கேட்டுருகு நல்லோன் மடிவழியும்
பான் மடையீதைய பலகலைதேர் - வான்புலவர்
மாருகத் தாற் கடைய வாய்க்கா லெனப் பெருகு
மோரூரா மென்றார் முனம்'

என்று கூறினர். கேட்டு வியந்த படிக்காசுப் புலவர், பாகம் பிரியாப் புலவரைத் தழுவ இருவரும் சந்தோஷ முகமன் பேசிக் கொண்டு ஊர்க்குட் சென்றனர். இவர் வரவை அறிந்த **காங்கேயன்** என்பார் எதிர்நின்று உபசரித்து அழைத்து மாளிகையுட் சென்று குசலம் வினாவி மகிழ்ந்தார்.

பின்பு அவ்வூரில் எழுந்தருளிய '**ஸ்ரீபுஜங்க பூஷணர்**' என்னும் பாம்பலங்கார் மீது வருக்கக்கோவை பாடினார். பாம்பலங்காரர் கோயிலில் வித்வ சபை ஒன்று கூடிற்று. அரங்கேற்றினர். கேட்டோர் சந்தோஷமுற்றார்கள். அங்கிருந்த ' பாகம் பிரியான்' என்னும் புலவர்,

**கட்டளைக் கலித்துறை**

காரூர் பொழி நிகழ் மோரூரிற் பாம்பலங் காரரின் மேற்
சீரூர் வருக்கத் தொடைமாலை யன்புறச் செப்பினறால்
நீரூர் புடவிக் கவிவாணர் வாழ்த்த நிமிர்களந்தைப்
பேரூர் வருபடிக் காசனென்றோது பெரியவனே

என்று புகழ்ந்து பாடினார். இருந்த புலவருக்கு உபசாரத்துடன் சன்மானங்கள் செய்த உபகாரியைக் குறித்துப் படிக்காசுப் புலவரும்,

**கட்டளைக் கலித்துறை**

அந்திப்பிறைச்சடை யாரா வாசல ராலயத்திற்
கந்தப் பிரான்கதை நற்சிலை யாலமை காங்கெயரில்
விந்தைப் புயக்கும ரேந்திர வேந்து வியந்தெமக்குத்
தந்தச் சிவிகை கொடுத்தான் பெரும்புகழ் தாங்கினனே.

மோரூரில் அடுத்த பாகத்தில் சங்ககிரி ஸ்டேஷன் என ஒரு ஸ்டேஷனிருக்கிறது.



**முளசை**

காவிரியின் வடகரையிலுள்ளது. கீழ்கரைப்பூந்துறை நாட்டை இரண்டாகப் பிரித்ததில் மோரூர் ஒரு பாதியும், முளசை மற்றொரு பாதியுமாக இரு பிளவாகப் பிரிக்கப்பட்டது. இரண்டாம் பிரிவைச் சார்ந்த கிராமங்களுக்கு முளசை தலைமை நகர். காவிரிப் பெருக்கானான் வெள்ளத்தின் அலை சிவாலாயத்தின் திருமதிலில் மோதும். ஸ்ரீ முக்கணீசுரர், முத்து மரகதவல்லி அம்மன், முளசி வெங்கடாசலப் பெருமாள், செல்லாண்டி அம்மன், கண்ணகுலத்தார் உரிமையுள்ளவர்கள்.

**ஏமப்பள்ளி**

ஸ்ரீ விக்கிரம பாண்டீசுரர், தேங்கு பெருமாள், அத்தனூரம்மன், செல்லாண்டி அம்மன், கண்ண குலத்தார் உரிமையுள்ளவர்கள். முளசை, ஏமப்பள்ளி என்னும் இரண்டு சரித்திரங்களால் இணைந்து காணப்படுகின்றது. ஆகையால் இரண்டும் ஒன்று படிச்சரித்திரங்கள் வருகிறது. இந்த வமிசத்தில் பிள்ளைப் பெருமாள் என்னும் பெயருடைய வாலிபர் விளங்கினர். இவரை இளையபெருமாள் எனவும் அழைப்பார்கள். ஒட்டியார் இந்நாட்டின் பரப்பில் தங்கி குடிகளைத் தொந்தரவு செய்து வந்தனர். குடிகள் ஒன்றுகூடிப் பேசினார்கள். அவர்களில் பலசாலியாகிய இளையபெருமாள் அவர்களை விரட்டி விடலாம் என்று சிலரைக் கூட்டிக் கொண்டு அந்த ஒட்டியார்களை அடித்துத் துரத்தி விட்டான். ஊரார்கள் இவன்மீது சந்தோஷமடைந்தவர்களாக நேசித்து வந்தார்கள். கீழ் கரைப் பூந்துறை நாட்டின் பகுதியைத் தான் ஆண்டு வரவேண்டுமென்று எண்ணங் கொண்டிருந்ததைமோரூர்த் தலைவர் தெரிந்து உடனே சங்க கிரிக்குப் போய் அங்குள்ள அரசனுக்குத் தெரிவித்தனர். அவ்வாறே கீழ்கரைப் பூந்துறை முளசைப்பகுதிக்கு தலைவனாகப் பிள்ளைப் பெருமானை நியமித்தனர்.

டன்னத்தியாகி யெனவச் செழிய னைழைக்க வுயர்
வன்னப் பரிவேன் முளசையுஞ் சூழ் கொங்கு மண்டலமே

உண்ணிதற்குத் தண்ணீரு மகப்படாத பஞ்சகாலத்திற் பாண்டியன் சேனைக்கு அமுதூட்டி அன்னத்தியாகி என்று புகழப்பெற்ற வேலன் என்பவனது முளசை நகருங் கொங்கு மண்டலம் என்பதாம்.

(கொங்கு மண்டல சதகம்)

பாண்டி நாட்டிற் கொடும் பஞ்சம் பரவிய காலத்தில், அப் பொழுதுள்ள பாண்டியராசன் தன் சேனைகளின் ஒரு பகுதியை முளசை வேலப்பனிடம் அனுப்பினான். பஞ்சம் நீங்கும் வரையில் அப் படைக்கு அன்ன முதலியன உதவி நற்காலம் பிறந்தபின் சேனையை அனுப்புமாறு அரசதிருபம் வரும்வரையில் மகிழ்ச்சிகூறக்

காப்பாற்றினான். இவ்வித அரிய பெரிய குணத்தை நன்கு மதித்து அன்னத் தியாகி என்ற பட்டம் கொடுத்தனன்.

தென்னவன் படைக்குச் செழிப்புறுவரையில்

அன்ன மளித்த அன்னத்தியாகி. (முளசையார் மெய்கீர்த்தி)

மாசிவிழவுப் பூசவிழா வைகாசித் திருநாண்மண் டபங்கடாமும்

பூசைபடி தினமாறு படிமாலை திருவிளக்கும் புரிந்தெந்தாளஞ்

தேசமது புகழ்ந்திடவே யேவைவளம் பதியன்வத் தியாகராசர்

நேசமுடன் பணிமலைவா முமைபாகர் தமைவணங்கி நிலை நின்றாரே.

- (திருச்-திருப்பணி மாலை)

இவன் மரபினனொருவன், அடங்காத மசக்குதிரையேறி அடக்கிய வன்மையை வியந்த பாண்டியன், பெருத்த வெகுமதியும் அதிகாரமுங் கொடுக்கப் பெற்றுள்ளான் என்ற சரித்திரமுமிருக்கிறது.

**அன்னத்தியாகி பட்டன் என்கிற ஒரு புலவர் குடும்பத்தார் இன்னுமிருக்கிறார்கள்.**

இவனுக்கு இளையான் எனப்பெயர் உண்டு. முளசைக்கும், இறைவி மங்கலத்துக்கும், அடுத்துள்ள சிறு குன்றின் மீது ஒரு பெருமாளைப் பிரதிட்டித்தான். இதனால் இளையநன் பெருமாள் எனப்பெயர் வழங்குதலாயிற்று.

இவனுக்குப் பின் வேலப்ப கவுண்டன் என்பான் பிரசித்த புருஷனாக வந்தான். இவன் விசுவாசமுள்ளவன். ஸ்ரீ அர்த்தனாரி சுரருக்குக் கொடியேற்ற நாள் முதல் சுவாமி மலைக்குப் போகும்வரை கொடிகட்டி ஓயாது வந்தவர்களுக்கெல்லாம் ஜாதி, மதம் முதலிய வித்தியாசம் கொள்ளாது அன்னம் படைப்பான். இவன் காலத்தில் பாண்டி நாட்டில் ஒரு கொடிய பஞ்சம் உண்டாயிற்று. இவனது உதார குணத்தை நன்கு தெரிந்த பாண்டிய மன்னன் தன் சேனைகளின் ஒரு பகுதியை இவனிடம் அனுப்புவித்தான். பஞ்சம் நீக்கும் வரையில் நன்றாகப் போற்றிச் செழிப்புற்ற பின் அனுப்பினான். இதனால் இவனுக்கு 'அன்னத்தியாகி' என்ற பட்ட ம் கொடுத்தான். ம்ற்றை விருதுகளும் கொடுத்தான். *(கொங்கு மண்டல சதகம் 77.)*

அம்மையப்பன் என்னும் பெயர் கொண்டான் ஒருவன் பாண்டியனிடம் உள்ள யாருக்கும் அடங்காத மசைக்குதிரையை வெகு எளிதாக ஏறி நடத்தினதற்கு வியந்து அதிகாரமும் விருதும் பாண்டியன் கொடுக்கப் பெற்றனன்.



### சாமர வேலப்பன்

ஸ்ரீ அர்த்தனாரீசுரருக்கு சாமரம் (சவரி) வீசும் திருதொண்டு செய்து வருவான். இதனால் இவனைச் சாமர வேலப்பன் என்று புகழ்வார்கள். இவன்மோரூர் குமாரசாமிக் காங்கேயன் ஸ்ரீ அர்த்தனாரீசரர் முன்மண்டபத்துள் விமானம் செய்வித்தபோது உடன் இருந்தவன். இவன் காலத்தே காடாம்பாடியிலிருந்து ஊமைப்பிள்ளையை ஒடு தேர் சக்கிரத்திற் போட்டு மாய்க்கவிட்ட குழந்தையைப் பேசும்படி அம்மையப்பரை வேண்டி அனுக்கிரகம் உண்டாம்படி செய்துள்ளான்.

(திருச்-திருப்பணி மாலை 292)

தைப்பூசத்தில் ஸ்ரீ அர்த்தநாரீசுரர் கொக்கராயன்பேட்டைக்கு எழுந்தருளி காவேரி தீர்த்த உத்ஸவம் நடக்கும்பொருட்டு காவிரிக் கரையில் மண்டபம் கட்டி உத்சவம் நடத்தினான். (திருப் - 290)

திருச்செங்கோட்டில் ஸ்ரீ செங்கோட்டு வேலர் தேர் கெட்டுப் போய் விட்டது. மைசூரககர்த்தர் சிக்கராஜா உடையார் திருவிழாவுக்கு விஜயம் செய்திருந்தவர் நான் வந்திருந்தும் தேர் இல்லை என்ற குறை உண்டாகக்கூடாது நடத்த வேண்டுமென்று பிரியப்பட்டார். அப்படியே நடத்திப் பார்க்கலாம் எனக்கூறி விடைபெற்றுக்கொண்டு ஏழூருக்குச் சென்று, அங்கு புதிய தேர் வேலை முடிந்து வெள்ளோட்டம் ஒடாது இருந்த தேரைப் பிரித்துக் கொண்டு வந்து பூட்டி திருச்செங்கோட்டில் வெள்ளோட்டம் ஒட்டினது சாலி சகாப்தம் 4800 பிரமாதி சித்திரை 9 தேதி (திருப்-மாலை)

வைகாசி விசாகத்தில் தேர்த்திருவிழா வெகு சிறப்பாக நடத்தி வைத்தனன்.

கபை, நாகமலைக் கவுண்டன் ஸ்ரீ அர்த்தனாரீசுரருக்கும், செங்கோட்டு வேலருக்கும் 2 கொடிக்கம்பப் பிரதிஷ்டை செய்வித்தனன்.

கந்தசாமிக்கவுண்டன் கைலாயநாதர் கோயிலின் மேற்கு கோபுர வாயில் கோபுரம் கதவுகள் செய்து பிரதிஷ்டித்தனன். (திருப். 295)

கோக்களை வேலகவுண்டன ஸ்ரீ அர்த்தனாரீசுரர் ஆலயத்து வடகோபுரவாயில் பிள்ளையாரை பிரதிஷ்டித்தனன். (திருப்.296)

### கந்தசாமிக் கவுண்டன்

ஸ்ரீ அர்த்தனாரீசுரர் பெரிய தேர் கெட்டுப் போய்விட்டது. சங்ககிரி உல்லள்ளி சக்கராஜாவிடம் இதனை அறிவித்து உத்தரவு பெற்று கொல்லிமலைக்குப் போய் மரங்கள் வெட்டி வந்து பெரிய தேர் அழகாகச் செய்வித்து பிரதிஷ்டித்து உத்சவத்தை மிக சிறப்பாக நடத்தினான். (திருப்பணி மாலை.2987)

## தண்டிகை வேலகவுண்டன்

கைலாயநாதர் கோயிலின் முன்மண்டபங்கட்டி, மாசிவிழா, பூசவிழா, வைகாசித் திருவிழா, மண்டபச் சிறப்புச் செய்வித்தனன். தினம் தளிகைக்கு 6 -வள்ளம் அரிசி, மாலை திருவிளக்கு முதலிய கைங்கரியம் நடத்தினன். நாட்டு விசாரணை விசேஷமாக நடத்து தலால், நாட்டுவேல கவுண்டன் என்றும், தண்டிகை சவாரி செய்த லால் தண்டிகை வேல கவுண்டன் என்றும் இவனைக்கூறுவர்.

இங்கெழுந்தருளியுள்ள சிவபெருமானுக்கு விக்கிரமபாண்டீசுரர் எனத் திருநாமம். இக்கோயில் கண்ட விக்கிரம பாண்டியன். இப்பாண்டியனுக்கு புவனேக வீரன் என மறு பெயரிருந்திருக்கிறது எனச் சாசனங்களால் தெரிகிறது. இவன் காஞ்சிபுரத்தைக் கொண்டான் என்று சிதம்பரத்துச் சாசனம் கூறுகிறது. இவன் வேணாட்டரசனையும், நாகதிய கணபதியையும், விஜயகண்ட கோபாலனையும் வென்றதாகச் சாசனங்களால் தெரிகிறது.

இக்கோயில் கண்ட விக்கிரம பாண்டியன் பெயரை ஒட்டித்தான் இதன் சமீபத்துள்ள (கோரைக்குட்டை) இளையபெருமாள் மலைக் குத் திருவிக்கிரமாசலம் எனப் பெயர் வந்தது போலும்.

இவ்வமிசத்தில் பிற்காலத்துப் பிரசித்தமாக வாழ்ந்தவர் பெரிய ரங்கா கவுண்டர்.

ஜமீனை நல்லநிலைக்குக் கொண்டு வந்தனர். இதனிடையே கருவி நூல்களும், சமய நூல்களும் கற்கத் தொடங்கி, பெரிய புராணம், திரு விளையாடல் காஞ்சிப்புராணம் முதலியனவும், நாலாயிரப் பிர பந்தம், தேவாரம், திருவாசகம் முதலியனவும், சித்தாந்த சாஸ்திரங் களும் தக்கோர்களின் துணையால் நன்கு கற்றனர். எப்பொழுதும் தெய்வபக்தி யுடையவர்கள், வேதாந்த சித்தாந்த சாஸ்திரங்களறிந் தவர்கள், மன ஒடுக்கமுற்ற ராஜயோகிகள் முதலான பெரியோர்களை வேண்டி ஏத்திப் போற்றிச் சமீபத்திருத்தித் தெரிய வேண்டுவற்றைத் தெரிந்து கொண்டிருப்பர். சிறிதுபோதும் வீண்பொழுது போக்குபவ ரல்லர். தங்கள் முன்னோர்களாகிய மோரூர், முளசைக் கண்ணர்களால் பரிபாலிக்கப்பட்டு வரும் திருச்செங்கோடு ஸ்ரீ அர்த்தனாரீசுரர் ஆலயத்து மேற்கு மதில் இடிந்து போனதைப் புதுப்பித்தனர். ஆலய மண்டபத்தில் முற்றிலும் பழுதுபட்ட தட்டோடு இருமுறை புதுப்பித்தனர்.

மலை வடகோபுர அடிவரியும், செங்கோட்டு வேலவர் ஸ்தூபியைச் சிறந்த கதை வேலைப்பாடாகப் புதுப்பித்துந் தங்கக் கலசம் வைத்து அஷ்டபந்தன கும்பாபிஷேகம் செய்தனர்.

ஈசு தரிசனத்திற்கு வரக்கூடிய தேசாந்திரிகளுக்குப் பிரசாதம் கொடுத்து வருமாறு கட்டளை ஏற்படுத்ினார். கைலாயநாத



ராலயத்தில் உத்சவர் சுப்பிரமணிய சுவாமி எழுந்தருளியுள்ள கோயில் புதிதாகவும் மற்றை மண்டபங்களுக்கெல்லாந் தட்டோடும் பரிமள வல்லித்தாயார் ஸ்தூபியையும், நந்த கூபத்தையுஞ் சிறந்த கதை வேலையாற் புதுக்கியும் அஷ்டபந்தன கும்பாபிஷேகம் செய்வித் தனர். விநாயகர் தேர் பெரிய தேர். புதிதாகச் செய்தனர். காண்போர் கண்கவரத்தக்கவாறு சகலாத்தில் உயர்ந்த வேலைப்பாடாகச் சேலையும் அமைப்பித்தனர். வைகாசி மாதம் ஐந்தாந் திருவிழா மண்டபக் கட்டளை, கடைசி நாள் நந்தவனச் சாவடி மண்டபக் கட்டளைகளும் நடந்து வரும்படி ஏற்பாடு செய்வித்தனர். இறைவி மங்கல மலை யென்னுங் கோரைக்குட்டையில் புஷ்பப்பணிக்குத் தட்டில்லாதபடிக்கு எல்லாவித புஷ்பங்களுந் தரத்தக்க நந்தவன மமைத்தனர். மலையேறு படிகளும், மலைமேலும் அடிவாரத்தும் மண்டபங்களுஞ் சத்திரஞ்சாவடிகளும் கட்டுவித்தனர்.

பெருமாள் மூலவர், துவார பாலகர் முதலிய திருவுருவங்கள் அமைத்ததன்றி உத்சவத்திற்காகப் பெருமாள் சீதேவி பூதேவி ஆஞ்சநேயர் முதலிய மூர்த்திகள் சமைப்பித்து சம்புரோட்சணை செய்வித்து சித்திரா பௌரணையில் பிரமோத்சவமும் செய்வித்த தன்றி நித்திய நைமித்திய பூஜைகள் குன்றாது நடந்தேறி வருமாறு நன்செய் புன்செய் நிலங்களும் ஈரோட்டிற் கடைகளும் ஏற்படுத்தினர். தேரோடுதற்கு மலையைச் சுற்றிலும் வீதிகள் உண்டாக்கினர். கொக்க ராயன்பேட்டை பிரமலிங்கேசுரர் அம்மன் கோவில்களையும் திரு மதிலையும் புதுப்பித்தனர். புதிய கோவிலமைத்து வேணுகோபாலப் பெருமாளையும் தாபித்தனர். அங்கே நித்திய பூசைக்கு வேண்டிய வற்றிற்கு நிலைபேறாக நிலம் விட்டனர். ஏமப்பள்ளி சிவாலய விஷ்ணு ஆலய ஜீரனோத்தாரம் செய்து இருமுறை அஷ்டபந்தன கும்பாபிஷேகம் செய்தனர். முளசையில் முக்கணீசுரர் அம்மன் பெருமாள் ஆலயங்களைப் புதுப்பித்து அஷ்டபந்தன கும்பாபிஷேகம் செய்வித்தனர். விட்டம்பாளையத்தில் கணபதி கோவில் அமைத்து நித்திய பூஜையும் விநாயக சதுர்த்தி உத்சவமும் நடந்து வருமாறு நிலையான ஏற்பாடுகள் செய்தனர்.

திருச்செங்கோட்டுக் கலம்பகம் அச்சிடுதற்கு திருச்செங்கோட்டுப் புராணம் வெளியாதல் முதலியவற்றிற்கு இன்னும் பழைய நூல்கள் வெளியாக்குபவர்களுக்கும் பொருளுதவி அளித்திருக்கின்றனர். சில தமிழ் ஆந்திர பிரபந்தங்கள் செய்துவந்தவர்களுக்கும் உதவி புரிந்துளர். புலவருக்கும் சிதம்பரம் தீட்சிதருக்கும் நிலமானியம் விட்டிருக் கின்றனர். 18979-80 வருஷங்களில் நேர்ந்த கரிப்புக் காலத்தில் பெரிய தெப்பக்குளம் வெட்டுவதற்குப் பொருளுதவினர். அக்காலத்திலும் அதற்குமுன் அட்சய வருஷத்து வற்கடத்திலும் திருச்செங்கோடு ஸ்தல வந்தர்களான குருக்கள்மார், வைதீகர்கள், பண்டாரங்கள்,

பூசாரிகள், சிபாதந்தாங்கிகள், மேளத்தார்கள் முதலிய தேவஸ்தான ஊழியர் களுக்குத் தானியங்கள் கொடுத்து உதவினர். சிறுவயதி லிருந்து திருச்செங்கோடு தாலூகா தேவஸ்தான ஊழியர்களுக்குத் தானியங்கள் கொடுத்து உதவினர். சிறுவயதிலிருந்து திருச்செங்கோடு தாலூகா தேவஸ்தான பரிபாலனராயுமிருந்து கோவிற்பூசை முதலியன செவ்வனே நடைபெறுமாற செய்து வந்தனர்.

கணபதியென்னும் புதல்வனே இவரது அந்திய கருமங்களுக்கு உதவினந்தாகவும், உள்ள செல்வங்களையடைந்து பரிபாலனஞ் செய்து வருதற்கு உரியவருமாயினர்.

பிலவ வருஷம் ஆடி மாதம் 2 தேதி (17-7-1901) மாலை சௌசாசமனம் முடித்துக் கொண்டு சிவத்தியான பரராய் இருந்தபடியே சிவப்பேறெய்தினார். சிவ, சிவ, சிவ.

## பழனி

### மாம்பழக் கவிச்சிங்க நாவலரவர்கள் கூறிய

### ஆசிரிய விருத்தம்

அகிலதல வனிதைமுகம் அனையபூந் துறைநாட்டில்
அரவகிரி வீற்றிருக்கும்
அர்த்தநா ரீசர்க்கு அலங்கிருத மகாரதமும்
ஆதிகே சவர்தமக்கே
அணிரதமும், இறைய மங் கலமதில் காவிரி
அடுத்தபெரு மாள்மலையின் மேல்
அமர்இளைய பெருமாட்கு மணிரதமும் அதில்எழுந்
தருளுமுற் சவமூர்த்தியும்
அரிய சீதேவி பூதேவியுஞ் சக்காத்
தாழ்வாரும் அநுமந்தனும்
அவிர்சபா மண்டபம் ரங்கமண் டபம்முதல்
அனந்தம் திருப்பணிகளும்
அற்புத சிருஷ்டியால் உண்டாக்கி நந்தவனம்
அதிலிருத்தி யாகவைத்து
அதிவளம் பெறுரங்க நாதபுரம் எனும்நகர்
அமைத்துவீ திகள் புதுக்கி
மகிமைபர வியகொக்க ராயபர பிரமேசர்
வளர்சிகர கோபுரம்பொன்



மந்திரா லயசீர்ன உத்தார ணத்தினொரு
மகிழ்சவந் திரவல்லியின்
மன்னுகோ விற்பணி திருத்தமுன் னால்முறை
வழாதுகும் பாபிஷேகம்
வரிசையும் நடத்திமற் றொருகோயில் யாவையும்
வகுத்தே அதில்பொருந்த
வரவேணு கோபாலர் எனும்மூலர் உற்சவர்
வரச்செய்து கருணைபூண்டோர்
வாள்திருச் செங்கோடு மகுடேசர் கொடுமுடி
வகுத்ததென் பழனாபுரி
வயல்சூழ் சிதம்பரம் சீரங்க மாம்இந்த
மங்களத் தவங்கள் எங்கும்
மாறாது அநேகவித கட்டளை நடாத்திவரு
மகராச கனகயோகவான்
சிகிபரத நடனமிடு செழுபரி மனச் சோலை
செறிமுளைசை நகராதமிபன்
சீர்கொள் எமப்பள்ளி மதியூகி துதிசைவ
துங்கபர மானுகூலன்
தேன்ஒழுகு குவளைமலர் மாலிகா பரபாண்டிய
திடபொருட் சூடாமணி
சீர்த்திதொண் ணூற்றாறு தேடிநிலை நாட்டிச்
சிறந்தமே ழிக் கொடியினான்
திவ்யகுண கன்னகுல திலகமது ரிதவசன
தீரன்இங் கிதகுபேரன்
செப்பும்அறு சாஸ்திரஅட் டாதச புராணபூ
சிதகாவ்ய ஆகமாதி
செப்புப்பர் பல்கலை விநோதமிகு வேதாந்த
சிரவணா னந்தபுனிதன்
செந்தமிழ்ப் புலவோர் தராத ரம் தானே
தெரிந்துதவு கின்ற கர்ணன்
சுகிர்த பரி பாலனன் துரந்தரீ கன்கடின
துஷ்டநிக் ரகசிரேட்டி
சுத்தசை தன்யசற் சங்கசேச கரசமும்

தூங்கதுக ளங்கசோமன்
துடியுடைய மருவலர்கள் கொடிகள் பொடி படமோது
துரிதசின துரகநகுலன்
சோர்விலா வடகொங்கு மன்னவன் அன்னத்தியாகி
துரைமார்கள் மதிக்கும்நிபுணன்
க்ரீதமநு நீதிகடை பிசகாத உசிதன்முன்
சொல்திருச் செங்கோடெனும்
தூயதே வஸ்தான சுபதர்ம கர்த்தவ்ய
தோர்த்தண்ட காரியதரிசி
சுந்தரத் தண்டிவே லப்பர்செய் தபோபல
சுபுத்ரக லக்ஷணிகன்
தூயவன் பெரிய ரங் கயபூபன் இறையருள்
சுரந்துவாழ்ந் திடுகமாதோ

இவனுக்குப் பின் என். தண்டிகை வேல கவுண்டர் என்பவர் பிரசித்தராக அக்குடும்பத்தில் தோன்றினர். தேவஸ்தான கமிட்டியாக வந்தார். அக்காலத்தில் நாட்டார் என்றும் குடியானவர்களென்றும் பிளவு கண்டு தேவஸ்தானம் முதலிய பொதுக் காரியங்கள் நடை பெறுதற்கின்றி இருந்தது. அவ்வாறு இருத்தல் சரியன்று என்று நல்லோர் கருதுமாறு இவர் எண்ணினார். அத்துடன் பார்ப்பார், அல்லாதார், சைவம், வைஷ்ணவர் என்பன முதலிய பேதங்களைக் கற்பித்து ஒன்று சேர்ந்து செய்விப்பார் சூழ்ச்சிகள் நிராகரித்து ஒற்றுமையாக்குதற்கு ஏற்றிட சந்தர்ப்பம் கிட்டாமலுமிருந்தது. அப்பொழுது சைவ சமாஜம் என ஒரு சபை திருச்செங்கோட்டில் ஏற்படுத்தி அதற்கு நாயகமாக திருவாளர் டி.என்.சிவஞானம்பிள்ளையவர்கள், ஜே.என். கந்தசாமி பிள்ளையவர்கள், சக்கிரவர்த்தி ராஜகோபாலாசாரியார், எம்.டி.சுப் ப ராயரவர்களும் முன்னின்று வேலை செய்தார்கள். இதனால் காட்டுபாளையம் மிட்டா ஜமீன்தார், ராஜாக்கவுண்டர், புத்தூர் எஸ்.சுப்பராய கவுண்டர், சித்தளந்தூர் எஸ்.எம்.சுப்பராயகவுண்டர் முதலான ஜமீன்தார்களும், ஆர்.கணபதிக் கவுண்டர், வேளக்குறிச்சி ராஜாக்கவுண்டர், விட்டம்பாளையம் இராமசாமிக் கவுண்டர், சம்பந்தமூர்த்திக் கவுண்டர் முதலியவர்களும் சேர்ந்தார்கள். இதற்கு திருச்செங்கோட்டு விவேக திவாகரன் என்னும் பத்திரிகை பத்திராதிபர் தி.அ. முத்துசாமிக்கோனார் மூல காரணமாகவிருந்து சேர்த்துவித்தனர். சமாஜ விஷயமான கூட்டத்துக்கு வருதலென்னும் முறையில் கூடுதலானார்கள். பொதுக்காரியங்கள் நன்றாக நடை பெற்றது. அத்தருவாயில்தான் கார்னேஷன் சத்திரம் தண்டிகைவேல



கவுண்டர் கட்டினார். கட்சி பேதமென்பது இன்றிச் சிறப்பாக நடந்தது. கோட் கொல்லிகளுக்கும் முடிச்சன்களுக்கும் இவ்வொற்றுமை சகிக்காது இருந்தது. சத்திரத்திறப்புக் கொண்டாட்டத்துக்கு கட்சி பேதமென்பதின்றி லட்சணமாக நடந்தது. இதை தண்டிகைவேல கவுண்டர் விமரிசையாக நடத்தினார்.

அந்த சந்தர்ப்பத்தில்தான் அர்த்தநாரீசுரர் பெரிய தேருக்கு இரண்டு ஆயிரத்தைந்நூறு ரூபாய் செலவில் சகலாத்துச் சித்திர வேலைச் சேலை தைத்துக் கட்டித் தேர் நடக்கின்றது. அதுதான் இன்னுமிருக்கிறது. ஆக மொத்தமான தையல் பிம்பங்கள் அமைந்துள்ளது. சென்னையிலுள்ள தேர்ந்த வேலைக்காரர்களைக் கொண்டு வந்து செய்வித்தது.

முளசை

, கண்ணன்

பாண்டி வேட்டுவன்

## தகடப்பாடி

உலகேசுரர்

உலகவல்லியம்மன்

குன்றின்மேல் ஷண்முக வேலாயுதசுவாமி

சூரிய புஷ்கரணி தீர்த்தம் வெள்ளை விநாயகர்

கரிய பெருமாள்

தாமோதரப் பெருமாள்

கரியகாளியம்மன்

என்னும் கோயில்களிருக்கின்றன.

மலை காவலர் என்னும் சுவாமி கோயிலுமிருக்கிறது. இந்தக் கோயில் திருச்செங்கோட்டிலுள்ள மலைக்காவலர் கோயில் போன்றதே. திருச்செங்கோட்டில் மலைகாவலருக்குப் பூசை செய்யும் பூசாரிகளில் ஒரு வீட்டினர் பூசை செய்து வருகின்றனர்.

இதனால் அசுபபதி, கஜபதி என இருவர் அங்குபதியுற நரபதிக்கு இங்கு பதியும் என்கிறார்கள். கண்ணகுலத்தவர்கள் காணி ஆட்சி உள்ளவர்கள். ராட்சதக் கவுண்டன் என்பானுக்கு இரண்டு குமாரர்கள். மூத்தவன் இவ்விடத்திலும், இளையவன் கத்தாரியிலும் இருந்து கொண்டு பாளயப்பட்டாக ஆண்டார்கள். இவர்கள் ஏழு ஏரிகள் கட்டியிருக்கிறார்கள். அதாவது புங்கேரி, புளியன் ஏரி, அளிஞ்சிகுளம், சேரி குட்டை, வடுகன் குட்டை, வாரணான் குட்டை, பாங்கிலேரி ஆகியவைகளாம்.

## மோடமங்கலம்

முத்தீசுரன், மரகதவல்லி

சர்க்கரை விநாயகன், கருதராயப் பெருமாள்

செல்லாண்டியம்மன் மாரியம்மன்

அத்தனுாரம்மன்

தண்ணிபந்தப் பாளையம் மாரியம்மன், முத்துக்குமாரசாமி

செம்பன், அந்துவன் காணி

ஒருநாள் மேடையின்மேல் வழக்கம்போல் ஊர்த்தலைவர்கள் இருந்து விசாரித்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஒரு தமிழ்ப் புலவர் அவ்விடத்துக்கு வந்து நின்றார். ஒருவரும் பேசவில்லை. சற்று நின்று இருந்தவர்களைப் பார்த்து இவ்வூரின் பெயர் என்னவென்று புலவர் கேட்டனர். மேடைமங்கலம் என்றார்கள். அப்பெயர் இவ் வூருக்குத் தகாது. மூடமங்கலம் என்றிருக்க வேண்டும் என்றனர். ஏன் என்று கேட்டார்கள். யாரேனும் புதியவர்களாக வந்தால் வந்தவர், யாரைத்தேடி வந்தீர்கள் என்ற கேட்பது இழிந்தவர்களிடத்தும் காணலாம். நீங்கள் அப்படியில்லாத மண்ணுருக்கள் இருப்பது போல இருக்கிறீர்கள். அதனால்தான், என்ற சொல் கேட்டவுடன் சற்று திடுக் கிட்டு இவர் பெரிய மேதாவியாக இருப்பார் போல இருக்கிறது என்று சிலர் எண்ணங்கொண்டாலும் எப்பொழுதும் அறிவிலாதவர் களிடத்தே பழகும் காட்டுக்குடியானவர்களானதால் வந்தவர் நீங்களன்றோ எங்களைக் கும்பிடவேண்டும் என்றார்கள். வந்தவர் களை விசாரிக்க வேண்டியது இருந்தார்களின் கடமையாகும். எனவே, ஆனால் ஏதோ புலவர்போலத் தோற்றுகிறது. எங்களால் மரியாதை பெறக்கூடிய புலவரானால் இந்த மணலைச் சர்க்கரையாகப் பண்ணுங்கள் பார்க்கலாம் என்றார்கள். புலவர் புன்சிரிப்புக் கொண்டு, நல்லது, இந்த மணலை இந்தப் பிள்ளையார் கோயிலுள்ளே வைத்துக் கதவைச் சாற்றுங்கள் என்றனர். மூடினவுடனே நமஸ்கரித்து மூடிய கதவைத் திற என்றனர். திறந்து பார்க்கவே சர்க்கரையாக இருந்தது. கண்டவர்கள் திடுக்கிட்டார்கள். இருக்கட்டும் இந்தக் கிணறு உவர்த்தண்ணீராக இருக்கிறது. நல்ல தண்ணீராகட்டும் பார்க்கலாம் என்றார்கள். ஒரு செம்பு தண்ணீர் முகந்து வரும்படி சொன்னார். கொண்டு வந்ததை அதே கோவிலுள் வைக்கச் சொன்னார். வைத்துக் கதவு மூடி நமஸ்கரித்து கதவைத் திறந்து செம்பை எடுத்து வந்து ஒரு சிறு பாத்திரத்தில் கொஞ்சம் தண்ணீர்விட்டு அருந்தச் சொன்னார். உப்பு இன்றி இருந்தது. மீதித் தண்ணீரை அக்கிணற்றுள் ஊற்றச் சொன்னார். ஒரு முகூர்த்த நேரம் கழிந்த பின் பார்க்கச் சொன்னார். கிணற்று நீர் நல்ல தண்ணீர் ஆய்விட்டது. எல்லோரும் பயங்கொண்டு



புலவர் அடியில் விழுந்து நமஸ்கரித்து வணங்கி மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்கள்.

அதுமுதல் அந்த விநாயகனைச் சர்க்கரைப் பிள்ளையார் என்றும் கிணற்றை நல்ல தண்ணீர்க் கிணறென்றும் பெருமையாகப் பேசுகிறார்கள்.

## மேழிப்பள்ளி

தான்தோன்றீசுரர்

தர்மசம்வர்த்தினி அம்மன்

சிவன்கோயில் ஆதிசைவர் பூஜை

வரதராஜப் பெருமாள்

பெரியண்ணன்

சின்னண்ணன்

தங்காயி அம்மன்

அண்ணன்மார் சாணார் ( சான்றார்) பூஜை

இங்கே மாசி மாத சிவராத்திரியில் வெகு ஜனக்கூட்டம் வரும். தங்காய் என்னும் தங்கை தன் மூத்தோரை அண்ணன்மார் என்றதால் இப்பெயர் வந்தது.அவ்விருவர்களின் பெயர் பொன்னர், சங்கர்.இவர்கள் சரிதை விரிவானது. அவர்களது பிறப்பிடமான கிழக்கு நாட்டில் எழுதபபடும்.

அண்ணன்மார்கள் (பொன்னன் சங்கர்) இவர்களுக்கு இளையாள் தங்காயி. இவர்களின் தந்தை குன்றனையான் (குன்னுடையான்) தாயார் தாமரை நாச்சியார். பாட்டனார் வாங்கலான். ஊர் சிறுநாற்புலியூர், ( திருநாமபுலியூர்) சிற்றப்பன் செல்லாத்தான்.

வாங்கலான் பாட்டனவன் வாழ்வு சிறு நாற்புலியூர்

தீங்கு செய்த செல்லாத்தான் சிற்றப்பன் - ஓங்குதந்தை

காமமெழிற் குன்றனையான் நண்ணுநகர் சிற்றாலை

தாமரை நாச்சியார் தாய். என்னும் வெண்பா கிடைத்திருக்கிறது.

60 வருஷத்தின் முன் இருந்த சரித்திரம் ஒருவிதம்பின்னிட்டு அச்சிட்டுளது வேறு. கொங்கு நாட்டினராகிய இவர்களை பொன்னிவள நாடு என்ற யாரோ ஒருவர் பாடி அச்சிட்டுள்ளார்கள்.

தூரன் - செங்குன்னி, காணி.

## மிட்டா கிராமம்

இதைச் சார்ந்த புதுப்பாளையத்தில் மகாத்மா காந்தி ஆசிரமம் இருக்கிறது. கையால் நூல் நூற்றல், நெய்தல், துணிகளுக்குச் சாயம்

போடுதல், வேலை நடக்கிறது. இங்கு உற்பத்தி செய்யும் துணிகள் வடநாட்டுக்கும் செல்லுகின்றன. ஆசிரமத்தில் வைத்திய சாலை ஒன்றும் ஆசிரமத்தர் வைத்திருக்கிறார்கள். அநேகம் ஏழைகளுக்குத் தொழில் கிடைத்திருக்கிறது. இந்த நிலம் சமீபத்தில் காலமான இரத்தினசபாபதிக் கவுண்டர் உதவியது.

### இருபுலியூர்

கோழிநாத ஈசுரர்

தேவராஜப் பெருமாள்

அழகராஜப்பெருமாள்

அத்தனூரம்மன்

காளியம்மன்

பெருமாள் கோவிலில் சம்பத்தையன்

செல்ல குலம்

செவ்வந்த குலத்தார் காணி

திருமணி முத்தாறைக்கும் மிகுந்த செழிப்பாக ஒரு தோப்பு. அதில் ஒரு பெரியார் உலக விவகாரங்களை ஒடுக்கினவராய் கடவுள் தியான நிலையிலிருப்பார். ஒரு நாள் இரண்டு துஷ்டப் புலிகள் மிக சத்தமாக அதம்பிக் கொண்டு அவர் மீது பாய்தற்குச் சினந்து எழுந்தது. காரண மின்றி ஏன் சினந்து விழுகிறீர்கள். இது உங்கள் ஜாதிக் குணமாக்கும் இருந்தாலும் அடங்கியிருங்கள் எனக் கை அமர்த்தினர். அடங்கி விட்டது. அதுமுதல் மனிதர்களை வெருட்டுவதில்லை. சாதுவாய் விட்டன. காலையில் நதியில் விழுந்துமுழுகி அப்பெரியார் முன்னிலையில் படுத்திருக்கும். இரவில் சிறிதுநேரத் தீனிக்குச் செல்லும். இவ்வாறு பல நாள் இருந்தன. இதனால் இருபுலியூர் என இவ்வூருக்குப் பெயராயிற்று. வடமொழியில் உபய வியாக்கிரபுரம் என்கிறார்கள்.

இளையாக் கவுண்டன் என்பவன் நல்ல செல்வந்தனாக இருந்தான். அப்பொழுது மோரூர் ராட்சசக் கவுண்டன் அர்த்தனாரீசுரர் கோவிலில் கற்பணி மண்டபங்கள் கட்டினான். அவன் இளையாக் கவுண்டனைப் பார்த்து அர்த்தனாரீசுரர் சந்நிதி மண்டபங்களைக் கட்டிவிட்டோம். குமாரர் கோயிலைக் கட்டுங்கள் என்றனர். அப்படிச் செய்யவில்லை. சொல்லியும்செய்யவில்லையே சிவபணிக்கு உதவாத இப்பொருள் ஏதாகிறது? அதைக் கொள்ளையடித்து அத்திருப்பணியைச் செய்து முடிக்கலாம் என்று எண்ணினார். கொள்ளையடிக்க ஆட்களைத் தயார் செய்தார். இது தெரிந்து இளையாக் கவுண்டன் பயந்து செங்கோட்டு வேலர் உபயம் என பல சீட்டுகளை எழுதச்செய்து கயிறு கோர்த்து வைத்திருந்தனன். வருகிற



நாளைத் தெரிந்து, பொழுது விடிந்தவுடன் ஆடு, மாடு, பட்டி, தொட்டி சகல பொருள்களுக்கும் ஒவ்வொரு சீட்டுக்கட்டி விட்டனர். கொள்ளைக்காரர்கள் வந்து புகுந்தார்கள். ஒவ்வொன்றிலும் சீட்டிருக்கப் பார்த்தார்கள். கொள்ளைத் தலைவன் செங்கோட்டு வேலர் உபயம் என எழுதப்பட்டிருந்தது. கடவுள் பொருளாக ஆகிவிட்டது. நாம் தொடக்கூடாது என்று பயந்து திரும்பி விட்டனர். இவர்கள் மோரூர்க் காங்கேயரிடம் அறிவித்தார்கள். சந்தோஷப் பட்டனர்.

அந்தப் பொருள்களையெல்லாம் சேர்த்துத்தான் குமரீசர் கோயிலும் குமாரர் கோயில் முன்மண்டபமும் கட்டினது. இதைத்தான் இளையாக் கவுண்டன் மண்டபம் என்று வழங்குகிறது. இதைப்பற்றி முன்னமே சொல்லப்பட்டிருக்கிறது.

### பிரிதி

விநாயகர்

சொக்கநாச்சியார்

கரியகாளியம்மன்

கரியபெருமாள்

அப்பிச்சிமார் இவர்கள்

வேட்டுவ குலத்து வந்தவர்கள். பின்னர் விபரம் வரும்.

கண்ண குலத்தார் காணி.

### சிறு முளசை

விநாயகர்

வெங்கடேசப் பெருமாள்

பத்திரகாளியம்மன்

சமாட்சணியம்மன்

கண்ணன் காணி

திருச்செங்கோடு தில்லை வேளாளர் காணி.

சாலி 1607-ல் சிறு முளசை வேட்டுவர் முத்தணன் மகன் செங்கோடன் திருச்செங்கோடு நாகேசுரர் கோயில் ஸ்தூபியைப் புதுக்கி சம்புரோட்சணம் செய்தான்.

### அணிமூர்

லிங்கேசுரர்

செல்ல விநாயகர்

ஆதிகேசவப்பெருமாள்

படைவெட்டியம்மன்

பத்திரகாளியம்மன்

செம்ப குலத்தார் காணி.

திருச்செங்கோடு மலை காவலர் கோவில் பூசகர். கொங்குப் புலவர் காணியாட்சி. செளரிய மாலை கூறுகிறது.

குமரமங்கலம்

சிவன் கோவில் பூஜை செய்யும் கௌண்டனிய கோத்திரம் குழந்தைய்யன் குமாரன் பொன்னய்யன் திருச்செங்கோட்டில் மலைமேல் வைரவன் கோவில் சிகரத்தை நன்கு பெறக்கட்டி வைத்துள்ளான். ( திருப்.330)

பழனிவேலு உபாத்தியாயரென ஒரு புலவரிருந்தார். அவர் திருச்செங்கோட்டுப் புராணத்துக்கு உரையெழுதிய சிற்றம்பலக் கவிராயரிடத்துப் பாடம் கேட்டுக் கொண்டவர். இவர் பல பாட்டுகள் பாடியிருக்கிறார். லோபர்களுக்குப் புத்தி வரும்பொருட்டு லோபி நாடகம். இரண்டு நூல்களியற்றியுள்ளார். கேட்பவர்கள் உலோப குணத்தை உபயோகிக்க மாட்டார்கள்.

படிக்காசுப் புலவர் வந்தபொழுது மோரூரருகிருந்த பாகம் பிரியான் என்ற புலவரின் மரபினராம்.

சுந்தரபாண்டீசுரர்

பங்கஜவல்லியம்மன்

விநாயகர்

சுப்பிரமணியம்

பெருமாள்

பொன்காளி அம்மன்

அங்காளம்மன்

குமாரபாளையம் என்கிற மண்டகப்பாளயத்தில் குடியிருந்து வரும் குமாரமங்கலம், தூரகுலத்து மசவேல கவுண்டன் மனைவி வளளியம்மாள் திருச்செங்கோடு மலைவழியில் ஒரு மண்டபங்கட்ட ஆரம்பித்தாள். பாக்கி வேலையை முடித்தபடியால் செட்டியாக் கவுண்டன் மண்டபம் எனப்படுகிறது. இரக்கம் கைலாயநாதரா லயத்தில் தாண்டலேசுரர் குறடும், மலைவிநாயகர் குறடும், மலைமேல் நடராஜர் குறடு முதலிய திருப்பணி செய்திருக்கிறான். இவனது ஏனாதி நாதர், ஏழு நாக கன்னியர்கள், நாரி திலகம், ஏலநாரி குஞ்சரிகம், கமல ரேகை, கமலடுக தனிகம், கமலகதனி, கமலகேயூரி, கமலமாலிகை.



சந்ததியார்கள் குமாரமங்கலம் பொன்காளி அம்மன் கோவிலை உத்சவம் செய்து விழா நடத்தி வருகிறார்கள். நிற்க.

பின்பு, அரய நாட்டு வெங்கம்பூரில் குடியிருந்து வந்த ஒற்றைக்கால் சடையகவுண்டன் என்பவனுக்கு நான்கு பிள்ளைகளில் 2 வது பிள்ளை சின்னணன் குமாரமங்கலம் போக்கம்பாளைத்தில் நரிவேட்டுவன் என்பான் பாரபத்தியம். அவனிடம் சின்னணன் மணியம் வேலை பார்த்து வந்தான். இவன் வேலைத் திறத்தால் வேட்டுவனை நீக்கி இவனுக்குப் பாரபத்தியம் கொடுத்தார்கள். இவனுக்குப்பின் இவன் தம்பி மகன் நஞ்சயனென்பானுக்குப் பாரபத்திய வேலை கிடைத்தது. கிராமத்துப் பணத்தைத் தண்டிச் செலுத்தவில்லை. விசாரித்து சிறை செய்து விட்டார்கள்.

அதிகாலையில் ஸ்நர்னம் செய்து சிவபூஜை நஞ்சய கவுண்டன் செய்தான். மணியோசை கேட்ட மஹமதிய அதிகாரி வந்து பூஜை யைப் பார்த்து எதுக்காக இப்பூசை செய்கிறாய்? என்று கேட்டார். ஐயா, முஹமதிய ராஜ்ஜியம் பெருக வேண்டுமென்று பூசிக்கிறேன் என்றனன். அதிகாரிக்கு சந்தோஷம் உண்டாயிற்று. கட்டவேண்டிய பாக்கியை சீக்கிரம் செலுத்திவிடு என்று, நஞ்சய கவுண்டனையும் கூட இருந்த ஏழூர் குட்டி கவுண்டன் முதலானவர்களையும் விடுதலை செய்து விட்டார். அவனது பேரன் செங்கோட்டு வேல கவுண்டன் மகன் சி.கைலாச கவுண்டன். இவன் குமாரமங்கலம் சுவாமியம்மன் ஸ்தூபி புதுப்பித்துக் கலசம் வைத்தான். திருச்செங்கோட்டின் ஸ்ரீ அர்த்தனாரீசுரர் ஸ்தூபி புதுப்பித்துக் கலசம் வைத்தான். செங்கோட்டு வேல கவுண்டன் தம்பி கைலாச கவுண்டன் குமார மங்கலம் வகை மிட்டா சன்னது பெற்றான். புதுச் சத்திரத்தில் ஒரு சத்திரம் கட்டி வழிப் போக்கர்களுக்கு அன்னமளிக்கும்படி செய்தான்.

இவன் தம்பி பூசைக் கவுண்டன் என்கிற நஞ்சய கவுண்டன் திருச்செங்கோட்டிலிருந்த கிருஷ்ணப்பையன் என்பவனுக்குக் கலியாணத்திற்குப் பணம் கொடுப்பதாக வாக்குதத்தம் செய்து சமயத்தில் கொடுக்காமையால் அவன் வருந்தி வாடிகல்லிலேறி விழுந்து இறந்தான். அதனால் அபகீர்த்தி நேர்ந்தது என்று மிஸ்டர் லிபானு சேலம் ஜில்லா மானியூலில் எழுதியிருக்கிறார்.

இவன் தம்பி சுப்பராய கவுண்டன் என்பவன் திருச்செங்கோட்டில் நந்தாதீபமும் தளிகை நைவேதனமாதிகளும் செய்வித்தனன். இவன் மகன் பரமசிவ கவுண்டன் ஸ்ரீ அர்த்தநாரீசரர் பிரமோத்சவத்தில் ஒரு மண்டபக் கட்டளையும், விடாயற்று உற்சவமும் செய்வித்தனன். இவர்கள் பூர்வ குடும்பம் பிரிக்கும்பொழுது முட்டாஞ்செட்டி என்னும் மிட்டாவைப் பாண்டீசர் பூசை முதலிய தருமத்துக்கு தரும

சாசனம் செய்யப்பட்டுள்ளது. திடீரென்று இவருக்கு அகாலமரணம் நேர்ந்தது பற்றி யாவரும் வருந்தினர் என்றாலும், இது இவரது இளமையான ஏக புத்திரனின் நல்லதிஷ்டத்தின் முளையாகவு மாயிற்று.

உடனே சர்க்காரில் அவர்கள் பொருள்களைக் காவல் செய்தனர். சர்க்கார் தீர்ப்பில் கோர்ட்டார் வார்சில் வைத்துக் கொண்டார்கள். பிள்ளை மைனர் (சுப்பராயன்) படிப்பு விஷயத்தில் மெத்த அக்கரை செலுத்தினார்கள். வாசித்துத் தேறியவுடன் விவாகத்திற்குப் பிரயத் தலைப்பட்டார்கள். அது போது சின்ன பரமசிவ கவுண்டரது தத்து புத்திரன் கைலாச கவுண்டன், தன் மனையில் முன்னிரவில் சகாவுடன் உணவருந்திக் கொண்டிருக்கும்பொழுது, அப்படியே இழுத்துப் போய்க் கொலை செய்து விட்டார்கள். அவனது பொருளை அபகரிக்கச் செய்த காரியம். ஆதலின் நாம் இங்கு இருக்கப்படாது என்ற நினைவு மைனர் சுப்பராய கவுண்டனுக்குத் தோன்றிற்று. தீங்கினர் தம் கண்ணிற் தெரியாத தூரத்து நீங்குவதே நல்ல நெறி எனச் சிந்தித்துச் சென்னை சார்ந்தனர். அங்கே தன் மனதிற்கு ஒத்த ஸ்ரீமதி ராதாபாய் என்னும் பிராமண மாதினை பிரம சமாஜக் கொள்கைப்படிக்கு மணந்தனர். இந்த மணவினையானது இவரது வமிசமே ஏற்றத்துக்கு வழி கோலியதாக நேர்ந்தது. பின்பு பார்-அட்லா பரீட்சை தேறி வந்தனர். சென்னை, பிரதம மந்திரியுமாயினர். அந்த அம்மாள் இராஜாங்கத்தில் சில உயர்ந்த பதவியும் பெற்றுள்ளார். இங்கிலாந்தில் நடைபெற்ற சர்வகட்சி நாட்டுக் கூட்டத்துக்கு அழைத்தார்கள். சென்றிருந்தனர். மூத்த பிள்ளை மில்டேரியில் உயர்ந்த பதவி பெற்றுள்ளார். இப்பதவி இந்தியருக்கு இது காறும் கிடைத்ததில்லை.

### அகரம்

நீலகண்டீசுரர்
சென்னராயப் பெருமாள்
சூரப்பள்ளியம்மன்
அங்காளம்மன்

இவ்வூரின் பெருமாள் கோயிலை வேள்ளான் செட்டிகள் மிகுந்து சிறப்பாகச் செய்து விமரிசையாக நடத்தி வருகிறார்கள். குசச் செட்டிகள் என்று இவர்களைத் திருச்செங்கோட்டு திருப்பணி மாலை கூறுகிறது. அகரத்துக்குச் சூரப்பள்ளி என்று மறு பெயருண்டு.

இது - அரி அரராய உடையார் காரியத்துக்கு கடவரான பொம்மா சடையார் ஸ்ரீ அர்த்தனாரீசுரருக்கும், சுப்பிரமணியருக்கும் தர்ம



சாசனம் பண்ணிக் கொடுத்தது. ஸ்ரீ அர்த்தநாரீசுரர் கர்ப்பக் கிரகத்தில் தெற்குச் சுவரிலிருக்கிறது. அதில் சூரப்பள்ளி எனக் குறித்திருக்கிறது.

### சௌதாபுரம் (சேதாபுரம்)

மாரியம்மன்
கணபதி
செல்லப்பெருமாள்
பத்திரகாளி அம்மன்
சர்க்கரை முனியப்பன்
பள்ளிக்கூடமிருக்கிறது.

வேட்டுவர் காணி.

### கருமாபுரம்

பாண்டீசுரர்
சென்னராயப் பெருமாள்
செல்லாண்டி அம்மன்
அத்தனூரம்மன்

பொருளந்தை குலத்தார் காணி.

தாரமங்கலம் கட்டி முதலியார் சிதம்பரத்திலிருந்து பரத்துவாஜ கோத்திரத்து ஒரு ஆதி சைவ குருக்களை அழைத்து வந்து அன்பாக ஆதரித்துத் தாரமங்கலம் கோவில் பூஜை செய்யும்படி நியமித்தார். பெயர் சிற்றம்பல குருக்கள். வெள்ளாறு ஆத்திரேய கோத்திரம் சிவசமய பண்டிதர் குமாரத்தி சிவகாமியம்மையை மணந்தார். குழந்தையில்லாமையால் கொங்குநாட்டுக் குருத்துவத்தைக் கொடுத்தார். அமரகோணி காசிப கோத்திரத்து குருக்களிடம் செல்லம் என்னும் கன்னிகையை விவாகம் செய்து கொண்டார். மூத்தவளுக்கு ஆண் மகவு பிறந்தது. பின்பு அடைவே இரண்டு இரண்டு ஆண் குழந்தைகள் பிறந்தது. மூத்த மகனே பட்டத்திற்குள்ளானவன் எனப் பலரும் சொன்னார்கள். இளையாள் சகியாதவளாய் மூத்த பிள்ளையை எவ்விதத்தும் கொன்றுவிடவேண்டுமென்று கருதினள்.

சில துன்மார்க்கிகளால் ஒரு சக்கிலியனைக் கொண்டு சூனியம் செய்ய ஏற்பாடு செய்தாள். கணவன் சிற்றம்பலக் குருக்கள் நேரிற் கண்டார். விசாரிக்க விவரமும் தெரிந்தனர். பயந்து, மூத்த பிள்ளைக்கு சிற்றம்பலம் என்றும், இளையவனுக்கு அழகிய சிற்றம்பலம், மற்றொருவனுக்குத் தில்லைச் சிற்றம்பலம் என்று பெயர்வைத்தார்.

தனக்கு வெள்ளாறு சிவசமய பண்டிதரால் கிடைத்த கொங்கு

நாட்டுக் குருத்துவத்தை மூன்றாக்கி மூவருக்கும் கொடுத்தார். இக்கதை விவரம் பூவாணி நாடு தாரமங்கலம் என்னும் இடத்து விரிவாகக் காணலாம்.

இவ்வூர்க்காணி கொண்டுள்ள பொருளந்தை குலத்து ஒரு வாலிபன் சுயேச்சையாக காங்கேய நாட்டு வழியாகப் போனான். அங்கே காடையூரில்தங்கினான். அவ்வூரில் சேட குலத்தினர் ஆதிக்க முற்றது. அவ்வூர்த் தலைவனுக்கு அருமையான ஒரு பெண் . ஆனால், தேகம் வெண்மை நிறம். அதனால் ஒருவரும் விவாகம் செய்து கொள்ளவில்லை. கருமாபுரத்திலிருந்த வாலிபன் திக்கற்ற ஏழை. அழகன். தாட்டிகமுள்ள வாலிபன். இவ்வூரில் காணி பூமி கொடுத்தால் கலியாணம் செய்து கொள்வதாக அறிவித்தான். சம்மதித்து நடந்தது. காடையூர்க் காணியும் பெற்றான்.மதுரை அரசனால் காங்கேய மன்றாடி எனப்பட்டமும் கொண்டான். இக்கதை விரிவை காங்கேய நாடு, காடையூர் என்னுமிடத்து விபரமாகக் காணலாம்.

தங்கள் தாயாதிகளில் ஒருவருக்கு மீனாட்சி சைவ புரந்தர பண்டிதர் எனப்பட்டங் கொடுத்து காடையூர் மடாதிபதியாக்கினவர் தில்லைச் சிற்றம்பல சுவாமிகளாவார்.

### ஆண்ட சிவசுப்பிரமணிய பண்டிதர்

ஆதி சைவரில் யோக்கியதையுள்ள ஒருவருக்கு ஆசாரியாபிஷேகம் செய்து **ஆண்ட சிவசுப்ரமணிய பண்டிதர்** எனத் திருநாமமிட்டு சந்தான பரம்பரையாகயிருக்கும்படி தங்கள் இடத்துள்ள சான்றா(ணா)ர் குல குருத்துவத்தைத் தில்லைச் சிற்றம்பல சுவாமிகள் கொடுத்தனராம்.

காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் பூஜைகள், கெண்டினிய கோத்திரம். இவர் பூஜையில் அவிநாசிநாதர், கருணாம்பிகை, சுப்பிரமணியர், வள்ளி தெய்வானை, சாரபாண்டீசரர், ஆண்ட தம்பிரான், வீரமாகாளி, பத்திரகாளி,

ஏனாதி சந்ததியார் கேட்டுக் கொண்டதற்கு இணங்கி இக்குருத்துவத்தை ஏற்றுக் கொண்டுள்ளார்.

கொங்கன், கலியாணி நாடார், மதுரையார் கிராமணி நாயக்கர் குருவாக இருக்க வேண்டினர் என்பர்.

இந்த மடத்துக்கு பாண்டிய ராஜன் இந்தக் கிராமத்தை தானமாகக் கொடுத்தான்.

### தேவேந்திரப்பள்ளர்களின் சாமியார்

உழுதொழிலுக்கு உரியவர்களான பள்ளர்கள் என்னும் வகுப்பினர்களுக்குச் சாமியார் (குரு) இவ்வூரிலிருக்கிறார்.



### வட்டூர்

சேகாழி நாதர்

சிவகாமியம்மை

சென்னராயப்பெருமாள்

அத்தனூரம்மன்

அழகுநாச்சியம்மன்

செங்குன்னி குலம்.

செங்குன்னி குலத்தானான ஒரு விவசாயி குழந்தையின்றி மூன்று ஆண்குழந்தைகள் பிறக்கப்பிறக்க இறந்து போயிற்று. பின்பு பிறந்த குழந்தையை குப்பையிற் புரட்டி எடுத்துக் குப்பையென்று பெயரிட்டார்கள். வளர்ந்தது. 7,8 வயது ஆக, பையன் காலையில் எழுந்து சிவாலாயத்துக்குச் சென்று வணங்குவன். யாரேனும் அடியார்களைக் கண்டால், அன்புருகி வணங்கி அவர் விரும்புவதை வீட்டில் வாங்கிக் கொடுத்தனுப்புவன். வெள்ளிக்கிழமை சோமவாரம் மலைக்குப் போவாருடன் சென்று செங்கோட்டு வேலவரையும், ஸ்ரீ அர்த்தநாரீசுரரையும் தரிசிப்பன். பெரியோர்களை வணங்கி அவர்பால் அமர்ந்து அவர்கள் பேசுவதைக் கேட்டிருப்பன். இவ்வாறாகவே காலத்தைப் போக்குவதன்றி விவசாய காரியங்களைப் பார்ப்பதில்லை. தொழிற் செய்ய வற்புறுத்தினால் வருத்தமுறுவன். இவ்வண்ணமாகவே மனங்கொண்டவனாக இருந்து திருச்செங்கோடு மலை வந்து தங்கினான். புற்கள் முதலியவற்றைக் களைந்து விடு வன். பெற்றோர்களும், மற்றோர்களும் வீட்டுக்கு வாவென்றால் இதைவிட வேறு வீடு சிறந்தது இருக்கிறதா? என்பான். ஆலயத்துப் பசுக்களைக் கழுவி தீனிபோட்டுப் பாதுகாப்பான். கறவைப் பசுக் களை பால் கறந்து பாலைச் சுவாமி அபிஷேகத்துக்கு உதவுவன். கோயில் பிரசாதம் வாங்கி அருந்துவன். அங்கேயே படுத்து உறங்குவன். இப்படியிருந்து, திருக்கோயிலுக்குக் கிழக்கே ஒரு சிறு குகையிலிருந்து வசிக்க ஆரம்பித்தான். அதைச் சூழசத்திர தீர்த்தத்தை அடுத்து செடி பூண்டுகளைப் பார்த்து நீக்கி நந்தவனம் வைத்துப் பூப்பணிவிடை செய்தான்.

**குப்பணப்பரதேசி** என்று வந்து வணங்கி இவ்வித நோய் இருக்கிறது என்றால், விபூதி கொடுத்தால் நீங்கிவிடும். இதனால் சுவாமியைத் தரிசித்து இவனையும் வந்து பார்ப்பார்கள். யாரேனும் பெரியார்கள் பசித்திருக்கக் கண்டால் பால் அருந்தக் கொடுப்பான். தான் அன்னமருந்துவதில்லை. இவரைப் பற்றிய விபரம் இப்புத்தகம் (84) பக்கத்திலிருக்கிறது.

## மணவி

நாகேசுவரர்

சிவகாமியம்மை

சுப்பிரமணியர்

கணபதி

வேணுகோபாலகிருஷ்ணன்

கரிய காளியம்மன்

செம்பகுலம் - காணியாட்சி.

இவ்வூரில் வணிகர் குலத்தில் சின்னம்மாள் எனப்பெயர் கொண்ட ஒரு மாது இளமையிலேயே புருஷனைத் தோற்றுக் கைம்மை வடிவுற்றனள். தினமும் நாகேசுரர் தரிசனம் செய்கின்ற நியமம் பூண்டவள். இராக்கால தரிசனத்துக்கு எந்நேரம் கோயிலுக்குப் போனாலும் ஆண் மக்கள் நெருங்கி இருப்பார்கள். வழிவிடுவதில்லை. நேரமாகிறது சற்று வழிவிடுங்கள் வீட்டுக்குப் போக வேண்டுமென்றாலும் சொந்தக்காரராகிய நாங்களெல்லாம் தரிசனம் செய்து பிரசாதம் பெற்று வெளிக்கிளம்பின பிறகே மற்றை வகுப்பினர் தரிசனம் வரவேண்டுமென்பார்கள். இதனால் இந்தப் பெண் மெத்த மனக் கவலை கொண்டு வருந்துவள். ஒரு நாள் இந்தப் பெண் சீக்கிரம் போக வேண்டுமென்று வரவே வழி விடவில்லை. நெருங்கிக் கொண்டனர். இந்தப் பெண் கொள்ளும் மனக்கவலைக்காற்றாத நாகேசர், சில நாகங்களை வெளியிலிருந்து வரச் செய்தனர். பெரிய நாகங்கள் சீறி படமெடுத்தாடிக் கொண்டு வந்தன. எல்லோரும் கலங்கி ஓடிவிட்டார்கள். இந்தப் பெண் உட்சென்று தரிசனம் செய்து திரும்பினாள். குத்துக்கோல், தடி, வெடிகுழாய் எடுத்துக் கொண்டு பாம்புகளைக் கொல்ல வேண்டுமென்று உட்சென்றார்கள். பாம்புகள் சுவாமி மடியிலும், அடியிலும், உத்தரீகம் போலவும், மாலை போலவும் தொங்கி அசைந்து கொண்டு இருந்தன. இது ஏதோ புதுமையாக இருக்கிறது என ஆச்சரியப்பட்டார்கள். அங்கு வந்திருந்த ஒரு ஐந்து வயது சிறுமி மீது ஆவேசம் வந்து இங்கு என் ஆலயத்துக்கு வரும் அன்பர்கள் தாராளமாக தரிசனம் செய்து போவதற்கு இல்லாது, நாம் உயர்ந்த ஜாதி என்று மமதிற் தருக்குற்று வம்பு செய்வதை நீக்குவதற்காகவே நாக பாம்புகளை விட்டோம். இனி நீங்கள் இவ்வாறு செய்தல் கூடாது என்றும் புகலச் சொல்லாமற் சொல்லிற்று. கேட்டார்களெல்லாம் சந்தோஷமுற்றார்கள். புளகாங்கிதமுற்று செட்டிப் பெண்ணின் பக்தியை வியந்தார்கள்.



## கோக்களை

நாகேசுவரர்

கந்தசாமி

பொன்காளி

கண்ணன். செல்லன் காணியாட்சி.

முளசைக் கண்ணர்களில் ஏமப்பள்ளிக் கரையைச் சார்ந்த வேல கவுண்டன் மகன் வேல கவுண்டன் என்பவன் ஒருவனிருந்தான். அவன் பக்தி வாய்ந்தவன்.

அவன் திருச்செங்கோட்டு வடக்குவாசல் கோபுரத்தின் முன் பெரிதான ஒரு விநாயகனைப் பிரதிஷ்டை செய்தான்.

(திருப்பணி மாலை -396)

விஜயநகரத்து அரசர்களின் பெரிய அதிகாரி ஒருவர் பிரதோஷத் தரிசனத்துக்கு வருவதாகத் தெரிவித்திருந்தார். பிரதோஷகாலம் வந்தது. தரிசனத்துக்கு வரலாமா என்று ஆள் அனுப்பினார். சுவாமி வாகனத்திலெழுந்தருளியாகவில்லை. வாகனம் முறிந்து கீழே கிடந்தது. ஏன் தாமதமென்று கேட்டார்கள். குருக்கள் வேறு சொல்ல வகையற்றவராய் கைலாசத்திலிருந்து நேரே வந்ததால் கோக்களையாக இருக்கிறது என்றார். அப்படியா என்று தேற்றுங்கள் என்றனராம். அதனால் அன்று முதல் அவ்வூரைக் கோக்களை என்றழைக்கிறார்கள்.

## உஞ்சினி

பொன்காளி அம்மன்

கண்ணன். காரி காணியாட்சிக்காரர்கள்.

## கூத்தன்பூண்டி

சிவலிங்கப் பெருமான்

புவனாம்பிகை

பூலோகநாதப் பெருமாள்

காளியம்மன்

அத்தனூரம்மன்

செம்பூத்தன், ஆந்தை, விலயன் காணியாட்சி.

## ஆனங்கூர்

சக்தியீசுரர்

சௌந்திரவள்ளியம்மன்

பாலசுப்பிரமணியர்

வரதராஜப்பெருமாள்

கரிகாளியம்மன்

கொங்காளம்மன்

கண்ணன், காடை, காரி (பனங்காடை) காணியாட்சி.

கொக்கராயன்பேட்டை

இது காவேரியின் கிழக்குக் கரையிலிருக்கிறது. பிரவாகம் வந்தால் திருமதில் ஓரமும் வரும்.

பிரமலிங்கேசுவரர்
சௌந்திராம்பிகை அம்மன்
வேணுகோபால் சுவாமி

கோயில் நன்றாகவும், கல்வேலை நயமாகவும் இருக்கிறது. கற்ப கிரகம் பெரிது. பிரம ஈசுரரும் சுமார் 7 அடி உயரம். கோவில் தென்புரம் சுவரில் சாலி 1453 கி.பி. 1530-ல் விஜயநகரம் வீரப்பிரதாப அச்சுததேவ மஹாராயரால் தகடபபடிபாளையம் என்னும் வடிவுடைய அம்மை புரத்தை கிருஷ்ண தேவராயருடைய ஏஜண்டு காமநாயனாரால் பிரமேசுரனுடைய தம்பிரானார் கோயிலுக்கு தானம்.

கோயிலுக்குக் கிழக்குச் சுவரில் வீரப்பிரதாப கிருஷ்ண தேவ ராயரால் சகம் 1438 ஈசுவர வருஷம் தையில் சங்கமபுரம் என்கிற கிராமத்தை தானம் செய்தது. இந்த ராஜாவுக்கு ராஜாக்கள் தம்பிரான் என்ற பட்டமும் காணப்படுகிறது.

வீரப்பிரதாப கிருஷ்ணதேவ மஹாராயர் சாவதாரியில், பிரமேசுரர் கோயிலின் உபயோகத்துக்காகவும், மராமத்துக்காகவும் நாட்டியக் காரன் சம்ரட்சணைக்காகவும் இரண்டு கிராமங்கள் தானம் செய்த அதே சுவரில் மற்றொன்றுமிருக்கிறது.

கோவிலில் கட்டப்பட்ட 4 நலத்தின் பேரில் ராஜகேசரிவர்மன் என்கிற சக்கிரவர்த்தி குலேபித்துக்க சோலதேவ (1) ராஜ்ஜிய வருஷம் 4-வது வீரசோழ மண்டலம் என்கிற கொங்கு கீழ்கரை......... மங்கலத் திலுள்ள பிரமேசுரமுடையார் கோயிலின் நைவேத்தியாதிகளுக்கு ஏற்பாடு கங்கை கொண்டான் அம்மையப்பன் என்கிற மாதவராஜர் சக்கிரவர்த்தின் சௌக்கியத்துக்காக.

இவ்வித சாசனங்களிருக்கின்றன.

கண்ணகுலத்தார் காணி.

**தேவணான் குறிச்சி**

செவ்வந்தீசுரர்
செங்கைவல்லியம்மன்
சுப்பிரமணியா
கணபதி
தேவராயப் பெருமாள்
பச்சைநாச்சியம்மன்



அத்தனூரம்மன்
படைவேட்டம்மன்

காடைகுலத்தார் காணி.

சாரமாமுனிவர் என்பவர் மிகுந்த சிவபக்தியுள்ளவர் திருநந்தவன திருத்தொண்டு புரிவதில் மிகுந்த ஆசை கொண்டவர். இவர் திருச்சி னாப்பள்ளியில் ஒரு திருநந்தவனம் வைத்தனர். பரமசிவத்துக்கு செவ்வந்திப்பூ மிகுந்த விருப்பமென்று தெரிந்தார். பல உலகங்களி லிருந்து பலவகையான செவ்வந்திச் செடிகளைக் கொண்டு அந்த வனம் நிறையப் பயரிட்டார். தினமும் புஷ்பங்களை அன்புடன் ஜாக்கிரதையாக எடுத்துப் பல பல வகையாகக் கட்டித் தொடுத்துக் கோர்த்துச் செவ்வந்தி மலராலேயே தாயுமான பெருமானாரை அலங்கரித்து தரிசித்து மகிழ்ந்து வரும் கடைப்பாடுடையவராக இருந்தார்.

அப்பொழுது பராந்தகன் என்னும் சோழன் உறையூரில் அரசு புரிந்தான். கி.பி. 997-லிருந்தான். இந்தச் செவ்வந்திமலரை அவ்வரசன் ஆட்கள் திருடிக் கொண்டு போய் அரசன் மனைவியர்க்குக் கொடுத்து வந்தார்கள். பூக்கள் தினமும் களவு போவது கண்டு கள்வனைப் பிடித்தார். அரசன் ஆளாக இருந்தமையால் அரசனுக்குப் பலமுறை அறிவித்தனர்.

முனிவர் குறையை மன்னன் கேட்கவில்லை. திரிசிராமலை யாண்டவரிடம் முறையிட்டார். அவரும் விசாரிக்கவில்லை. மனம் வருத்தங்கொண்டார். அங்கு நின்றும் புறப்பட்டு கொங்குநாடு புகுந்தார். கீழ்கரைப் பூந்துறை நாட்டிலே தேவணாங்குறிச்சி யென இப்பொழுது அழைக்கப்படும் ஊரில் தங்கினார். அவ்வூர் நல்ல பூசாரமுடையதாயும் சிறந்த பெரிய தீர்த்தமுடையதாயும் இருக்க நோக்கினார். அவ்விடத்துத் திருநந்தவன மராமத்து, நல்ல சாமந்திப் பயிரிட்டுப் பூக்கொய்து தொடுத்து அங்கு எழுந்தருளியுள்ள பரமேசுரர் திருமேனியிற் சாத்தித் தொழுது வந்தார். அதனால் அந்தச் சிவ பெருமானைச் சௌந்தீசுரர் என அழைக்கத் தொடங்கினார்கள்.

முக்கியமான நல்லன்பரான சாரமாமுனிவர் மனம் வருந்தி வேற்றூர் சென்றதைத் திருவுளங்கொண்ட சிவபெருமான், முனிவர் பணிவிடைக்கு விரோதமாகப் பூக்களைக் களவாடிய துரோகிகளை விசாரியாது விடுத்திருந்த அரசன் வசிக்கும் உறையூரை மண்மாரியால் அழிவுறச் செய்தார். இதனைச் சாரமாமுனிக்குக் கனவிலறிவித்தார். விழித்து பரமசிவத்தின் தண்ணளியை வியந்து பாராட்டி இந்தச் செவந்தீகரரைத் தொழுது, திரிசிராமலை சென்று தாயுமானாரை வணங்கி அங்கு பழய திருநந்தவனம், புட்ப தொண்டு புரிந்து வந்தார்.

அதனால் தாயுமானவார்க்கும் செவ்வந்தீகரரென திருநாமம் விளங்குகிறது. தேவணாங்குறிச்சி நகரிலும் தன் அடியார்களைக் கொண்டு புட்பப் பணி நடந்து வரச் செய்தனர். இங்குள்ள பரமேகரரும் செவ்வந்தீசரரெனப் பெரியோர்கள் வணங்குகிறார்கள். சிவ பெருமானும் வணங்கிணார்க்குத் திருவருள் புரிகின்றனர்.

காடச்சி நல்லூர்

கணபதி

அழ்கு சிங்கப் பெருமாள்

சாமுண்டியம்மன்

கண்ணன், காடை, ஆவன் காணியாட்சி

மாவிரட்டிபட்டி

பிரமேகரர்

விசாலாட்சியம்மன்

குமாரசுப்பிரமணியர்

கணபதி

வடமலைராயப் பெருமாள்

ஓங்காளியம்மன்

செல்லாண்டியம்மன்

முளசை - கண்ணன், பொருளந்தை, பயரன் காணியாட்சி.

லத்திவாடி

விநாயகன்

லட்சுமிநாராயணப் பெருமாள்

உக்கிரகண்டியம்மன்

செம்பன் குலத்தார்கள் காணி

இவ்வூரில் ஒரு காலத்தில் ஒரு வேளாளப் பெண் வடிவழகியாக இருந்தாள். அவள் தினமும் காலை மாலைகளில் கோவில் வலம் வரும் நியதி பெற்றவள். யவ்வன காலத்தில் புருஷன் இறந்து விட்டான். அவளுக்குக் கொஞ்சம் பொருளுண்டு. அதை அபகரிக்கும் நோக்கத்தோடு அவன் பங்காளி இருந்தான். அவன் அவ்வூரருகாமையிலுள்ள திக்கற்றவர்களை பல விதத்திலும் ஏமாற்றி பறிப்பான். இறந்தவனுக்கு குழந்தையில்லாமையால் இதைத் தான் கைக்கொள்ள விரும்பினான். அவ்விளங்கைமையையும் தனக்குள்ளாக்க முயற்சித்து வந்தான். இவ்வாறு சில மாதங்கள் செல்லவே அப்பெண் சூல் கொண்டனள் எனத் தெரிந்தது. இவள் விபசாரத்தால் புருஷன் இறந்த பின் உண்டாயிருக்கிறாள் என்று ஊர்கூட்டி இவளை ஜாதி யிலிருந்து நீக்க வேண்டுமென்று பேசினான். அந்தப் பெண் தனக்கு ஒன்றுந்



தெரியாது. உங்கள் இஷ்டம்போல்போல எப்படியோ பேசுங்கள் என்றது. வழக்குத் தொடுப்பவன் வாயாடியானதால் ஒருவரும் பெண்ணுக்குப் பரிந்து பேசவில்லை. அந்தப் பெண் சபையாரைப் பார்த்து ஐயா கவுண்டர்களே எனக்காக இங்கே பரிந்து பேசுவாரில்லை. ஆனதால் கோயிலி லிருந்து தீர்ப்புச் சொல்லுங்கள் எனக் கேட்டுக் கொண்டனள். அப்படியே எல்லோரும் கோயிலில் உட்கார்ந்தார்கள். என்னை விபசாரியென்று எழுந்து இவர் சொல்லி விட்டதும் என்று அப்பெண்மணி சுவாமியைப் பார்த்து ஏழை பங்காளா பெண்ணுக்கிரக்கங் கொண்டு சத்தியத்தை நிலை நிறுத்து என்று இரண்டு கைகளையும் மார்புக்குப் பிடித்துக் கொண்டு வேண்டினன். இவன் எழுந்து இவள் விபசாரிதான் என்ற வாய் மூடுமுன் ஐயோ என்னமோ கடித்ததே என்றான். அப்படியே விழுந்து விட்டான். மாண்டான். எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். அவன் பெண்ஜாதி ஓடோடியும் வந்து இந்தப் பத்தினியை என் புருஷன் கெட்டவளென்றதால் இறந்ததாக நினைக்காதீர்கள். அது நிசமானால் அவர் சொன்னது தப்பிதம் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். எழுந்தால் பத்தினி சொல் பலித்தது எனலாம் என்றனள். அப்படியே சுவாமியை வேண்டு அம்மா என்றார்கள். சுவாமி எனக்கு ஒன்றுந் தெரியாது. இவரை பிழைக்கும்படி செய்யப்பார் என்று விழுந்து கும்பிட்டு வேண்டினாள். தூக்கம் நீங்கினவனைப்போல எழுந்து நான் செய்தது தப்பு என்று அந்தப் பெண்ணை வேண்டினன். சுவாமியின் அருளை வேண்டினன். எல்லோரும் ஆச்சரியப் பட்டார்கள்.

பட்டிலூர்

கணபதி

அகத்தீகரர்

நட்டாற்றீகரர்

அஞ்சபோதிப்பெருமாள்

செல்லாண்டியம்மன்

கண்ணன் காணியாட்சி

நட்டாற்றுமலை என்பது சேலம் ஜில்லாவைச் சார்ந்தது. நடுக்காவேரியிலிருக்கிறது. சுமார் 100-அடி உயரமிருக்கலாம். செய்குன்று என்னலாம்பாடி நடு ஆற்றிலிருக்கிறது. பரசிலில் சென்றே மிகுதினங்கள் பூசிக்க வேண்டியது. மலையின் மேற்பரப்பு 50 முழம் தென்வடல், 40 முழம் கிழமேலும் இருக்கும். நட்டாற்றிலிருப்பதால் நட்டாற்றீகரர் எனத் திருநாமம் வழங்குகிறார்கள். அகத்தீகரர் என்பது திருநாமம். உமாதேவியார் அன்னபூர்ணியம்மையார், நல்லநாயகி

யம்மை என்னும் திருநாமமும் உண்டு. சுவாமி 3 அங்குல உயரமாக வும், ஒரு அடி அகலமாம். பாணிவட்டமுமில்லை. மலைக் கொழுந்து, சுயம்புமூர்த்தி, தனித்தனி பஞ்சமூர்த்திகளாலயங்க ளிருக்கின்றன.

முற்காலத்து அகத்தியர் கும்பத்தில் வெண்மை நிறமாய் குறுகிய உருவாய்ப் புறிந்தமையால் குறுமுனி எனப் பெயர் பெற்றனர்.

' அன்னவரிருவர் தம்முள் அகத்தியன் சுவேதமேனி, மன்னிய கரங்கண்ணாங்கு கமண்டலமக்கமாலை, மின்னவர் சடையினோடு முத்து மெய்த்தவங்களாற்றித் தென்மலைவை தனூன்று திரைகடலி லொளித்து முன்னாள்.'

கடலிலொழித்திருந்த அசுரர்கள் பூலோகத்தில் வந்து தருமம் பரவாது தீமை செய்து வந்தார்கள். இதனையோர்ந்த அகத்தியர், சமுத்திர நீரையெல்லாம் உழுரதளவாக்கியருகினார். கொடிய அரக்கர் முதலிய துன்மார்க்கர்கள் ஏககாலத்தில் மாண்டார்கள். இது உலகத்துக்கு உபகாரமான புண்ணியச் செயல் பல உயிர்கள் மாண்டு போயின. ஆதலின் முனிவர் இப்பாவம் நீக்க வேண்டி, காவேரி நடுவே உள்ள புண்ணியகிரி வந்தெய்தி மலைக்கொழுந்தான சிவலிங்கப் பிரானை ஆகம யுத்தமாகப் பூசுத்து இங்கு சில பகல் தவம் புரிந்தனர். மன நிம்மதியுற்றனர்.

பட்டுப்பூச்சிகளால் பட்டு உற்பத்தி செய்யப்பட்டு வந்தமையால் பட்டினூர் எனப் பெயராயிற்று என்கிறார்கள்.

### கனியனூர்

கணபதி

தியாகராயப் பெருமாள்

கலியாண வெங்கடரமண சுவாமி

காளியம்மன்

புல்லவேட்டுவன்

### மண்டபத்தூர்

விநாயகன்

பெருமாள்

பொன்காளியம்மன்

கண்ணன்.

### தோக்கவாடி

தொந்திக்கணபதி

வல்லவராயப் பெருமாள்

காகத்தலைச்சியம்மன்



கன்னன்

வெண்டுவன்

காடை - காணியாட்சி

### சித்தளந்தூர்

வெள்ளை விநாயகா

சிகாழிநாத ஈசுரர்

சிவகாமியம்மன்

கரியபெருமாள்

படைவெட்டம்மன்

அத்தனூரம்மன்

கண்ணன். சேரனுக்குக் காணி

சிவாலயத்தில் உள்ள சாசனம். ஸ்வஸ்தி ஸ்ரீ விஜயாப்துதய சாலி 1455 (532)-ன் மேல் செல்லா நின்ற சுபானு வருஷம் கார்த்திகை மாசம் 2 ந்தேதி பௌர்ணமியும் ஞாயிற்றுக் கிழமையும் பெற்ற புண்ணிய காலத்திலே ஸ்ரீமான் ராசாதி ராசன் ராசபரமேசுரன் ராசமார்த்தாண்டன் பூர்வ தட்சண பச்சிம உத்தர சமுத்திராபதி எம்மண்டலமும் கொண்டருளிய ஸ்ரீ வீரப்ரதாபர் கிருஷ்ண மஹாராயர் பிரிதிவி ராஜ்ஜியம் பண்ணியருளாநி ர்ற காலத்து முளராய் சார்ந்த எயினூர்ச் சாவடி செங்கோல் செலுத்தும் திரியம்பக உடையார் காரியத்துக்குக் கடவரான சரமநாயனார்க்கு நடக்கிற காலத்தில் எழுகரை பூந்துறை நாட்டு மோரூரில் திருமலை காங்கயன் சீமையான சிற்றமூந்தூரில் எவ் காணி சொத்தில்....... என்று காணப்படுகிறது.

இது இப்பொழுது மிட்டாவாக இருக்கிறது. இதைச் சித்தளந்தூர் புளியம்பட்டி என இரு பிரிவாக்கி அனுபவிக்கும் முத்துசாமிக் கவுண்டர், நஞ்சப்ப கவுண்டர் என்பவரின் தந்தை சமீபத்தில் காலமானார். அவர் கல்வி, கேள்வியில் பிரியமுள்ளவர். கல்விவான் களிடத்தில் மிகுந்த அன்பினர். கல்வி சமயம் விருத்தி காரணமாக விவேக திவாகரன் என்னும் பத்திரிகை நடைபெறுவதற்கு ஒரு அச்சி யந்திரம் வாங்கி உதவினார். சங்ககிரி சென்னகேசவப் பெருமாளை யாரோ பிடுங்கிவிட்டபொழுது அஷ்டபந்தன சம்புரோட்சணம் சிறப்பாகச் செய்தனர்.

திருச்செங்கோடு ஸ்ரீ கைலாசநாதர் ஆலயத்துக்கு கதவு அமைத்துக் கொடுத்தனர். இவரது மூதாதை சபாபதிக் கவுண்டனால் சங்ககிரி சென்னகேசவப் பெருமாள் உத்ஸவ மண்டபக் கட்டளை, மண்டபம்,

தேர், எல்லவராயப் பெருமாள் தேர், அக்கமாப்பேட்டை தீர்த்தவாரி மண்டபம் இவைகள் செய்விக்கப்பட்டன. இவனது தந்தை கைலாச கவுண்டரால் சோமேசர் கோவில் முன்மண்டபம் கட்டப்பட்டது. சங்ககிரி மிட்டாவின் ஒரு பகுதியை, ராமசாமி பிள்ளையிடம் விலைக்கு வாங்கினான். மற்றொரு பகுதியை இவர் மகன் மேற்கண்ட சபாபதி கவுண்டனால் 1875-ல் (ராமசாமிபிள்ளை மகன் சாமிநாத பிள்ளையிடம் வாங்கப்பட்டது)

### கத்தேரி

விகநாதேசுவரர், விசாலாட்சியம்மை, கடம்ப வேலாயுதர், பெரிய திம்மராயப் பெருமாள், செல்லாண்டியம்மன் முதலிய கோயில் களிருக்கின்றன.

கண்ணகுலத்தார் காணியாட்சி தகடப்பாடியிலும் இவ்வூரிலும் ராட்சதக் கவுண்டர் மகன் இருந்துக் கொண்டு ஏழு ஏரிகள் கட்டியிருக் கிறார்கள் என்று தகடப்பாடியில் கூறப்பட்டிருக்கிறது.

### ஆலத்தூர்

ஆலத்தூரிலிருந்த சிவலிங்கப் பெருமான், அம்மன் விநாயகர் முதலிய மூர்த்திகளது கோயில் சிரணமாய் விட்டபடியால் சென்ன ராயப் பெருமாள் கோயிலில் வைத்துப் பூசை நடந்து வருகிறது.

செல்லாண்டியம்மன். வல்லிபுரம் பண்ணைகுலத்தார்கள் காணியாட்சி பெற்று வருகிறார்கள்.

### குமாரபாளையம்

இவ்வூருக்குச் சமீபத்தில் குமாரபாளையம். காவேரிக்கு பாலங் கட்டப் பட்டிருக்கிறது. இங்கே பட்டாள அம்மன் கோயிலிருக்கிறது. இருபத்து நான்கு மனையார் ஆன தெலுங்கச் செட்டிகளுக்கு முக்கியமான தெய்வம். இதன் திருவிழாக் காலத்தில் வேறு வேறு ஜில்லாக்களிலிருந்தும் வருகிறார்கள். விசேஷமான வேடிக்கைகள் நடப்பதுண்டு.

### வேட்டுவர்

குறுப்பி நாடு

திங்களூர் - அப்பிச்சி - ஈட்டிமாரன் - காட்டுவேட்டுவன்
நல்லாயுதமாரன்

திடுமல் - மாரப்பன் காட்டுவேட்டுவன் கீழ்கரை அரையநாடு

சிங்காநல்லூர் - சுத்திமாறன் வேம்ப வேட்டுவன்

ஒடப்பள்ளி - ராக்கியண்ணன் ஓசர வேட்டுவன், கீழ்கரைப்
பூந்துறைநாடு



இவர்கள் பிரபலமாக அங்கங்கே வாழுங்காலத்தில் திங்களூரில் 72 குலத்துப் பிள்ளைகள் படித்தார்கள். ஒருவரைவிட்டு ஒருவர் கலியாணம் செய்து கொள்வதில்லை என்ற சத்தியம் செய்து கொண்டார்கள். ஒரே காலத்தில் கலியாணம் செய்து கொள்ளுமாறு ஒரு ஊரில் 72 குலத்துக் குமரர்களுக்கும் கலியாணம் முடிக்கத்தக்கபடி 72 குலத்துப் பெண்களை இந்த மட்டில் கிட்டவில்லை. ராக்கியண்ண னிருக்கும் ஒடப்பள்ளி பெரிய ஊரானதால் 72 குலத்துப் பெண்களி ருப்பதாகத் தெரிந்து கொண்டார்கள். பெண்களைப் பேசி நிச்சயம் செய்து கொண்டார்கள். இப்படியுள்ள காலத்து, அரசறா மணியில் பூவாணி வேட்டுவன் ஒருவன் பிரபலமாக இருந்தான். இவனது வேட்டை நாய்களுக்கு ஒரு பொதி கம்பு, சோறு ஆக்கி ஒடைப்பள்ளிப் பாழியில் கரைத்து வைப்பது வழக்கம். ஒடைப் பள்ளியார் வைத்திருந் தார்கள். கலியாணம் செய்துகொள்ள வரும் சம்பந்திகள் பார்த்து இப்படி ஏன் செய்ய வேண்டும் என்று கேட்டார்கள். செய்யாவிடில் படையுடன் வந்து கொள்ளை அடிப்பான் என்றார்கள். சோறு கரைத்துவைக்கும் பாழியில் எருமைச் சாணியைக் கரைத்து வையுங்கள் என்றார்கள். அப்படியே செய்ய, நாய்கள் வந்து முகர்ந்து பார்த்துவிட்டு ஊளையிட்டுத் திரும்பி விட்டன.

ஒடப்பள்ளிக்கு அப்பால், பாதரைக்கடுத்து வெப்புலி மேட்டில் ஒரு ஆள் மாரளவு உயரம் கொளிஞ்சிகள் நிறைய முளைத்திருந்தது. ஒன்றோடு ஒன்று முடிபோட்டு வைத்துவிட்டால் நாயைக் கண்டு கோபம் கொண்டு அரசராமணி வேட்டுவன் படையுடன் வருவான். முடிபோட்ட கொளிஞ்சி தடுக்கி விழுவார்கள். அப்பொழுது கட்டி விடலாம் என்றார்கள். அப்படியே செய்தார்கள்.

ஒடப்பள்ளியில் 72 மாப்பிள்ளைகளுக்கும் பெண் நிச்சயம் செய்து கலியாணத்துக்கு ஆரம்பித்துக் கங்கணம் கட்டியாயிற்று. அந்த சமயத்தில் பூவாணி வேட்டுவன் தன் கூட்டங்களுடன் வந்தான்.

இந்த 72 மாப்பிள்ளைகளில் ஒருவனை வெட்டிவிட்டான். எதிரி களைக் கொல்லாது விடுவதில்லை என்று சபதம் செய்துகொண்டு, புறப்பட்டார்கள். ஒருவரோடொருவர் வெட்டிப் பலர் மாண்டார்கள். சிலர் மாண்டதால் இனி நாம் கலியாணம் செய்து கொள்வதில்லை. நமக்கு நாமே வெட்டுண்டு மாள வேண்டுமென்று மாண்டார்கள். மற்றவர்கள் எல்லோரும் வெப்புலி மேட்டில் வெட்டுப்பட்டு இரு தரத்தினரும் மாண்டு போனார்கள்.

இது சேதியறிந்த கலியாணக் கோலமாய் கைக்குக் கங்கணம் தரித்துள்ள 72 கன்னிகைகளும், இனி நாம் வேறொருவரை மணம் செய்து கொள்வதில்லை என்று சபதம் கொண்டு காப்பறாமலை

மேல்புரம் அருகில் ஊப்பிடாச்சுனை (காணாச்சுனை இடத்துத்) தன் தாய் தகப்பன்மார் சகோதரர்களிடம், தாங்கள் வீரமாதர்களாகவே தீக்குழியில் விழுந்து வீரசொர்க்கம் புகுவோம். பெரிய தீக்குண்டம் செய்யுங்கள் என்றார்கள். அப்படியே செய்கிறோமென்று பெரிய குண்டம்தோண்டி கட்டைகளை மலைபோற் குவித்து நெருப்பை மூட்டிவிட்டார்கள். இப்பெண்கள் தாங்கள், தாங்கள் காதலித்துள்ள கணவன் தலையைத் தேடி எடுத்து, ஒரு தட்டத்தில் ஏந்திக்கொண்டு ஸ்ரீ அர்த்தநாரீசுரரையும் நாகேசுரரையும் உள்ளத்தில் நினைந்து, யாருக்கு விவாகம் செய்து கொடுப்பதாக எங்கள் பெற்றோர்கள் நிச்சயித்தார் களோ, நாங்களும் அவ்வாறே குறித்தேமோ அந்தப் புருஷனுடன் அடுத்த பிறப்பில் சேரும்படி அநுக்கிரகிக்க வேண்டுமென்று பலமுறையும் நாககிரியைப் பார்த்துத் தோத்தரித்துத், தனித்தனி ஒவ்வொருவரும் கணவன் தலையை எடுத்து ஏந்திக் கொண்டு நெருப்பில் குதித்து சிவனடி சேர்ந்தார்கள்.

### துவைத சித்தாந்தமத குருவாகிய
### முளபாகல் மடத்தின் ஒரு கிளை

கீழ்கரைப் பூந்துறைநாட்டில் இப்பொழுது காவேரி ஸ்டேஷன் உள்ள இடத்து, ஓடப்பள்ளி என ஒரு ஊர் இருக்கிறது. அது பல ஆண்டு களுக்கு முன் ஒரு முகம்மதிய அரசனால் மேற்குறித்த மதாசாரியாருக்கு அக்கிரார மானியமாகக் கொடுக்கப்பட்டது. அத்துடன் சந்நியாசி பட்டி முதலியனவும் சேர்ந்தது. காவேரியின் கீழ்கரை ஓரத்தில் மூல புருஷனுடைய பிருந்தாவனம் (சமாதி) வைக்கப்பட்டது. அவ் விடத்தே காலக்கிரமத்தில் ஐந்து பிருந்தாவனங்கள் வைக்கப்பட்டிருக் கின்றன. இது பள்ளியபாளையம் என்ற ஊர். ஆராதனங்கள் நடந்து வருகின்றன. மனோரம்மியமாக இருக்கின்றன.

அவர்கள் திவ்விய நாமங்களாவன:-

லட்சுமிமனோகர சுவாமிகள்

லட்சுமிபதி சுவாமிகள்

கிளநிதி சுவாமிகள்

வித்யாநிதி சுவாமிகள்

தபோநிதிசுவாமிகள்

யெகோநிதி சுவாமிகள்

சுநிதி சுவாமிகள்

மேதாநிதி சுவாமிகள்

தயாநிதி சுவாமிகள்



என ஒன்பதின்பர் பிருந்தாவனங்களிருக்கின்றனர். கிராமங்களிலிருந்து வரும் தொகையைக் கொண்டு செலவு செய்து வரப்படுகிறது.

### பருத்திபள்ளி நாடு

கீழ்கரைப்பூந்துறை நாட்டின் உபநாடுகளில் ஒன்று.

### பருத்திபள்ளி

சிகாழிநாதர்

சிவகாமியம்மை

புவனேசுரர்

அன்னபூரணியம்மன்

ஆதிநாராயணப்பெருமாள்

அழகு நாச்சியம்மன்

கரியகாளிம்மன்

மானங்காத்தாயி

அங்காளம்மன்

அண்ணன்மார்

பழய ஊர் அழிந்து போயிற்று. புதிதாகக் கட்டியிருக்கிறார்கள். ராஜசிம்மன் என்னும் பல்லவ அரசனான ராஜசிம்ம சதுர்வேதி மங்கலம் எனும் பெயரால் பிராமணர்களுக்குத் தானம் செய்தது. அக்கிராமத்தில் 5-6 வீடுகளிருக்கின்றன.

### பழங்காலத்து ஊர்

சிகாழிநாதர் கோயிலில் வீரராஜேந்திர தேவற்கு யாண்டு இருபத்து மூன்றாவது நாடாள்வர் நாடாகிய பருத்திப்பள்ளி தேவகோயில் திருக்கற்றளி பொதுக்கினேன் பருத்திப்பள்ளி யூராளி பாண்டி வேட்டுவரில் அதியமான் ... என்ற சாசனமிருக்கின்றது.

'வீரசோழியம்' என்னும் இலக்கண நூல் இவ்வேந்தன் பெயரால் இயற்றப்பட்டது.

விஜயநகர்...ராயர் காரியத்துக்குடயவரான நரசண நாயக்க உடையார் சாலி 1620-ல் மேற்செல்லாநின்ற....1 வீரசோழ மண்டலத்து முளவாய் சூழ்ந்த குன்றத்தூர் கூற்றில் பருத்திப்பள்ளி நாடு என்ற மற்றொரு சாசனம் புவனேசுரர் ஆலயத்திலிருக்கிறது.

மாசி மாதத்தில் பெருமாள்- அழகாச்சியம்மனுக்குத் திருவிழா.

ஐப்பசி மாதத்தில் அண்ணன்மாருக்குத் திருவிழா. முப்பலி இடு கிறார்கள்.

## முதலிக் காமிண்டன்

பருத்திப்பள்ளிச் செல்லர்களில் முதலி என்று பெயர் கொண்ட ஒரு வாலிபன் இருந்தான். அவன் விஜயநகரத்தரசர் படையில் சேனாவீரனாகச் சேர்ந்தான். எந்த விளையாட்டில் அல்லது சிலம்பத்தில் பாணா, கத்தி, ஒட்டம், மல்யுத்தம் முதலியவற்றில் சென்றாலும் முதல்வனாக நிற்பான். அதனால் அவனை முதலி என்று சேனாதிபதி பெயரிட்டான். அப்பொழுது தாராபுரத்துப் பக்கம் குடிகளைத் தொந்தரவு செய்து கொண்டிருந்தார்கள். அவர்கள் அடங்குவதில்லை. இந்த முதலி என்பவன் கொங்கு வேட்டுவப் படையுடன் சென்று அவர்களைத் துரத்தி அடித்து ஒட்டினான். இவ்வெற்றி கண்ட விஜயநகரம் கிருஷ்ணராயர் முதலிக்காமிண்டன் என்ற விருதுப் பெயர் கொடுத்து, மற்றும் பலவிதமான சன்மானமும் கொடுக்கப் பெற்றனன். பருத்திப்பள்ளி நாட்டுக்கு நாட்டாண்மை அதிகாரமும் இன்னும் சில விசேஷ அந்தஸ்தும் மகிழ்ந்து ஈந்தனன். பின்னிட்டு அசௌதலமுதலிக் காமிண்டன் என அரசர்கள் கொண்டாடினார்கள். சிகாழிநாதர் , புவநேகரர், ஆதிநாராயணப் பெருமாள், அழகுநாச்சியம்மன் முதலிய ஆலயங்களும் நன்றாகத் துலக்கி, தேர்த் திருவிழா முதலியன அன்பர்கள் கொண்டாடும்படி நடத்திப் புகழொடு வாழ்ந்தனன்.

இவ்வூர் ஏரிக்கு அக்கரைப்பட்டியிலிருந்து அமுர்தவல்லி வாய்க்கால் என ஒரு வாய்க்கால் ஒரு தாசியின் தருமத்தால் வெட்டப்பட்டது. ஏரி நிரம்ப நிரம்ப உடைந்து உடைந்து போயிற்று.

ஒரு பெரியவர் தோன்றி தாய்க்குத் தலையான பிள்ளையை உடைப்பில் நிறுத்திக் கட்டினால் உடையாது நிற்குமென்றவர். ஒரு வேட்டுவன் கேட்டு, ஏரி நின்றால் எத்தனையோ குடிகள் செழிச்கும் என நினைத்துத் தனது ஒரே பெண்ணாக உள்ள மகளை அழைத்து வந்து உடைப்பில் நிறுத்தினான். அப்பெண் மெத்த சந்தோஷமாக " ஓ தெய்வமே இவ்வேரி உடைந்து போகாது நிற்குமாறு கருணை செய்ய வேண்டும்" என்று இரு கண்களையும் மூடித் தோத்திரித்தனள். மண்ணைப்போட்டு மூடிவிட்டார்கள். அதன்பின் ஏரி உடைவதில்லை என்கிறார்கள்.

ஊர்க்கிணற்றருகில் சில கற்சிலைகள் எடுத்து நிறுத்தப்பட்டிருக்கின்றன. சில தலை உடைந்ததாக இருக்கின்றன. உடையாது ஒன்று இருக்கின்றது. அது இரண்டு கைகளையும் தொங்கவிட்டிருக்கிறது. ஒரு ஆபரணக்கட்டுமிருக்கவில்லை. தலையின்மேல் ஏழுதலைநாகம் படம் விரித்திருக்கிறது. அதன்மேல் மூன்று அடுக்குகளுள்ள குடை ஒன்றிருக்கிறது.



பொன்னும் நன்மணியும் முத்தும் புனைந்த முக்குடை நிழற்ற
பின்ன பூம்பிண்டி ஒல் வீற்றிருந்தவ னெனப் போற்றும்
அருகக் கடவுள் சமண உரு என்கிறார்கள்.
செல்லன் குலத்தார் காணி.

**சோமாசி மலை :** - சமீபத்திலுள்ள ஓர் சிறு குன்று முன் காலத்தில் யஜுர் வேதவல்லான் ஒரு வேதியன், தான் கற்றதற்கேற்ப சோமயாகம் செய்தான். இதனால் சோமயாஜி என்றழைப்பார்கள். அறுபத்து மூவரைக் கூறும் பெரிய புராணத்தில் சோமாசி நாற நாயனார் என்று கூறப்பட்டது போன்றது கொல்லி மலைச்சாரலில் சுப்பிரமணியரைக் குறித்துத் தவம் நோற்றான். இந்த மலைக்குப் போம்படி கனவு கண்டான். வந்து தவம் செய்தான். ஒரு நாள் ஒரு தள்ளாத கிழ வேதியர் கோலூன்றி வந்தார். நீ சஷ்டி விரதம் செய்தால் அருள் பெறுவாய் என்றார். அவ்வாறே முறைப்படி அவ்விரதம் இழைத்தான். அவ்வேதியனது கோரிக்கை நிறைவேறிற்று. இவ்விடமே நெடுநாளிருந்தான். இதனால் இந்த மலைக்குச் சோமாசி மலை என்று கூறுகிறார்கள்.

இந்த நாட்டின் மீது 2 தீர்த்தங்களிலிருக்கின்றன. பருத்திப்பள்ளி அண்ணன்மார் திருவிழா ஐப்பசி மாதம் நடக்கும்பொழுது இம்மலைக்கு வந்து வேல் முதலியன வைத்துப் பூசித்து தீர்க்கரகம் ஆடம்பரத்துடனே கொண்டுபோய் விழாத் தொடங்குவார்கள்.

பருத்திபள்ளிக்கு - ராஜசிம்ம சதுர்வேதி மங்கலம் என்று ஒரு பெயர் உண்டு. இது ராஜசிம்ம பல்லவன் என்னும் அரசனால் பிராமணர்களுக்குத் தானம் செய்யப்பட்ட கிராமமாதாவின் இப் பெயர் பெற்றது. ராஜசிம்மன் என்பவர் பரமேசுர சிம்மப்பல்லவரின் மகன். இவன் ஆண்ட காலமெல்லாம் கோயில் கட்டுவதிலும், ஏரி அணை கட்டுவதிலும் வாசித்த அந்தணர்களுக்குத் தானங்கள் செய்வதுமே தொழிலாக இருந்தான். மிகுந்த தரும சீலன், காசாக்குடிச் சாசனத்தில் " பரமேசுரனது அங்கமெல்லாம் ஒன்றுகூடி மனிதனாக அவதரித்ததால் உண்டானவன். தேக பலத்தாலும், பெயர் உலக லெல்லாம் பரவியதாலும், நரசிம்மாவாதாரத்தின் தன்மை பெற்றவன். இந்த சத்திரிய சூடாமணி தேவர்களுக்கும், பிராமணர் களுக்கும் ஐசுவரியம் கொடுத்து தன் கீழிருந்த பூமிதேவியை சதுர் வேதங்கற்ற பிராமணர்கள் அனுபவிக்கச் செய்தான்' எனப் புகழ்ந் திருக்கிறது. பல்லவ அரசரைத் தமிழ்க் காவியங்களில் காடவன் எனக்கூறும்.

பெரிய புராணம் - பூசலார் நாயனார் என்பார் சிவபிரானுக்குக் கோயில் கட்டுவது இவ்வுடலெடுத்த பயன் எனக்கருதினார்.

ஏழைத்தன்மையால் கட்ட இயலவில்லை. ஆனாலும் தினமும் மனதிலேயே கீழேயிருந்து அடிநிலையில் இவ்வாறு பட்டிவரி முதலியன இருக்க வேண்டுமென்று எண்ணுவதும், மறுநாள் மேலே மேலே வேலைப்பாடுகளை எண்ணி எண்ணி எல்லா வேலைகளை யும் மனதிலேயே ஆக்கினார். வேலை முடிந்தது. முகூர்த்த நாள் குறித்துக்கொண்டார். இந்த நரசிம்மப் பல்லவன் காஞ்சிபுரத்தில் கைலாய சுவாமி கோயிலைக் கற்பணிகள் எல்லாம் செய்து முடித்து முகூர்த்தத்துக்கு நாள் வைத்துச் சித்தமாக இருந்தான். சிவபெருமான் கனவில் தோன்றி பூசலார் கட்டிய கோயில் பிரதிஷ்டைக்குச் செல்வோம். நாளையொழிந்து நீ செய் என்றனர்.

காடவர் கோமான் கச்சிக் கற்றளி யெடுத்துமுற்ற
மாடெல்லாஞ் சிவனுக்காகப் பெருஞ் செல்லம் வகுத்தல் செய்வான்
நாட்மாலறியாதாரைத் தாபிக்கு நன்னாள் முன்னாள்
ஏடலர் கொன்றை வேய்ந்தாரிரவிடைக் கனவில் எய்தி

நின்றவூர் பூசலன்பனெடிது நாணிநைதுச் செய்த
நன்று நீடாசலயத்து நாளை நாம்புகுவோ நீயிங்
கொன்றிய செயலை நாளை யொழிந்து பின் கொள்வையென்று
கொன்றைவார் சடையார் தொண்டர் கோயில் கொண்டருளப்
போந்தார்.

பருத்திபள்ளி நாட்டதிபனான சோழியப்பன் அரசாளும் குடிகளும் மெச்ச நாட்டாண்மை செலுத்தினான். மிகுந்த உதார குணமுடை யவன், ஒரு வெண்மை நிறமுள்ள பெண் மகளைப் பெற்றான். வருத்தமுற்றான். இந்தப் பெண்ணை ஒத்த குலத்தில் அன்பு, அறிவு, ஒழுக்கமுள்ள மாப்பிள்ளை மணக்க வருவனேல் காணியும் கொடுப்பேன் என்று கருதினேன். இராசிபுர நாட்டுக்குடையவனான நல்லண்ணன் என்னும் ஒரு வாலிபன் வந்தான். வடிவு குண முதலியவற்றைக் கண்டு மகிழ்ந்து மணவினை சிறப்பாக முடித்துக் கொடுத்தான். 11ஊர்கள் அடங்கிய மல்லசமுத்திரம் என்னும் ஒரு பகுதியை அரசனா யில் நாடு என்றாக்கிக் கொடுத்தனன். இதனைப் பெற்ற நல்லணன் தரும சிந்தனையுள்ளவனாக இருந்தான். அவனது பூஜாபலத்தால் சந்ததி விருத்தி பெற்றது. அவன் வமிசத்தில் தொண்டைமான் என்று மிகுந்த கீர்த்தியோடு பாரபத்தியம் செய்து வாழ்ந்தான். அவன் இளமையில் தொண்டைமான் என்னும் அரசன் சேனையிற் சேர்ந்து பகைவன் மேற் சென்றான். வெற்றிபெற்றான்.



இதனால் அரசன் சந்தோஷமுற்றுத் தன் பெயரையும், மாலையையும் விருதாகக் கொடுத்தான். இதனால் தொண்டைமானென்ற பெயர் ஓங்கிற்று. இவன் மரபில் நவாபு அரசனிடம் காட்டிய வீரத்தை மெச்சிச் சில மரியாதைகள் கொடுத்தான். அவற்றுள் இவர்களில் தலைவன் எங்கு சென்றாலும் முன்னே ஒரு வெண்கலத் துடும்பு (பறை) ஒருவன் அடித்துச் செல்வது வழக்கமாம். கலியுக சகாப்தம் 4735 ஸ்ரீமுகர்வ வருஷத்தில் மல்லைச் சோழீசுவரருக்குக் கோவை என்னும் அரிய பிரபந்தம் கேட்டிருக்கிறார்கள். அது பாகை பிள்ளைப் பெருமாள் கவிராயர் பாடியது.

**மல்ல சமுத்திரம்**

சோழீசுவரர்
திரிபுரசுந்தரி
அழகராஜப்பெருமாள்
செல்லாண்டியம்மன்
சோழராஜா பிரதிஷ்டை
பொன்னியாறு
ஆனி- மாதம் தேர்

**கீழ்முகம்**

கொல்லப்பட்டி, காளிப்பட்டி, குருக்கலாம்பாளையம், கோடங்கி பாளையம்

**மேல்முகம்**

வடுகபாளையம், பனங்காட்டூர், மானுக்காட்டாம்பாளையம், சிக்கிலிச்சிபாளையம், அத்தப்பம்பட்டி, சூரிக்கவுண்டன்பாளையம், எல்லைப்பாளையம், பள்ளபாளையம், ஊமையன்பட்டி, மாமரப் பட்டி, மேட்டுப்பாளையம்.

பெண் பனைமரம் ஆண்மரமாயிருக்கிறதாம்.

**கோட்டைப்பாளையம்**

விநாயகன்
மாரியம்மன்
செல்லன் காணியாட்சி
பொன்னியாறு

**கருங்கல்பட்டி**

அழக நாச்சியம்மன்
அண்ணன்மார்
செல்லன் காணியாட்சி
திருமணிமுத்தாறு

### கொன்னையாறு

முத்திசுவரசாமி

புவனேசுவரி

முத்துவிநாயகன்

செல்லப்பெருமாள், கரிய பெருமாள்

செல்லாண்டி அம்மன்

அத்தனூர் அம்மன்

செல்லன், பணங்காடை காணியாட்சி

திருமணி முத்தாறு

### அவனாசிப்பட்டி

வெள்ளைப் பெருமாள்

செல்லன் காணியாட்சி

### வண்டிநத்தம்

செல்வ விநாயகன்

வல்லவராயப் பெருமாள்

எழுவாண்டியம்மன்

மதுர காளியம்மன்

இளங்கம்பு கூட்டம் காணி

### கூத்தாநத்தம்

கரியவரதராஜப் பெருமாள்

வல்லவராயப் பெருமாள்

அத்தனூர் அம்மன்

கண்ணகுலம் காணி

துத்திமலை

### வைகுந்தம்

வாகீசுவரர்

வாகீசரி

லட்சுமணப் பெருமாள்

லட்சுமி நாராயணப் பெருமாள்

செல்லியம்மன்

பொருளந்தை - காணி

ஏரிக்கரை மேல் கோயிலிருக்கிறது. இந்தச் செல்லியாயிக்கு ஐப்பசி மாதத்தில் திருவிழா. கடைசியில் ஒரு விசித்திரமான காட்சி நடைபெறுகிறது. பிரார்த்தனைக்காரர்களெல்லாம் அங்கு விற்கப்படுகிற முட்டி ஒன்றை விலைக்கு வாங்கிக் கொண்டு அந்தக் குட்டையில்



சேறாக் உள்ள நீரில் முழுகி முட்டி நிறையச் சேற்றை வாரிக் கொண்டு வேப்பங் கொத்தை அதில் செறுகி, கையிலும் வேப்பங் கொத்தும் பிடித்துக் கொண்டு, திருவிலக்கு என்று சத்தமிட்டுக் கொண்டு, தப்பட்டை அடிப்போன் முன் செல்லக் கோவிலைச் சுற்றி சுவாமியை வணங்கி சேற்று முட்டியை சந்நதி முன் அற்பணம் செய்து போய்க் கிணற்றில் முழுகிச் சுவாமியைத் தரிசித்துச் செல்வார்கள். இந்நாளில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் பொங்கல் வைத்து வணங்குவார்கள். இந்தத் தேவி அன்பர்கள் வேண்டும் வரத்தை ஈந்தருளும் சக்தியுள்ள தெய்வம். இந்த அம்மனைச் சேற்றுமுட்டிச் செல்லாண்டியம்மன் என்கிறார்கள்.

### கருமனூர்

கரிய் விநாயகர்

கரிய வரதராஜப் பெருமாள்

காகத்தலையம்மன்

கரிய காளியம்மன்

செல்லன், ஈஞ்சன், சாணார் காணி

காகத்தலையம்மன் சில காலத்திற்கு முன் காகம் விளக்கேத்தியில் இருந்து வந்ததினால் அதற்கு பெயர் காகத்தலையம்மன் என்று உண்டாயிற்றாம்.

இது மிட்டா, இந்த மிட்டா, பருத்தி பள்ளி செல்லர்களில் காகத் தலைக் கவுண்டர் என்பவருக்கு நவாபு காலத்தில் கிடைத்தது. அவர் ஒரு ஏரி கட்டினார். அந்த ஏரி பாசனத்தால் இன்னும் பலமான நஞ்சை சாகுபடியாகிறது. இவர் முளசை, கொக்கராயன் பேட்டை. கண்ணர்களுக்குச் சம்பந்தி, பல புலவர்கள் இவரைப் புகழ்ந்து பாடப் பெற்றவர். இவ்வூர் ருசிகரமானது. சிறந்த சர்க்கரை வெல்லமுமாகும். இவ்வூரினர் சந்தியார்களே, மரியாதையும் அன்புமுள்ளவர்கள்.

இது நத்தமாக இருக்கிறது. ஆனால் கோவில்களிருக்கின்றன. சிவா இருந்த இடம் தெரிகிறது. சிவலிங்கப் பெருமான் பெயர்ந்து சாய்ந்து காணப்படுகின்றார். நந்தி, விநாயகன் தெரிகிறது என்றாலும் ஸ்ரீ கைலாய நாதர், கருணையய்யன் என்னும் திருநாமம் கொண்டு எழுந்தருளியதாம். கரிய விநாயகன், கரிவரதராஜப்பெருமாள் புற்றுருவம், காவிக்கரைத்து அபிஷேகம் செய்து திருநாமம் சாத்துகிறார்கள். கூத்தாண்டார் என்னும் ஒரு தெய்வத்தானமும் இருக்கிறது. இது சாணார் (சான்றார்) வணங்கும் தெய்வமாம்.

இப்பொழுது கருமானூர் என்று அழைக்கப்படும் ஊர் கவண்டன் பாளையம்.

பூர்வத்தில் கரிகாலச் சோழன் என்று இலக்கியங்களிலும் புகழப் பெற்ற ஒரு சோழனிருந்தான். அவன் காவிரி நதிக்கு இரண்டு பக்கத்தும் கட்டுவித்தான். (என்பதைக் கலிங்கத்துப் பரணி - இராஜபாரம்பரியம்,பா 20ல்) "தொழுது மன்னரே கரை செய் பொன்னியிற் றொடா வந்திட" பயப்படத்-தெழுது கென்றுகண் டிதுமிகைக் கணென், நிங்கழிக்கவே அங்கழிந்தது என்பதால் அறிவிக்கப்படுகிறது. அந்த மகத்தான அரசன் பெயரால் பிரதிஷ்டிக் கப்பட்டதால் இவ்வூர் தெய்வங்களுக்கு கரி-கரி என்னும் முதலையுடைய திருநாமமுற்று விளங்குகிறது. இப்பெயருடைய சோழர் பெயர் கொங்கு நாட்டில் ஆலயம், தேவதை, சிற்றரசர்கள் சரித்திரங்களில் அங்கங்கு செறிந்து கிடக்கின்றது.

(கைலாயநாதர்- கருணையம்மன்) கரிய விநாயகர் - கரிய வரதராஜப்பெருமாள், கரிய காளியம்மன், காகத்தலையம்மன்- கரிய காளியம்மன்.

சில நாளின் முன் மேல்கரைப் பூந்துறைநாடு காகம் என்னும் ஊரிலிருந்து பஞ்சம் பிழைப்பதற்காகச் சாணாப் பெண் ஒருத்தி புறப்பட்டாள். அவ்வூர்க் காளியம்மனிடத்தில் மிகுந்த பக்தி யுள்ளவள். அன்று பகல் நடந்து தான் கொண்டு வரும் சுமைக் கூடையை ஒரு இடத்தில் இறக்கிவைத்துத் தங்கினாள். கூடையைப் பார்க்கும் பொழுது ஒரு குழவிக்கல் இருக்கக் கண்டாள். இதை ஏன் சுமக்க வேண்டுமென்று அதை எடுத்து எறிந்து விட்டு மறுநாள் புறப்பட்டாள். பகல் நடந்து இரவு ஒரூரில் தங்கினாள். கூடையைப் பார்க்கும்பொழுது அக்குழவிக்கல் இருக்கக்கண்டு இதை ஏன் சுமக்கிறோமென்று எடுத்தெறிந்துவிட்டு நடந்தாள். மறுநாள் இரவு இறக்கிப் பார்க்கும்பொழுதும் குழவிக்கல் இருக்கக் கண்டு எறிய எறிய கூடையை விட்டு நீங்காமல் இருக்கிறதே என்று அதிசயப்பட்டு எடுத்து எறிந்து நடந்தாள். இவ்வாறே எறிய எறிய இவளைவிட்டு நீங்காது கூடையிலேயே வந்தது கண்டு அதிசயமுற்றுச் சுமந்து வந்தாள்.

கருமனூர் வந்தாள். தங்கினாள். அவளுடன் வந்த பெண்களில் ஒருத்திக்கு மருள் வந்தது. நான் காகத்தினின்றும் உங்களுடனேயே வருகிறேன்.குழவிக்கல் என்று எடுத்து எறிய எறிய நீங்காது வந்தேன் உங்கள் குலதெய்வமாகிய காளிதேவி. கடைசியாக எறிந்த சங்கம் புதையிலேயே இருக்கிறேன். என்னை இங்கேயே பூசியுங்கள் என்று வாக்கு வந்தது. பச்சைக் குடிசை கட்டி விளக்கு ஏற்றி தண்ணீர்விட்டு வைத்தார்கள். எரிந்தது. சங்ககிரி கடி யரசரிடம் சென்ற பாரபத்தியம் அவினாசிக் கவுண்டன் என்பவன் அதோ அங்கு விளக்கு எரிகிறது.



சுருட்டுக்கு நெருப்பு கொஞ்சம் பருத்திவா வென்னச் சென்ற மனிதனுக்குக் கண் தெரியவில்லை. அந்தக் கவுண்டன் செல்லவும் கண் தெரியவில்லை. தியங்குங்காலை மற்றொருவர் மீது சன்னதம் உண்டாகித் தான் காளிதேவியென்றும் பூசித்தவர்களுக்கு அனுக்கிரகம் செய்வேனென்றும் வாக்கு வந்தது. அப்படியானால் எனக்கு ஆண் குழந்தையில்லையே அனுக்கிரகம் பண்ணவேண்டுமென்று கேட்டனன். குன்னிபாளையத்தில் இன்னபேருடைய இன்னான் மகளிருக்கிறாள். அப்பெண்ணை விவாகம் செய்து கொண்டால் உடனே ஒரு ஆண் குழந்தை தோன்றும் என்றபடியே விவாகம் செய்து கொண்டான். அடுத்த வருஷத்திலேயே ஆண் குழந்தை பிறந்தது. அக் குழந்தைக்கு காகத்தலையன் என்று பெயரிட்டு, அந்த சுவாமி களுக்குக் கோயில் திருமதில் முதலியன கட்டி பிரபலப்படுத்தினான். இன்னும் வேண்டும் வரங்களைக் கொடுக்கும் சக்தியுள்ள தெய்வமாக இருக்கிறது.

## தாழையூர்

தாந்தோணி ஈசுரர்

தாமோதரப் பெருமாள்

செல்லாண்டியம்மன்

வன்னியர் காணி

இந்தத் தாழையூரையும், மாங்குட்டிப்பட்டியையும், தாதா கிருஷ்ணராஜா ஏழு மனைவியரை ஏக காலத்தில் விவாகம் செய்து கொண்ட காலத்தில் தானம் செய்தார். அந்த தான சாசனம் இப்புத்தகம் 68-ம்பக்கம் சங்ககிரி தாம்பிர சாசனம் என்ற தலைப்பின் கீழ் பார்க்க.

## ஏகாபுரம்

நாகரடியர் கோவில் என்பது ஒரு புற்றுக்கண்கள்.

அதற்கு கோவில் கட்டி பூஜை நடக்கிறது.

செல்ல விநாயகன்

சஞ்சீவிராயப் பெருமாள்

சென்னராயப் பெருமாள்

செல்லாண்டியம்மன்

வன்னியர் - ரெட்டிகள் காணி

## பிள்ளாநத்தம்

கரிய பெருமாள்

கரிய காளி அம்மன்

பயிரன் காணி

### நடுவனேரி

ஏகாம்பர ஈசுரர்

அழககிரிப் பெருமாள்

செல்லாண்டியம்மன்

வுன்னியர் காணி

### கன்னந்தேரி

பத்திரகாளியம்மன்

வன்னியர் காணி

### தப்புக் குட்டை

ஸ்ரீகாழிநாதர்

சிவகாமி

சென்னகேசவப் பெருமாள்

செல்லாண்டியம்மன்

வன்னியர் காணி

### கூடலூர்

சிபலநாத சுவாமி

சிவகாமியம்மன்

வெள்ள விநாயகர்

சென்னராயப் பெருமாள்

ஆனூர் அம்மன்

அத்தனூர் அம்மன்

பயரன் - கொங்குச் சாணார் காணி

சிவலமாற பாண்டியன் என்னும் பாண்யடின் பெயரால் பிரதிஷ்டித்தது. சிவகாசியிலிருந்து அரசு செலுத்தினான். சக-1486 ரத்தாட்சி வருஷத்தில் சித்திரை மாதம் 20 புனர்பூசத்தில் முடிசூடப் பெற்றான். சிவகாசிக் கல்வெட்டு 9-ல் கூறப்பெற்றது.

இவன் தமிழறிஞன். சங்கரநாராயணர் கோவில் தலபுராணம் முதலியன பாடியுள்ளான்.

### மங்கலம்

சொக்கநாதர்

மீனாட்சி

லட்சுமி நாராயணப்பெருமாள்

அழகநாச்சியம்மன்

காடை காணி

பெண்ணையாறு

பங்குனி மாதம் தேர்



### இடங்கண சாலை

சௌந்தரராஜ சுவாமி

பத்திரகாளியம்மன்

பெருமாளுக்கு சௌந்தரப்பிராட்டியார்

சிதேவி, பூதேவி

வன்னியர் காணி

கஞ்சமலை

பொன்னி ஆறு

சித்திரை மாதம் சௌந்தரராஜப் பெருமாள் தேர்

### கச்சுப்பள்ளி

ஏகாம்பர ஈசுரர்

காமாட்சியம்மன்

அஸ்தகிரிநாதர்

செல்லாண்டியம்மன்

கட்டிமுதலி குலம்- வன்னியர் , பவளங்கட்டி வேளாளர் காணி

ஆனி மாதம் தேர்.

ஒரு நாள் ஒரு வளையல்காரன் வழியில் சென்றான். வளையல் காரா என் கைகளுக்கு வளையல் போடு என ஒரு பெண் சொல்லும் சத்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தான். ஒருவருமில்லை. பின்னர் நடந்தான். ஏன் போகிறாய்? நல்ல வளையலாக இக்கைகளுக்குப் போடு என்ற சத்தம் மறுபடி உண்டாயிற்று. திரும்பிப் பார்த்தான். எதிரிற் காணும் புற்றில் நின்றும் இரண்டு அழகிய கைகள் வெளித்தோன்றியிருப்பது கண்டு அச்சம் கொண்டான். அசரீரியை மறுத்தற்கஞ்சி தன்னிடத் துள்ள வளையல்களில் உயர்ந்ததும் அழகியதுமான வளையல்களைத் தோன்றியுள்ள இரண்டு கைகளிலும் அணிந்து வணங்கினான். வலது கை வளையல் பணத்தையும், இடது கை வளையல் பணத்தையும் இன்ன இன்ன ஊரில் இன்னானின் னானிடம் பெற்றுக் கொள் என்று சத்தம் கேட்டான். அப்படியே இரண்டு, சமீபத்துள்ள ஊர்களுக்கும் சொல்லி அசரீரி வாக்கைக் கூறினான். வளையலின் விலையைக் கொடுத்து வளையல்காரனு டனே வந்தார்கள். அங்கு நின்ற சிறுமி பேரில் சானித்தியமுண்டாய் நான் இங்கேயே வசிக்கும் பத்திரகாளி பூசியுங்கள் என்று கூறிற்று. அவ்விருவரும் பச்சைப் பந்தல் போட்டு பூசித்தார்கள். தெய்வீகச் செயல்கள் நடந்ததால் கோயில் கட்டினார்கள். திருமதில் கட்டினார் கள். பின்னர் பல சிறப்புகள் நடந்தன.

### இரணாபுரம்

எலமேகவரர்

எலமேகவரி

சென்னகேஸ்வர பெருமாள்

அத்தனூரம்மன்

செல்லாண்டியம்மன்

முத்தன் குலம் - சாணார் காணி

இவ்வூரின் சமீபத்து ஓடும் பொன்னி ஆறு என்பதில் தங்கச் சன்னம் இன்னும் கிடைக்கிறது. இதனால் இதற்கு இரணாபுரம் என்னும் பெயராயிற்று என்பர். இரணியம் பொன்.

தாரமங்கலத்தில் கட்டி முதலியார் சந்ததியார்கள் ஆட்சி கொண்டிருந்தார்கள். அவர்கள் பல ஆலயம், ஏரி முதலியன பிரதிஷ்டித் திருக்கிறார்கள். அவருள் இலமன் கட்டி முதலி என்பவர் ஒருவர் அவர் சிறந்த கீர்த்திமான். அவர் பெயரால் இவ்வூர் சிவாலயம் ஆக்கப் பட்டு சிவபெருமானுக்கு அவர் பெயரால் இலமேசுரர் எனத் திருநாமம் வழங்கப்பட்டது போலும், தாரமங்கலத்தும் இலமேசுரர் ஆலயம் ஒன்றிருக்கிறது. இலமனூர் எனவும் ஒரு ரைல்வே ஸ்டேஷனிருக் கிறது.

### கனககிரி

வேலாயுத சுவாமி

விக்கினேசுரன்

கரிய காளியம்மன்

சான்றார் காணி

பொன்னியாறு

### சண்பகமாதேவி

சித்தேசுரர்

சிவகாமி

ராஜசுப்பிரமணியர்

சென்னராயப்பெருமாள்

செல்லாண்டியம்மன்

கூறைகுலம் காணி

இங்கு எழுந்தருளியுள்ள சிவகாமித் தாயாருக்கு ஒரு அன்பன் சண்பக மலரால் அருச்சித்தனன். கருணை கொண்ட தாயார் சண்பக நிறத்தோடும் சண்பக மலராலேயே அலங்காரமுற்றவராய் எதிர்



தோன்றியதால் அந்தத் தேவியாரின் திருநாமமே அவ்வூருக்கும் வழங்கலாயிற்று என்பர். ஒரு சோழ அரசனின் தேவி, செம்பியன் மாதேவி என ஒருவர் இருந்தனர். அப்பட்டத்தரசியின் பெயரால் பிராமணர்களுக்கு இந்தக் கிராமம் தானம் செய்த ஊராதலின், செம்பியன் மாதேவியென்றொரு பெயராயிற்று. அது செம்பக மாதேவியென வழங்குகிறது என்பாருமுளர்.

இவ்விடத்து ராஜ சுப்பிரமணியர் என்னும் மூர்த்தி வரப்பிரசாத மூர்த்தி. இந்த மூர்த்தியைக் குல தெய்வமாகக் கொண்டவர்கள் கூறை குலத்தார். அவர்களில் ராஜாயி, ராஜாக்கவுண்டன் எனப் பெயரிட்டழைக்கப்படுவதுடன் இப்பெயர்தான் மானத்தி வகை மிட்டா தாரர்கள் தலைப்பிள்ளைக்கு வைக்கிறார்கள்.

### பாலமேடு

பொன்பரப்பீசர்

சென்னராயப்பெருமாள்

சீனிவாசப் பெருமாள்

பொன்காளியம்மன்

அத்தனூராயி

தூரன்-பனையன் காணி

கலி- 4929 - சர்வதாரி மாசி மாதம் 10 வியாழன் சீனிவாசப் பெருமாளுக்குச் சித்திரத் தேர் செய்தது, பாலமேடு தூரன் பழனிவேல் மைந்தன் பொன்காளி கவுண்டன்.

பொன்காளி மகன் காகத்தலைக்கவுண்டன் 18 வருஷம் நடத்தி நின்ற தேரை, சங்கிரி வெங்கடாசலம் பிள்ளை நடத்தினான்.

மிட்டாகிராமம், வெற்றிலைக்குப் பேர்போன இடம்.

### பள்ளக்குழி

சிதம்பரேசுரர்

சிவகாமியம்மன்

கரிவரதராஜப்பெருமாள்

தல்லியம்மன்

காரி -வேட்டுவன் காணி

பெண்ணையாறு.

### கண்டகுள மாணிக்கம்

கைலாசநாத சுவாமி

கரிய விநாயகன்

பத்திரகாளியம்மன்

வன்னியர் காணி

## ஆட்டையாம்பட்டி

ஐயனார்

அபினாரப்பன் என்கிறார்கள்

வன்னியர் காணி

திருமணிமுத்தாறு

ஜவுளி நூல் கால்நடை தானியாதிகள் நிறைந்தது. பெரிய சந்தை ஞாயிறன்று கூடுகிறது.

30 வருஷங்களுக்கு முன் கூளாங்காலன் என்னும் பெரிய திருடன் இந்தப் பக்கங்களில் பல திருட்டுகள் செய்து கொண்டும் பகலில் கஞ்சமலையில் ஒழிந்தும், இரவில் கால்நடைகளைத் திருடியும், கொலை செய்தும் வந்தான். இவனுக்குத் துணை சேர்ந்தார்கள், குடி பெருகிக் குத்தியும் வெட்டியும் துப்பாக்கியால் சுட்டும் மிகு கொடுமை செய்து வந்தார்கள். பின்னர், சின்னக்கந்தன், பெரிய கந்தன் என்பவர்களும் தொந்தரவு செய்து வந்தார்கள். அடக்குவதற்கு அவசரப்போலீஸ், தண்டப் போலீஸ் வைத்து கூட்டத்தை அடக்கப்பட்டது. அந்த சந்தர்ப்பத்தில் ஆட்டையாம்பட்டிக்கு போலீஸ் ஸ்டேஷன் வைத்தார்கள். இப்பொழுது நன்றாகவே கட்டிவிட்டார்கள்.

## மாமுண்டி

சிதம்பரேசுரர்

சிவகாமசுந்தரி

லட்சுமணப் பெருமாள்

ஆஞ்சநேயர்

பொருளந்தை, நாட்டு வேளாளர் - வெள்ளாளர் வணிகம் குலம்- காணி.

திருமணிமுத்தாறு.

மாமுண்டி : - ஒரு அக்கிராரம். இது மதுரைத் திருமலை நாயக்கர் ஆட்சியில் மிகுந்த பிரசித்தியாக இருந்தவரான, ராமப்பய்யரின் மருமான் கொண்டப்பய்யர். இவர் வட கொங்குக்கு அதிபனாக வந்தார். சாலி 1550. திருச்செங்கோடு அர்த்தநாரீசுரருக்கு வேத பாராயணம் செய்யும் வேதியர்களுக்கு இந்த மாமுண்டியை மானியமாகக் கொடுத்தார்கள். இது விவரம் ( திருப்பணி மாலை 117-வது செய்யுள் கூறுகிறது) இந்த வேதியர்கள் இப்பொழுது சேலம் முதலிய இடங்களில் வக்கீல்களாயும், பலதுறைகளில் ராஜாங்க உத்தியோகஸ்தர்களாயும் வாழ்கின்றார்கள்.



## மறப்பறை

நாகேசுவரர்

சிவகாமி அம்மன்

அழகராயப்பெருமாள்

சித்திவிநாயகன்

பொன்காளியம்மன்

அங்காளம்மன்

செம்பூத்தன் குலம் காணி.

நம் பெருமாள். இந்நாட்டில் இக்கோயிலைக் கொண்டாடுகிறார்கள். புரட்டாசி மாதச் சனிக்கிழமைகளில் திரளான கூட்டம் வருகிறார்கள். இந்தச் சாமியை நினைந்து விபூதி கொடுத்தாலும், பாடம் போட்டாலும் கொடிய விஷங்கள் உடனே நீங்கி விடுகின்றனவாம்.

## வைகைப் பொன்மலை

மாபெரு மகத்திற்றோன்றியது, ஒரு செம்மறிக்கடா. அது அக்கினி பகவான் ஏறும் கடாவை விடப் பல்லாயிர மடங்கு வலி கொண்டது. அது திமிர் கொண்டு எல்லா உலகத்தும் புகுந்து பல்லுயிர் களை மிதித்தும், முட்டியும், தூக்கி எறிந்தும் துன்பு செய்து வந்தது. தேவராலும் யாவராலும் அடக்க முடியவில்லை. கஷ்டப் பட்டார்கள். அடியார்கள் துன்பத்தை நீக்கும் பொருட்டு எழுந்தருளிய முருகனெனும் பாலசுப்பிரமணியரை வேண்டினார்கள். அடியார்க்கருளும் எம்பெருமான் மனது இரங்கி மறியைத் தொடர்ந்து இரு கொம்பையும் பிடித்து முன்னுக்கு பின்னிக்கு இழுத்து அதன் முதுகின் மீது ஏறினார். காடு மலை கடல் முதலிய இடங்களுக்குச் சுமந்து ஓடிச் சாடியும் அஞ்சாது இருந்தனர். பல நாள் பல உலகங்களெல்லாம் கொண்டு திரிந்தது. பின்பு இரு துடைகளாலும் இடுக்கவும் உடலம் நெரிந்தது. அயர்வு கொண்டது. கடைசியாக ஒரு சிறு பொற்குன்றிடம் வந்தது. இவன் நம்மை விடான் என்று நல்லறிவு தோன்றிற்று. வேண்டி அங்ஙனமே நின்று தோத்திரம் புரிந்தது. கிருபாநிதிக்குக் கருணை பூத்தது. கடவுளே நான் என்றும் தேவரீரைத் தாங்கும் திருத்தொண்டு அருளல் வேண்டுமெனவும், மூர்க்கமுள்ள அடியேனுக்கு நல்லறிவு தோன்றிய இத்தலத்தே இப்பாலவடிவுடன் வணங்கித் தரிசித்தவர்களுக்கு வேண்டிய வரத்தை அருளல் வேண்டுமெனவும் வேண்டிற்று. கருணாநிதியாகிய சுப்பிரமணியத் தம்பிரான் அப்படியே ஆகுகவென அங்கு வைகினர். யாவரும் வணங்கி வேண்டிய வரம் பெற்றனர். பெறுகின்றனர். பாலசுப்பிரமணியப் பெருமான் தங்கி நின்று

வைகையால் அப்பொன்னிறக் குன்றுக்கு வைகைப் பொன்மலை என அடியார்கள் திருநாமமிட்டு வழங்குகிறார்கள்.

முறங்கம்

கற்பூர நாராயணப் பெருமாள்

மலையரமுறங்கியம்மன்

அண்ணன்மார்

ஆந்தை குலம் காணி

### காளிப்பட்டி

இந்நாட்டில் மலசமுத்திரம் என்னும் பிரிவு கிராமங்களில் காளிபட்டி என்னும் ஊரும் ஒன்று என முன்னமே குறிப்பிட்டிருக் கிறது. அவ்வூரில் கந்தசாமி எனப் பிரசித்தமுற்று ஒரு கோயில் விளங்குகிறது. சில வருஷங்களின் முன் கீழ்கரைப் பூந்துறை எழுகரை நாட்டுளொன்றான பருத்திப்பள்ளி நாட்டார்களில் கத்தேரி லட்சுமண கவுண்டன் என்றும் ஒருவன், காவடி எடுத்துக் கொண்டு ஊர்கள் தோறும் சென்று, மருளால் வாக்குச் சொல்லி ஏற்ற பொருளைக் கொண்டுபோய்ப் பழனி ஆண்டவனுக்குச் செலுத்திக் கொண்டு வந்தான். பின்பு இனிப் பழனிக்கு வரவேண்டியதில்லை. காளி பட்டியிலே குறிப்பிடும் சிலையிலே, சானித்தியமாக விளங்கு கிறோம். அவ்வி .மே நீயும், உன்னைச் சார்ந்தோர் காவடிகளையும் செலுத்தி வந்தால் வரம் கொடுக்கிறோம் எனச் சொப்பனம் ஆயிற்றாம். அதுமுதல் அவ்வாறே சொப்பனத்தை ஏனோர்களுக்கும் வெளிப்படுத்தி மருள்வாக்குச் சொல்லி வந்தான். சொல்வது சரியாகப் பலிக்கிறதென்றும், வேண்டிக் கொண்டவாறு அனுக்கிரகிக் கப்படுகிறதென்றும் பல கூட்டங்கள் வந்தன. உண்டிகையும் வைத்தனர்.காணிக்கை ஏராளமாக வந்தன. கற்கோயில் கட்டினார்கள். கோபுரம் கட்டினார்கள். நிலம் வாங்கினார்கள். தைத்திருவிழா ஆரம்பித்தார்கள். மூன்று தலைமுறையாகச் சிறப்பாக நடக்கிறது. ஏராளமாகப் பணம் வருகிறது. மாட்டுக் கடை கூட்டினார்கள். வரவுக்குக் குறைவில்லை. ஆனால் கந்தசாமி பெயரால் உற்பத்தி யாகும் பணம் நன்மார்க்கத்தில் செலவானால் சிறப்பினும் சிறப்பாகும் என நல்லோர் கருதுகிறார்கள்.

காவடி தூக்கிகள் முதலிய ஏழைமக்கள் வந்தால், நம்முடைய மூதாதைகள் இப்படிக் காவடி தூக்கி ஏற்றுத்தானே நாம் ஈரோப்பு முதலிய தூர தேசங்களுக்குப் போய்ப்படித்துத் தேறலானோம். ஏதோ பசித்து வந்த ஏழை பரதேசிகளுக்குக் கொஞ்சமாவது மிஞ்சிய பழஞ்சோறு சிறிது கொடுப்போம் என்று எண்ணங்கொள்ள வேண்டுமல்லவா? அவ்வாறின்றி 7000 ரூக்கு குறையாது வரவு வந்தும்



திருட்டுக்கள் விற்றதாக இப்பொழுது கேக வந்திருக்கிறதென்றால், ஐயோ! எவ்வளவு சிறுமையினும் சிறுமை!!

### ஐவேலி

விக்கினேசுரன்

மாரியம்மன்

ஒருக்காமலை வரதராஜப் பெருமாள்

சங்ககிரிக் கோட்டைக்குக் கிழக்கு 2 நாழிகைத் தொலைவில் இவ்வூர். இவ்வூரில் இடையர் தலைவன் ஒருவன் மிகு பிரபலமாக வாழ்ந்தான். பேரரசரிடத்துச் சேனைத்தலைவனாக இருந்தான். அவ்வூர் வழியாக ஔவைப் பிராட்டியார் வந்தனர். தெய்வீகக் கவிவல்ல ஔவையாரென அறிந்த அரதி மிகவும் மகிழ்ச்சி புரிந்து, அம்மையார் இங்கு எழுந்தருளியது என் தவமன்று. எனது முன்னோர் செய்த தவமென்று நினைக்கிறேன் எனல் முதலிய உபசார மொழிகள் கூறி, கை கழுநீர், கால் கழுநீர், குடி நீராகிய முந்நீரு முதவி இருக்கை உதவித் தானுமிருந்து குசலம் வினவி பொன்னிலை யிட்டு அன்னம் படைத்தனன். சில பகல் தங்கி இருக்க வேண்டினன். அவ்வாறே தங்கி இருந்த காலத்துப் பல தமிழ்ப்பாக்கள் கூறினர். அத்துடன் கோவை என ஒரு திவ்விய பிரபந்தமும் கூறினர். அதனை அரதிக்கோவை என்பர். பலவகையான பரிசுகள் மனமகிழ்ந்து ஔவையார் உவப்ப ஈந்தனள்.

இதைப்பற்றி கொங்கு மண்டல சதகம் பா- 45.

நந்த மண்டல சதகம் ப-18

ஐவே வசதி யிரவினி லௌவைக் கமுதளித்து
மெய்வேதம் போனிற்குங் கோவைகொண் டோன்புவி மீதிற்றவஞ்
செய்வோன் றனிலும் பசுக்காவன் மிக்கெனச் செய்யுமன்பன்
மைவேலை வண்ணன் சதியுடன் வாழ்நந்த மண்டலமே.

(- நந்தமண்டலச் சதகம்)

ஆருப்பாடி யாயர்ந்த மைவே லசதி யணிவிரையிற்
கோப்பா வலனெழிற் கொங்கைக்குத் தோற்றிபக் கோடிரண்டுஞ்
சீப்பாய்ச் சிணுக்கரியாய்ச் சிமிழாய்ச் சின்ன மோதிரமாய்
காப்பாய்ச் சதுரங்கமாய்ப் பல்லக்காகிக் கடைபட்டதே.

ஆதித் தனைக்கண் டாவந் தொடவந் நகரிலுள்ளார்
பாலித்த முத்தும் பவளந்தொட் டாரிந்தப் பைந்தொடியாள்
சேனைத் தலைவனைச் செங்கோ லசதியைச் சேர்ந்தொருநாள்
கூடித் தழுவுவ மென்றுதொட் டாடன் குவிமுலையே

- (அரதிக் கோவை)

அறங்காட் டியாகரத் தைவே லதி மகன்விலம்பி
விறங்காட்டுங் கஞ்சத் திருவளை மீர்முக நீண்டகுமிழ்த்
திறங்காட்டும் வேலுஞ் சிலையுங் கொல் யானையுந் தேருங்கொண்டு
புறங்காட்ட வுந்தரு மோகினைக் காமன்றன் பூசலிலே.

கஞ்சமலை

இந்நாட்டில் கஞ்சமலை என்று ஒரு மலை. அதில் சித்தேசுரர் கோவில் மிகு பிரசித்தம். சத்திரங்களுமுண்டு. அமாவாசைத் தோறும் கூட்டம். மலையில் பலபல மூலிகைகளிருக்கிறது எனப் பல சந்நியாசிகளும் பெரியோர்களும் சஞ்சரிக்கிறார்கள். மாசிமகத்தில் முப்பூ வழலை தோன்றுகிறதென்றும் பல நாடுகளிலிருந்து வாதிகளும், வைத்தியர்களும், வடநாட்டுக் கோஷயாயிகளும் கூடுகிறார்கள். இது மகுடஞ்சாவடி, அரியானூர், வேம்படிதாளம் ஸ்டேஷன்.

திருமந்திரம் - குருபரம்பாரியம்
மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்கன்
இந்திரன் சோமன், பிரமனுருத்திரன்
கந்துரு காலாங்கி கஞ்சமலையனோ
டிருந்த வெழுபது மென்வழியாமே

## ஏழூர் நாடு

### ஏழூர்

தேசீசுரர்
தேனார் குழலியம்மை
தேசய நாராயணப் பெருமாள்
முத்துக்கணபதி
பண்ணையம்மன்
ஏரிக்கரைக் கன்னிமார்
கற்பூர ஆய்

ஏழூர் என்பது கீழ்கரைப் பூந்துறை நாட்டின் இணைநாட்டில் ஒன்று. இந்நாட்டின் தலைமையான ஊராகும். இது திருநாவுக்கரச சுவாமிகள் தேவாரத்துள் சேத்திரக் கோவை - 56.

'கொடுங்கோளூர் அஞ்சைக்களஞ் செங்குன்றூர் குரக்குக்காவும்
நெடுங்களம் நன்னிலயம் நெல்லிக்காவும் நின்றியூர் நீடூர் நியமநல்லூர்
இடும்பர் வனமெழுமூர் ஏழூர் தோழூர்



என்றிருக்கக் காணப்படுவதால் தேவார வைப்புத் தலத்து ஒன்று. ஏழூரில் பல சிவலிங்கங்கள் நிரம்பிச் சிறப்புற்றிருந்தனவெனத் தெரிகின்றன. காலாந்தரங்களில் வழிபாடுகளின்றி ஆலயங்களும் இடிந்து போயின. இப்பொழுது உள்ள தேசீசரும் பூஜையின்றி மலினமுற்றிருக்கிறது. இந்தத் தேசீசரும், மைசூர் சிக்கதேவராஜவிடம் பிரதானியாய் 'கொற்றமிகு தேசயன் துருகம் புரக்கு நாள்' என்றும், 'தலையான தேசய னாட்களாயுததியில்' என்றும், 'சிக்கதேவராச மேவத் தேசயன் துருகஞ்சிமை ஒக்கவேபுரக்கும்' என்றும் தலைப்புடைய செய்யுட்கள் திருச்செங்கோட்டுத் திருப்பணி மாலையில் சொல்லப்பட்டிருக்கின்றன. அதுவன்றித் திருச்செங் கோட்டில் இவன் பலதிருப்பணிகள் செய்திருப்பதுடன் ' தேசய துரை தாபித்த தேசிஈசுரருக்கென்றும் கூறப்பட்டுள்ளது. இவனால் பிரதிட்டிக்கப்பட்ட தேசீசர், நாகாசலத்தின் மீது நாரிகணபதி மண்டபத்துக்குக் கிழக்கு வாயிலுக்கு முன் புறம் இன்னும் இருப்பது காணலாம். அந்தத் தேசயனென்பவனால் நிறுவப்பட்டது இந்தச் சிவக்குறியானதால் தேசீசுரர் என, திருநாமமாயிற்று. அன்றியும் தேசய நாராயணப் பெருமாள் என்பதும் அக்காரணம் பற்றியே யாம்.

**பண்ணையம்மன்** என்பது இவ்வூர்க்காணிக்கு உரியவர்களான பண்ணைக் குலத்தார்களால் பிரதிட்டிக்கப்பெற்று வழிபாடு நடத்தி வரும் காரணம் பற்றி அப்பெயர் பூண்டது போலும். இந்தப் பண்ணையம்மன் மூலஸ்தானம் ஏழூரிலிருக்கிறது. உத்ஸவ மூர்த்தி சேந்தமங்கலம் சிவாலயத்திலிருக்கிறது. உத்ஸவ காலங்களில் திருச்செங்கோடு அர்த்தநாரி குருக்கள் போய் சேந்தமங்கலத்திலிருந்து எழுந்தருளச் செய்வித்துவரப்படுகிறது. உத்ஸவம் முடிந்தவுடன் பழயபடி சேந்தமங்கலம் சிவாலயம் போய்ச்சேருகிறது.

கற்பூர ஆய் - ஏழூரில் கற்பூரி- வள்ளி என இரு சகோதரிகள் ஆடல்களாலும், பாடல்களாலும் நிரம்பப் பிரசித்தியடைந்த செல்வந்திகள். சந்ததியில்லை. வருந்தினார்கள். தத்து எடுத்துக் கொள்ளுங்கள் என்று சொன்னார்கள். தீவினைசெய்தவர்களானதால் சந்ததியற்றவர்களாக ஆனோம். தத்து எடுத்துக் கொள்வதால் என்ன நலம் பெறப் போகிறோம். அடியார்களுக்கும் ஆண்டவனுக்கும் வழிபாடு செய்யினும் பலனுண்டு. அநேகர் தத்து எடுத்து, தத்துபுத்திரர்கள் உள்ள பொருளை தீயவழியில் அழித்து தத்துக் கொண்டோருக்கு அன்னபானாதிகளுக்கே உதவாது தீமை செய்வதைப் பார்த்துள்ளோம். ஆனதால் பல உயிர்களுக்கு வளர்ச்சி பிழைக்கும் மார்க்கமுள்ள உபகாரமான நிலையான தருமத்தைச் செய்தால் புகழும் புண்ணியமும் உண்டாம் என்று எண்ணினார்கள். அதுவும் ஒரு ஏரி

கட்டினால் நீர் நிரம்பும், நஞ்சை நிலமாம் விளைவு பெருகி ஊர் செழிக்கும். பல குடித் தனங்களுக்கும் தொழிலாம். பல பிராணிகள் உண்டு குடித்து பிழைக்கும் என எண்ணினார்கள். இதை அதிகார வர்க்கத்தவர்களுக்கும் அறிவித்தார்கள். நல்ல வேளையில் தொடங்கிக் கைப் பொருட் செலவில் முடித்தார்கள். இப்போதும் நல்ல நிலையில் இருக்கிறது. இதற்கு மூன்று மதகுகள். நடுமதகு வெண்கல மதகு என்கிறார்கள். தங்களுடைய பொருள் களை எல்லாம் நல்ல எண்ணத்துடன் இதற்கே கொடுத்தார்கள். வேலை முடிந்தது. ஒட்டர்களுக்குக் கொஞ்சம் பணம் கொடுக்க வேண்டி யிருந்தது. தலைமை ஒட்டன் இவர்களைப் பணத்தைக் கொடுக்கும் படி தொந்தரவு செய்தான். என்ன செய்வார்கள் பாவம். ஏழூர்க் காணியாளக் கவுண்டர்களிடம் சென்று ஐயா, கனவான்களே! இந்த ஏரிக்கு ε.ங்கள் கைப்பொருளையெல்லாம் கொடுத்தோம். வேலை யும் முடிந்தது. ஒட்டர்களுக்குச் சொற்பப் பணம் கொடுக்க வேண்டும். எங்களிடம் இல்லை. ஒட்டன் நச்சுகிறான். யாரேனும் கடன் கொடுத்தால் சீக்கிரம் கட்டிவிடுகிறோம். தயவு செய்யுங்கள் என்று மெத்த இரந்து வேண்டினார்கள். ஒருவரும் கொடுக்கவில்லை.' கடன் பட்டார் நெஞ்சம் போல கலங்கினான்' என்றபடி மெத்தக் கலங்கினார்கள். மானத்தை இழப்பதை விட பிராணத்தை இழப்பது நலம் எனத் துணிந்தார்கள். அதிலும் சிலர் தொடங்கும் கருமம் முற்றுப் பெறாது போவதும் உண்டே. அவ்வாறின்றிக் கடவுள் சகாயத்தால் முற்றுப் பெற்றது. நீரும் நிரம்பியது. கண்கள் களிகொளப் பார்த்தோம். சந்தோஷமுற்றோம். ஆதலால் நாமிருவரும் நிரம்பிய இக்குள நீரில் வீழ்ந்து முழுகிவிடுவோம் என பேசிமுடிவு செய்தார்கள். இருவரும் தலைமேலே கை குவித்துக் கொண்டு இரு கண்களையும் மூடிக் கொண்டு சற்று நேரம் ஈசுரத் தியானம் செய்து நின்றார்கள். பெரியவள் விழித்து,' எங்கெங்கும் மழை பொழிய ஏழூர் நீர்நிரம்பக் காணியாளர் வீடு கருவற்றுப் போக, வத்த குடி வளர்ந்தேற, இருந்த குடி யிடேருமற் போக' என வசை மொழி கூறி, இளையாளின் புடவையை இருவரும் உடுத்துக் கொண்டு மூத்தாளின் புடவையை ஒட்டன் கையில் கொடுத்தார்கள். இளையாளின் புடவையை ஒரு முந்தானையை ஒட்டன் கையில் கொடுத்த நிமிஷமே' சம்போ சங்கர மஹாதேவா' என்று உரக்கச் சொல்லிக் கொண்டே நீர் நிரம்பிய குளத்திற் குதித்துவிட்டார்கள். ஒட்டன் ஒன்றும் தோன்றா தவனாகத் திகைத்து நின்றான். ஐயோ இந்த ஏரி கட்டுவதற்குப் பல ஆயிரம் ரூபா இந்த அம்மாள்மார்கள் தானே என் கையிற் கொடுத்தார் கள். பாக்கியுள்ளது மிகு சொற்பந்தானே. கேட்காமல் இருந்திருப் பதை விட்டு, அடுத்துத் தொடர்ந்தால் மனவருத்தம் கொண்டு ஏரியில்



விழுந்து இறந்து விட்டார்களே? இந்த சந்தர்ப்பத்தில் சகாயம் செய்யவும் தோற்றாது திகைத்து நின்று விட்டேனே, ஐயோ, இவ்விதமான புண்ணியசாலிகள் உயிர்விட்ட பின்பு, நாம் இருந்து என்ன பிரயோஜனம். ஒன்றுமில்லை. ஆகையால் நாமும் இக்குளத்தி லேயே விழுந்து மாண்டு போவதுதான் சரி என்று குதித்து விட்டான். இதனைப் பார்த்த அவன் வளர்த்த நாயும் கூடவே குதித்து மாண்டு விட்டது. இந்த நான்கு உருவங்களையும் கல்லில் அடித்து அந்த ஏரிக் கரையில் நட்டு இருக்கிறது என்று சொல்லி நட்டிருக்கும் கல்லைக் காட்டுகிறார்கள்.

## கட்டிக்கவுண்டன்

ஏழூரில் பொருளந்தை குலத்தில் பழனிவேல கவுண்டன் என்பவனுக்கு கட்டி கவுண்டன் என்பவன் ஒரு மகன் இருந்தான். அவன் சமர்த்தன், தந்திரசாலி. மிகுந்த சிரமப்பட்டு பாரபத்திய வேலை சம்பாதித்தான். கிடைத்தவுடன் மிக நயமாக கிராமங்களில் குடிகளிடம் அரசிறைப் பணத்தைத் தண்டி செலுத்திவிடுவான். சொற்ப நாள் ஆனவுடன் சில கொடியவர்களது உறவுபூண்டான். குடிகளிடம் நல்ல எருது, பசு இருந்தால் குறைந்த விலைக்குக் கேட்பான். கொடுக்காவிட்டால் திருடர்களைவிட்டுத் திருடச் செய்வான். இன்னும் பலவகையில் குடிகளைத் தொந்தரவு செய்வான். தானியங்களை அல்லது கால்நடைகளை விற்று, நாளை கந்தாயம் செலுத்துகிறேன். என்றால் உடனே குட்டையில் அடிப்பான். அவனிடம் உள்ள தோட்டி தலையாரிகள் காலையில் 5-6 சுமை புளியமாறு கொண்டு வந்து போடவேண்டும். கந்தாயம், சந்தைக்குப் போய் கால்நடைகளை விற்றுக் கொண்டு வருகிறேன் என்றால் புளியம் மார்களால், குனிந்திருக்கச் சொல்லி, அடிப்பான். ஆட்களைக் கொண்டும் அடிக்கச் செய்வான். குடிகள் அலறுவார்கள். நடுப்பகல் கடு வெயிலில் ஒரு அடிச் சதுரமாகக் கோடு கிழித்து அதற்குள் நிற்க வைத்து அடிப்பான். முதுகில் குண்டு கல்லை வைத்துச் சுமந்து கொண்டிருக்கும்படி செய்வன். ஒரு பெரியவர் இதனைக் கண்டு ஐயா, கடுமையான தண்டனை செய்கிறீர்களே என்றனர். இதனைக் கடுமை என்கிறீர்களே எங்க சம்பந்தி, போக்கம் பாளையம் பாரபத்தியத்தான், அவர் கருவேல் முதலிய முள்ளருவாகளால் ஓயாது அடிக்கிறார்களே. நான் முள்ளற்ற மாறிலே தானே அடிக்கிறேன் என்றானாம். இவ்விதம் கடுமையாக நடக்கும் இவன் தண்டிய தொகையைச் செலுத்தாமல் சொந்த உபயோகப்படுத்தினான். இதனையறிந்த அதிகாரிகள் பிடித்துப்போய் சங்ககிரிக் கோட்டைச் சிறையில் அடைத்துவிட்டார்கள். இப்படிச் சிலமுறை செய்தார்கள்.

பின்பு பருத்திப் பள்ளியில் தங்கியிருந்த அதிகாரி இவனை அழைத்துக் கேட்டதில், சரியான உத்தரம் கொடுக்காமல் ஏறுமாறாகப் பேசினான். உடனே இவன் மீது யானையை விட்டுத் தலையை மிதிப்பித்து கொலை செய்து விட்டனராம். அந்த பருத்திப் பள்ளி ஏரிக்கரையில் இவனுடைய தலை என்று ஒன்று செய்து வைத்திருக்கிறதாம்.

ஆனால் தான தருமம் ஒன்றும் செய்தவனல்லன். என்றாலும் இவன் மீது நாரசிங்கன் என்னும் புலவன் பள்ளுப் பிரபந்தம் பாடியிருக்கிறான். அதில் இவன் பல கீர்த்திகள் படைத்தான் எனக் கூறப்பட்டுளது. அவைகள் காங்கேய நாட்டில் பொருளந்தை குலத்தில் இம்முடிக் காங்கேய மன்றாடியார் என்ற பட்டக்காரர் மிகு பெருமையோடு இருந்தார். அவர் படைத்துள்ள கீர்த்திகளை யெல்லாம் அந்தப் பொருளந்தை குலத்தில் பிறந்தவனாதலின் இவன் மேலேற்றிப் பாடியிருக்கிறார் என்கிறார்கள்.

இம்முடிச் சிற்றம்பல நாயனாரவர்களின் சிஷியர் என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

இந்தக் கட்டி கவுண்டனுக்கு முந்நாளில் ஏழூர் நாட்டுக் கவுண்டன் வசம் ஏழூர் நாடு இருந்தது. அவன் மீது மோகனி விலாசம் ஒன்றிருக்கிறதாம். கிடைக்கவில்லை. அதை வெளிப்படுத்திப் பெருமையடையலாம் என்று அவர்கள் சந்ததியார்களுக்கும் இல்லை. இது முடியுமுன் கிடைத்தால் அநுபந்தமாக அதைச் சேர்த்துக் கொள்ளலாம்.

### நாட்டா மங்கலம்

ஈசுவரர்

மோராண்டியம்மன்

அங்காளம்மன்

மாரியாயி

பொருளந்தை குலம், செம்பன் குலம் காணியாட்சி.

பங்குனி மாதம் திருவிழா. பண்டாரம் பூசாரி.

ஏழூர் நாட்டு நியாயங்கள் பேசுதற்கு நாட்டார்களெல்லாம் கூடும் இடமாதலின் நாட்டார் மங்கலம் என்கிறார்கள்.

### கலியாணி

ஏகாம்பரேசுரர்

அன்னபூரணியம்மன்

விநாயகர்

கரிய பெருமாள்

லட்சுமித் தாயார்



பொன்காளியம்மன்

மாரியம்மன்

பஞ்சாயத்து போர்டு ஸ்கூல் இருக்கிறது.

ஏழூர் நாட்டுக் கவுண்டர்கள் காணியாட்சிக்காரர்கள்.

தூரன் கூட்டம் வேளாளர்கள் குதிரை பிடித்தல்.

முப்பாடு மூப்பன் சாண்ார்

திருவிழா பங்குனி மாதம். பண்டாரம் பூஜை.

பெருமாள் கோவில் பூசாரி இடையர் - கோனார்.

முன்காலத்திலிருந்து கவர்ன்மெண்டு மானியம் இருக்கிறது.

### நவனி

அத்தனூரம்மன்

எழுவாண்டியம்மன்

மாரியம்மன்

செல்லன், கூறை, பொருளந்தை காணி.

திருவிழா பங்குனி மாதம். உப்பிலியர் பூசாரி.

## தீவட்டிக் கொள்ளைத் தலைவன்

## பிச்சுக் குப்பையன்

திருச்செங்கோடு தாலூகா ஏழூர் நாடு,தோட்டக்கூறப்பட்டியில், தெலுங்கப் பார்ப்பனரில், நவனிக் கிராமக் கணக்கு வேலை பார்ப்பவன். பெரிய பூஸ்திதி உள்ளவன். சுற்றிலுமுள்ள ஊர்களுக்கு மதிப்புற்றவன். கிராமத்தார்களில் பகை, சண்டை, மனஸ்தாபங்களேற்பட்டால் இவனிடம் வந்து சொல்லிக்கொள்வார்கள். பாரபட்சமின்றி வழக்குத் தீர்ப்பவன். சொன்னபடி இரு கட்சியாரும் ஒப்புக் கொள்வார்கள்.குடிகள் ஒப்ப நடப்பதால் செல்வாக்கு உண்டு. சர்க்கார் அதிகாரிகளால் பெரு மதிப்புற்று வாழ்வன். இவ்வாறு ஒழுகுவதில் அடுத்த கிராமங்களிலுள்ள குடிகளெல்லாம் வந்து முறையிடுவதில் சொன்னபடி கேளாதவர்களைத் தண்டிப்பது என்ற முறையில் கேளாதவர்களை அடிப்பதும், அவர்கள் பொருள்களை அழிப்பதுமாகவே பழக்கங்கொண்டு கொள்ளைக்குக் கொண்டு வந்து விட்டது. இது பெருகவே சேலம் ஜில்லா, திருச்சினாப்பள்ளி ஜில்லா. கோயமுத்தூர் ஜில்லா முதலிய இடங்களிலும் ஞாயம் பேசப் போவதும் சொன்னசொல் கேளாதவர்களை அடக்குமுறையாக அவர்கள் பொருள்களைக் கொள்ளையடிப்பதுமாக பெரும்

பழக்கமாய், பின்பு நிவிட்டிக் கொள்ளைத் தலைவனாக வந்து விட்டான். நடந்தை சிராப்பள்ளி இன்னும் பல இடங்களிலுள்ள வேட்டுவர்கள், கள்ளர்களில் பலர் சேர்ந்து விட்டார்கள்.

இக்கூட்டத்தார் கொள்ளைக்குப் போவதானால் இந்தத் தேதி கொள்ளைக்கு வருகிறோம். பொருள்களைத் தயாராக வைத்துக் கொண்டு இருக்க வேண்டும். தவறினால் வீடு முதலியவைகள் ஒன்று இராது என்று முன்னறிக்கை வரும். பின்னிட்டுக் குறித்த நாளிலோ வேறுகாலத்திலோ வருவார்கள்.

மேனா பல்லக்கில் பிச்ச குப்பய்யர் வருவர். குதிரைகளில் 4, 5 வீரர்களுக்குக் குறையாது வருவார்கள். இரவு வந்து சேருவார்கள். பல திசைகளிலிருந்தும் சிறு சிறு கூட்டமாகப் பல தொகுதிகளாக இருப்பர். தல யாத்திரீகர், காவடி எடுத்துக் கொண்டு அரகரா, அரகரா என்றும் தப்புக் கொட்டிக் கொண்டு கோவிந்தா கோவிந்தா என்றும் போவது உண்டு. குறிப்பிட்ட இடம் 2,3 மைல்களில் ஆடு, கோழி அறுத்துச் சமைத்து நாட்டுச் சாராயம், கள் வைத்துக் கொண்டும் அறிவித்தவாறு வரவை எதிர்பார்த்து அங்கங்கே இருப்பர். குடித்து உண்டு குறித்தவாறு புறப்படுவர். கொள்ளை செய்யும் இடத்தில் தான் பல நிவட்டிகளோடு சேர்வார்கள்.

வீட்டுக்கு உடையவர்கள் தங்கள் உடைமைகளை வைத்திருப் பார்கள். அந்தக் கண்டசரம் எங்கே? சந்திரகாரம் எங்கே? எடுத்து வை' என்று கேட்பார்கள். மறுதலித்தால் கை விரல்களுக்கு எண்ணெய்த் துணி சுற்றுவார்கள். பொறுத்துவார்கள். ஒருவருக்குத் துணி சுற்றும் பொழுதே கூச்சலாய் விடும். பார்க்கவா? தடுக்கவா ஒருவரும் வருவதில்லை.

சேலத்தில் ஒரு வீட்டுக் கொள்ளையில் ஒரு பெண் ஐயர் காலில், முறையோ என்று விழுந்து என் தகப்பனார் வீட்டிலிருந்து 10 நாளின்போதுதானையா இங்கு வந்தேன். குழந்தை அணிந்திருந்த தங்கக் காப்புக் கொலுசும், என் நகைகளும் போய்விட்டது. என் செய்வேன் என்று அழுததைப் பார்த்து, மனது இரங்கி அந்த நகை களைக் கொடுக்கச் சொன்னதுமன்றி வேறு ஒரு நகையும் பரிசாகக் கொடுத்தனன் என்பர். பல இடங்களில் பல சமயங்களில் பல துன்பங் கள் கொள்ளை செய்து கொள்ளை அடித்ததை ஜனங்களுக்கு மிகுந்த வருத்தமும் உண்டாய்விட்டது.

பசுக்கள், எருதுகள், எருமைகள் தாவணி தாவணியாக்கட்டி அதை, அணியாக ஓட்டிக் கொண்டு போவார்களாம். பொதி எருதுகள் மேலேற்றிக் கொண்டும் போவார்கள். 'தோலைக் கடித்துச் செருப்பைக் கடித்து வேட்டை நாய் ஆயிற்று' என்பது போல வழக்குத்



தீர்ப்பதாக ஆரம்பித்து பெருங் கொள்ளையாய் விட்டது. இதனை அதிகாரிகளும் கவனிக்கலானார்கள். பின்பு அடக்க வேண்டுமென்று எண்ணி இக்கூட்டத்தாரைப் பிடித்தார்கள். விசாரணைக்குக் கொண்டு போன காலத்தில், பல சிப்பாய்கள் காவலராக வந்தார்கள். அவர்களைப் பிச்சக்குப்பையன் பார்த்து நகைத்து ஏன் இத்தனை காவல் நாங்கள் மறுதலிப்பது இல்லை. தப்பி ஓடுவதுமில்லை என்றானாம்.

விசாரணை முடிந்ததும் குற்றம் ஏற்படுகிறது. ஏதேனும் சொல்லிக் கொள்வது உண்டானால் சொல்லிக் கொள்ளலாம்என, ஐய, நாங்கள் கொள்ளையடித்தது உண்மைதான்.

கொள்ளையடிப்பது என்பது யோசித்துப் பார்த்தால், வலி குன்றியவர்களிடத்தில் கொள்ளையடிப்பது சக்கிரவர்த்தி முதல் கொண்டு, ஊர்த் தலைவன் வரையில் கொள்ளையடிப்பதாகவே இருக்கிறது. அதிகாரிகள் கொள்ளைக்கும் என் போன்றோர் கொள்ளைக்கும் வித்தியாசம் ' மயிர்-மசிர்' இவ்விரு வார்த்தை வித்தியாசமே ஆகும். 'வேந்தர்கள் தேசக் கொள்ளை' என் போன்றோர் ஊர் கொள்ளை. ஆம். என்றானாம். நீ குற்றவாளி உன்னைத் தண்டித்தேன் என்று ஜட்ஜி தீர்ப்புச் சொன்னாராம்.

முசிறி

விநாயகர்

அழகிய மணவாளப் பெருமாள்

சென்னராயப்பெருமாள்

செல்லாண்டியம்மன்

மாரியம்மன்

அப்பிச்சிமார்

போர்டு பாடசாலை

பிள்ளை குலம் காணியாட்சிக்காரர்

கவர்ன்மெண்டு மானியமுண்டு. விபூதி முதல் சகல மரியாதை "ம் வேட்டுவர்களுக்குத்தான்.

வெள்ளாஞ்செட்டி கோவிந்தன் கூட்டம் பெருமாள் கோவில் பூசாரி.

மாரியம்மன் கோவிலுக்கு உப்பிலியர், செல்லியாயிக்கு பண்டாரம் 1 - மயில் தூரத்திலிருந்து முப்பாடு உண்டு.

செல்லியாயிக்கும், மாரியாயிக்கும் பங்குனி மாதம் திருவிழா.

## புத்தூர்

சோழீகரர்

பங்கஜவல்லியம்மன்

சுப்பிரமணியர்

பெருமாள்

மாரியம்மன்

காளியம்மன்

பூர்வம்சோழீகரர் புற்றிடங்கொண்டவராய் விளங்கினர். பின்பு பெரிதான சிவலிங்கம் அதன் மீது பிரதிட்டிக்கப்பட்டதாம். பின்னர் ஒரு ராஜாக்கவுண்டர் என்பவரால் கற்பக்கிரகம், அர்த்த மண்டபம் மஹா மண்டபம் செய்யப்பட்டதாம். சுமார் 100 ஆண்டுக்குள் கூளை ராஜாக்கவுண்டன் என்பவரால் பெரிய மண்டபம், சமயாசாரியார்கள், அறுபத்து மூவர் முதலியனவும் நவக்கிரகங்களும் தெப்பக்குள மாதிகள் சிறப்பாகச் செய்விக்கப்பட்டது. பின்னர் ஈசுர வருஷம் ஆனி மாதத்தில் ஆலய பிரணோத்தாரம் செய்து அஷ்டபந்தன கும்பாபி ஷேகம் சிறப்பாக நடத்தப்பட்டது. எஸ்.சுப்பராய கவுண்டன், என். இராஜாக் கவுண்டன், எம். இராஜாக்கவுண்டன் மனைவி காளியம் மாள் ஆகியவர்கள் மிகு சிரத்தையாக நடத்தினார்கள். நித்திய பூஜை முதலானவற்றிற்கு இக்குடும்பத்தார் ஐவேசு வைத்திருக்கிறார்கள்.

பத்திர காளியம்மனுக்கு பாண்டி வேட்டுவர், வேட்டுவர் உரிமை கொண்டு செய்வன செய்கிறார்கள்.

இவ்வூரில் சோழிய வேளாளக் குடிகள் இருக்கிறார்கள்.

தேவேந்திர பள்ளர்கள் என்னும் மருதநிலமக்கள் விசேஷமாக இருக்கிறார்கள்.

இதை அடுத்த வேலகவுண்டன்பட்டியில் ஒரு போலீஸ் ஸ்டேஷ னிருக்கிறது.

## தாழம்பாடி

விநாயகர்

சென்னராயப் பெருமாள்

மாரியம்மன்

செல்லாண்டியம்மன்

போர்டு ஸ்கூல்

மணியன், கண்ணந்தை, செம்பூத்தன், பண்ணை, சோழியப்



பிள்ளை, பிள்ளைகுல வேளாளர் காணியாச்சிக்காரர்கள்.

சகல மரியாதையும் இவர்களதுதான்.

பெருங்குடி குலம், வெண்டுவன், விலையன், தூரன், சோழியப்பிள்ளை வெள்ளாளர் முதல் காணி.

கம்பக்காடு, மலைமேல் கம்பாலராய பெருமாள் கோவில் இருக்கிறது. திருவிழா பங்குனி மாதம்.

## தும்பங்குறிச்சி

விநாயகர்

பெருமாள்

மதுரகாளியம்மன்

மாரியம்மன்

போர்டு ஸ்கூல்.

பண்ணை, தூரன் காணியாட்சி.

பண்ணை குலத்தார் குதிரை பிடித்தல்.

தூர குலத்தார் பிற்பாடு.

கொங்கு பரிகாரிக்கு காணியுண்டு.

இவன் குலம் துவரங்குலமாம்.

பொங்கல் ஒன்றாகத் தோண்டல்.

வேட்டுவர் முற்பாடு.

சித்திரை மாதம் திருவிழா.

பண்டாரம் பூசாரி.

## மானத்தி

ஈசுரர்

அம்மன்

விநாயகர்

கரிய பெருமாள்

மாரியம்மல்

செல்லாண்டியம்மன்

போர்டு ஸ்கூல்.

வேளாளர் காணியாட்சி. சகலமரியாதையும் முற்பாடு, பிற்பாடு.

மாரியம்மனுக்கு உப்பிலியன் பூசாரி.

செல்லாண்டியம்மனுக்கு பண்டாரம் பூசாரி
பெருமாளுக்கு வடுக நாயக்கன் பூசாரி
ஈசுரர் கோவிலுக்கு பூஜை கிடையாது.
பங்குனி மாதம் திருவிழா.
மானியமுண்டு

### இளநகரி

விநாயகர்
கரிய பெருமாள்
செல்லாண்டியம்மன்
மாரியம்மன்
படைத்தலச்சி
அழகுநாச்சியம்மன்
நாகாத்தா

பெருமாள் கோவிலுக்கு வடுக நாயக்கன் பூசாரி.
மாரியம்மன் கோவிலுக்கு உப்பிலியன் பூசாரி.
மற்ற கோவில்களுக்கு பண்டாரம் பூசாரி.
ஊருக்கு கொடிக்கா மூலையாக குமாரமலை இருக்கிறது. குமார ஸ்வாமி கோவில் இருக்கிறது
பங்குனி மாதம் திருவிழா.
மூலவேட்டுவ கவுண்டர் காணி. சகல மரியாதையும் இவர்களுக்குத் தான்.
மானியமுண்டு.

### மாறப்பனூர்(மாரம்பட்டி)

விநாயகன்
மாரியம்மன்

மணியன், பெருங்குடி காணி.
பங்குனி மாதம் திருவிழா

### மரூர்ப்பட்டி

விநாயகர்
சுப்பிரமணியர்
மரூர்ப் பெருமாள் கரட்டின்மேலிருக்கிறது.



செல்லாண்டியம்மன்
மாரியம்மன்

ஆந்தை, மணியன், செங்குன்னி
கம்பளத் தொட்டிய நாயக்கர்
முற்பாடு பிற்பாடு பூசை கோவணாண்டிகள்.

### முத்லைப்பட்டி

விநாயகர்
சஞ்சீவராயப் பெருமாள்
மாரியம்மன்

பெருங்குடி, ஆந்தை, விலயன், மணியன்.
வடுக நாயக்கர் காணி.
சேணியர்களுமிருக்கிறார்கள்.
சடல் குத்துவது இருக்கிறது.
போர்டு ஸ்கூல் இருக்கிறது.

### நல்லிபாளையம்

விநாயகன்
மாரியம்மன்

| | |
|---|---|
| பண்ணை | பயிரன் |
| மணியன் | செம்பன் |
| கண்ணந்தை | காரி |
| தூரன் | கண்ணன் |
| விலயன் | கூறை |
| காடை | சாத்தந்தை |
| செங்குன்னி | பூத்தந்தை |
| செம்பூத்தன் | அந்துவன் |

ஊருக்குக் கிழக்குப்புறம் மாயம் பிள்ளையார் கோபுரமிருக்கிறது. தூரதேசத்திலிருந்து வந்து பிரார்த்தனை செலுத்துகிறார்கள்.
சித்திரை மாதம் திருவிழா.
போர்டு ஸ்கூல் இருக்கிறது.

## கொண்டயனூர்

விநாயகன்
மாரியம்மன்
பொம்மக்காள்

எர்ர கொல்ல ( தொட்டியர்)
நைனா மலை அருகு.

## சிவியாம்பாளையம் - (ரெக்கயாம்பாளையம்)

விநாயகன்
பிடாரியம்மன்
மாரியம்மன்

மணியன், கண்ணந்தை.
உப்பிலியர் காணி.

## முத்தக்கா பட்டி

விநாயகன்
கரியபெருமாள்
மாரியம்மன்

மணியன், செம்பூத்தன்
ஆண்டி பூசாரி முப்பாடு இவர்கள்தான்.
போகல ரெட்டிகள் காணி.

முத்தக்கா குளம் கட்டியது முத்துக்காபட்டி மிட்டா முத்தியாலம்மாள்.

இவ்வூர் மிட்டாதார அம்மாள் மிகுந்த கௌரவமாக உள்ளவர்கள் நாமக்கல் சுவாமி துஜஸ்தம்பத்துக்குத் தங்கத் தகடு போட்டிருக்கிறார்கள். சிதம்பரத்துக்குத் தேர் செய்து வைத்தார்கள். இன்னம் பல தேவஸ்தானங்களுக்கு கட்டளை நடத்திக் கொண்டு வருகிறார்கள்.

## மின்னாம்பள்ளி

விநாயகன்
மாரியம்மன்
செல்லாண்டியம்மன்
காமாட்சியம்மன்

மலைமன்னார் கோயில் மணியம். சகல மரியாதையும் இவர்களுக்குத்தான்.

பங்குனி மாதம் திருவிழா. காமாட்சியம்மன் கோவில் மலைமன்னர் மற்ற கோவில்களுக்கு பண்டாரங்கள்.



## சேந்த மங்கலம்

சோமசுந்தரேசுரர்
சுப்பிரமணியர்
விநாயகன்
வரதராஜப்பெருமாள்
மாரியம்மான்
செல்லாண்டியம்மன்

கிறிஸ்தவர் கோவில் ( ரோமன்)

சேந்தமங்கலத்துக்கு வடமேற்கு மூன்றரை மயிலில் நயனார் மலையிருக்கிறது. அதைக் கண்ணுவரிஷி ஆசிரமமென்று சொல்லப்படுகிறது. வரதராஜப்பெருமாள் குழல்வல்லியம்மன் வீற்றிருக்கப்படுகிறது. நாற்பது கால் மண்டபம் இன்னும் சில மண்டபங்களும் சிறப்பாக இருக்கின்றன. நெற்றுப் பாறையில் ஆஞ்சநேயர் உருவம் லட்சணமாக இருக்கிறது. மலையின் பேரில் தீர்த்தங்களிருக்கின்றன. நாமக்கல் வக்கீல் இரங்கராவ் என்பவர், தருமகர்த்தாவாகச் சில வருஷங்கள் வேலை பார்த்தார். அக்காலத்தில் மலை வழிகளுக்கு கற்பணிகள் செய்தார். இன்னும் பல திருப்பணிகள் ஆயிரக் கணக்குகளாகச் செய்தார்.

தேவஸ்தானத்துக்கு வரவு மிக வருமாறு செய்தனர். துத்திக்குளம் சிதம்பர உடையார் 100 சேர் மணி ஒன்று கொடிக்கம்பத்துக்கு அருகில் கட்டியிருக்கிறார்.

அடிவாரத்தில் ரெட்டிகள் சத்திரம், பட்டுநூல்காரர் சௌராஷ்டிரர் கள் சத்திரம், (மலைமன்னர்) உடையார்கள் சத்திரம், வேதக்காரர் சத்திரம், வண்ணார் சத்திரம் முதலியன இருக்கின்றன. அடிவாரத்தில் மலைகாவலய்யன் என ஒரு பலிதேவதை இருக்கிறது.

மாசிமகத்தில் திருவிழா, மலையிலும், சேந்த மங்கலத்திலும் கொடியேற்றம். ஊருக்கு வடக்கே சிவாலயமிருக்கிறது. மாசி மகத்தில் தான் பிரமோத்ஸவம் காலைமெரவணை, இராத்திரி வாகன மெரவணை நடக்கிறது. உத்ஸவம் முடிந்தவுடன் வேடுபறி ஆனதும் ஈசுரன் கோவிலுக்கு எதிரிலுள்ள குளத்தில் வாணவேடிக்கை நடக்கும்.

## இராமச்சந்திர நாயக்கர்

முன் காலத்தில் பலமான கற்கோட்டை இருந்தது. அதில் இராமச்சந்திர நாயக்கர் இருந்து ஆட்சி புரிந்து வந்தார். கம்பளத்தார் மரபில் பங்காரு ராமச்சந்திர நாயக்கன், மும்முடி ராமச்சந்திர நாயக்கன், தலைமலை ராமச்சந்திரநாயக்கன், குளக்குடி ராமச்சந்திர

நாயக்கன், ராகவ ராமச்சந்திர நாயக்கன், குறவஞ்சி ராமச்சந்திர நாயக்கன் என ஏழு தலைமுறை ஆண்டனராம். இவர்கள் மிகுந்த பிரதாபமாக வாழ்ந்திருக்கிறார்கள். பலமான திருப்பணிகளும் மற்றும் தரும தானங்களும் செய்திருக்கிறார்கள். இந்த ராமச்சந்திர நாயக்கன் இந்த வேலை செய்தது என்று பிரித்துச் சொல்ல போதிய சாதனங்கள் இப்போது எனக்குக் கிடைக்கவில்லை என்றாலும், திருச்செங்கோடு திருப்பணி மாலையில் சில தெரிகின்றன. 234 திருச்செங்கோட்டில் அன்னதான மடம், தினப்படிக்குச் சாமிக்கு அபிஷேகம், சந்தனம், காவேரித் திருமஞ்சனம், தினம் ஐந்து குறுணி அரிசி, தயிர், கறியமுது, வேத அத்தியயனம், நந்தவனம், கூபம், நடராஜாவுக்கு நாபுரம், கவரி, வஸ்தரங்கள், கார்த்திகை தீபோத்ஸவம், சோழசிந்தாமணியில் ஐந்துமா நிலம், புல்லூரில் ஐந்துமா நிலம், நாட்டாமங்கலத்தில் ஐந்துமா, நெருவூரைந்துமா, தாசூரில் ஐந்துமா முதலியன ஈந்தனன். இலுப்பைக்குளம், பூதனேரி முதலியனவும் கொடுத்திருப்பதான 235-ம் செய்யுளில் தெரிகிறது. இதுவன்றி நாட்டாமங்கலத்தில் இவனுடைய சாசனம் ஒன்று இன்னுமிருக்கிறது. நாட்டாமங்கலத்தில் அதைக் காணலாம். இதைத் தவிர சேந்தமங்கலத்தில் கோவில் முதலியன கட்டி இருக்கிறான்.

தனி எட்டி எத்தலி நாயக்கன், தாரமங்கலம் கட்டிமுதலி, சேந்த மங்கலம் ராமச்சந்திர நாயக்கன் இவர்கள் கொங்கு நாட்டுப் பாளயப் பட்டுகளில் சிறந்தவர்கள் என்பர்.

இவர்களில் குறவஞ்சி ராமச்சந்திர நாயக்கரின் மனைவிகள் சின்னக்காள், பெரியக்காள் என இருவரும் இரண்டு குளம் தோண்டி யிருக்கிறார்கள். இதைத்தான் சின்னக்காள் குளம், பெரியக்காள் குளமென வழங்குகிறார்கள். ஊருக்குத் தெற்கே சின்னக்காள்குளம். அதில்தான் ஊரார் தண்ணீர் எடுக்கிறார்கள்.

### அருமைப்பிள்ளை

ஏழூர் நாட்டிலே சேந்தமங்கலத்திலே சோழிய வேளாள மரபிலே மோழைப்பிள்ளை என்பவர் ஒருவர் இருந்தார். ஆண்குழந்தையின்றி இயன்ற தானதருமங்களைச் செய்து விரதம், ஆலய தரிசனம், அடியார் களை உபசரித்து அன்னம் படைத்தல் முதலிய தொண்டு செய்து கொண்டு வந்தனர். திருவருளால் ஒரு ஆண் மகனை அவர் மனைவி யார் ஈன்றனர். நெடுநாள் குழந்தையின்றி அருமையாக உண்டான குழந்தை ஆதலின், அருமைப்பிள்ளை என்று அழைத்தனர். நன்கு வளர்ந்தது. உரிய காலத்தே கல்விக் கழகத்துக்கு அனுப்பினர். சிவ பத்தி, அடியார்பத்தி, இரக்கம், வாய்மை, பொறை முதலிய நற் குணங்களோடு வளர்ந்து பருவமுற்றது. அடுத்த சதுரகிரி யென்னும்



கொல்லிமலை வலப்பூர் நாட்டில் எழுந்தருளியுள்ள அறப்பள்ளி ஈசுரர் திருவருடிப் பத்தி கொண்டு அடிக்கடி அவ்வாலயத்துக்குச் சென்று வணங்கி வரும் நியதி கொண்டு வாழ்ந்தனர்.

இராமாயணக் கீர்த்தனை பாடிய சீகாழி அருணாசலக்கவிராய ருடைய மூத்த குமாரர் அம்பலவாணக் கவிராயர் என்பவர் தல யாத் திரையாகச் சேந்தமங்கலத்துக்கு வந்தனர். அருமை பிள்ளையின் நற்குண நற்செயல்களைக் கேள்வியுற்று இவரைக் கண்டனர். பெயருக் கேற்றவாறு, வந்த கவிஞரை உபசரித்து தம்மில்லத்துச் சில நாளிருக்குமாறு இரந்து வேண்டினர். இசைந்து சில நாள் தங்கினர். இவரது பத்தியையும் வித்துவான்களுக்கு உபசரித் தலையும் நன்கு மதித்து இவர் பெயர் நிலைத்திருக்குமாறு 'அறப்பள்ளீசுரசதகம்' என நீதி சதகம் ஒன்று பாடி அரங்கேற்றினர்.

அச்சதகத்தின் 100-வது செய்யுளில் 'அம்பலவாண கவிராயனாகு மென் கவியையுஞ் சூடியே' என்றும் பாடுவித்தோன் அச்சதகத்தின் முதற்பாட்டிலும் செய்யுட்களின் மகுடமாம் 'மோழை பூபதி பெற்ற வதிபனெமதருமை மதவேள்' அது தினமு மனதினினை தரு சதுரகிரிவன ரறப்பளீசுர தேவனே.'

இந்த அம்பலவாணக் கவிராயர் காங்கேய நாடு சிவமலைப் புராணம் பாடியுள்ளார்.

7-வது செய்யுளில் 'கங்காகுலத்தலைவன்' என்றும் 73-வது செய்யுளில் 'வேளாளர் குலதிலகன்' என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

அறப்பள்ளீசுரர் என்பதை தர்மகோசேகரர் என்றும், தாயம்மை என்பதை சுமாதாம்பாள் என்றும் மொழி பெயர்த்து அர்ச்சனை செய்து வருகிறார்கள்.

'திருநாவுக்கரசு' அடைவு திருத்தாண்டகம் (க)

பொருப்பள்ளி வனவில்லாப் புரமுன் றெய்து

புலந்தழியச் சலந்தரனைப் பிளந்தான் பொற்சக்

கரப்பள்ளி திருநாட்டுப்பள்ளி கள்ளார் தமிழ் கொல்லியறப்பள்ளி

**சேத்திரக் கோவை - (க)**

தில்லைச் சிற்றம்பலமுஞ் செம்பொன்பள்ளி தேவன்குடி சிராப்பள்ளி

தெங்கூர் - கொல்லிக்குளிரறப்புள்ளி

அறப்பள்ளி என்பது கொல்லிமலைமேலுள்ள 14 நாடுகளில் வலப்பூர் நாட்டில் உள்ளது. இது வைப்புத் தலங்களில் ஒன்று. சம்பந்த மூர்த்தி சுவாமிகள் அருளிய 'சேத்திரக்கோவை 4-வது பாரகரம்' அறப்பள்ளி அகத்தியன்பள்ளி என வரும் திருவாக்கால் அறியலாம்.

## கொல்லிமலை திருப்புகழ்

தொல்லை முதல் தானொன்று மெல்லியரு பேகங்கள்
கொல்லு குண மூவந்த — மெனமேவும்
துய்ய சதுர் வேதங்கள் வெய்ய புலவோரைந்து
தொய்யு பொருளாறங்க — மெனமேவும்
பல்லபல நாதங்கள் அல்லபக பாசங்கள்
பல்கு தமிழ் தானொன்றி — இசையாகில்
பல்லுயிரு மாயந்த மில்லசொரு பாநந்த
பௌவமுற வேநின்ற — தருள்வாயே
கல்லுருக வேயின் கண் அல்லல்படு கோவம்பு
கல்வருக வேநின்று — குழவாதுங்
கையன் மரு நாஉம்பன் நொய்ய சடையோனெனந்தை
கைதொழ மெய் ஞானஞ் சொல் — கதிர்வேலா
கொல்லை மிசை வாழ்கின்ற வள்ளிபுனமே சென்று
கொள்ளை கொளு மாரன் கை — அலராலே
கொய்து தழை யே கொண்டு செல்ல மழவாகந்த
கொல்லிமலை மேனின்ற — பெருமாளே

## அவதூதர் மடம்

ஸக்யாஸ ஆஸ்ரமங்களுள் சிறந்ததும் மிகக் கடுமையானதுமாகிய அவதூ தாஸ்ரமத்தை மேற்கொண்டு பரம கருணா மூர்த்தியாக விளங்கி யாவருக்கும் அருள் புரிந்து கொண்டு நாமக்கல் தாலூகா சேந்த மங்கலம், ஸ்ரீ தத்தகிரி குகாலயத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத் ஸ்வயம்பிரகாச பரமேந்திர சரஸ்வதி அவதூத ஸ்வாமிகள் எனப் பலரால் கொண்டாடப் பெறும் பெரியார் ஒருவர்.

குளத்துக்குத் தென் கோடியில் உள்ள காட்டில் தங்கி தத்தாத்திரேய சுவாமி அவதூத சுவாமி என்று ஒரு சந்நியாசி சில காலமாக வசித்து வருகிறார். வைத்தியம் செய்வதுண்டு. அவரைக் காண வேண்டி பலபேர்கள் போகிறார்கள். வரக்கூடிய அன்பர்கள் பொருளுதவி செய்கிறார்கள். சுற்றிலுமுள்ள நிலங்களை மடத்துக்கென்று விடப்பட்டிருக்கிறது.

## பாதிரி மடம்

ரோமன் கதோலிக்க பாதிரியார் மடம் இருக்கிறது. வைத்திய சாலை வைத்திருக்கிறார். கந்நியாஸ்திரீகள் மடம் இருக்கிறது. அதில் பல பெண்கள் இருக்கிறார்கள். துத்திக்குளம் காமாட்டித் தெரு முதலிய இடங்களில் பாடசாலைகளும் சர்ச்சும் கட்டியிருக்கிறார்கள். கிறிஸ்து மார்க்கத்தை விருத்தி செய்ய மிகுந்த வேலை செய்கிறார்.



## நாமக்கல் அநுமார்

சிங்கப் பெருமாள் கோவிலுக்கு மேற்பக்கம் ஏறக்குறைய 300 அடி தொலைவில் ஒரு தனிப்பாறையில் அநுமார் உருவம் நின்ற வண்ணம் செதுக்கப்பட்டிருக்கிறது. அநுமாரின் உயரம் ஏறக்குறைய 18 அடி. அதற்குத் தகுந்த வடிவத்துடன் கைகள் கூப்பிய வண்ணம் ஒரு படைத் தலைவனுடைய உடையுடன் அவ்வுருவம் செதுக்கப்பட்டிருந்தது. சிங்கப் பெருமாளுடைய திருவடியும் அநுமாரின் கண்களும் ஒரே சமகோட்டில் அமைக்கப்பெற்றிருக்கின்றன. நடுவில் இருக்கும் கோபுரத்தில் அநுமாருடைய பார்வை சிங்கப்பெருமாள் திருவடியில் விழும்படி யாகத் துளைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

அவ்வகையான அநுமார் உருவத்தை எவ்விடத்தும் காண்பது அரிது. மிகவும் வேலைப்பாடானது. கோவிலில்லை. வெட்ட வெளியில் நிற்கிறார். இவ்வநுமார் உருவமும் அதிகன் காலத்திலேயே செதுக்கப்பட்டது. நாமக்கல் மலையரண் ' பழய ஓவியங்களைப் பாதுகாக்கும் சட்டப்படி' பாதுகாக்கப்பட்டு வருகிறது. கொல்லி மலையானது' சுக்கிரீவனுடைய' ' மதுவனம்' என்று பெயர் பெறும். ஆகையால் சுக்கிரீவனுக்குப் படைத்தலைவனாகிய அநுமாருக்கும் கொல்லிக்கூற்றத்தைச் சார்ந்த நாட்டுள்ள நாமக்கல்லுக்கும் தொடர்பு உண்டல்லவா?

## கொல்லிப்பாவை

உணவுப் பொருள்களான பலவகைப் பழம் தேன் முதலியன மிகுந்துள்ளது. கொல்லிமலையாதலின், தவத்தின் பொருட்டுத் தனித்து வசிக்க விரும்பிய தேவர்களும் முனிவர்களும் அங்கு வசித் தார்கள். அசுரரும் இராக்கதரும் அங்கு வருவதற்குத் தலைப்பட்டார் கள். இவரால் முனிவர் தவத்துக்கு இடையூறு நேர்ந்தது. காற்று மழை இடி முதலியவற்றாலும் கேடு கொள்ளாதவாறு ஒரு பாவையை விசுவகன்மாவைக் கொண்டு செய்வித்து, அம்மலையின் மேற்குப் பாகத்தில் நாட்டினார்கள்.பலவகைச் சக்தியை அதில் ஊட்டியிருப் பதால் அசுரர் முதலானோரின் காற்றுவாடை படினும் இளஞ் சிரிப்புக் கொள்ளும். கண்டவரது உள்ளத்தையும் கண்பார்வையையுங் கவர்ந்து பெருங் காமவேட்கையை உண்டாக்கி முடிவில் உயிர்போக்கத் தக்க மோகனி வடிவமுடையது. இஃது இயங்குவதையும் நகைப்பதையும் கண்டு மடந்தையாமென மயங்கிக் காமநோய் கொண்டு மடிவரென்பதாம்.

திரிபுரத்தைச் -

செற்றவனுங் கொல்லிச் செழும்பாவையு நகைக்கக்
கற்றதெலா மிந்தநகை கண்டாயோ- (சித்திரமடல்)

செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லித்
தெய்வங் காக்குந் தீதுநீர் நெடுங்கோட்
டவ்வெள் ளருவிக் குடவரை யகத்துக்
கால்பொரு திடிப்பினுங் கதழுறை கடுகினு
முருமுடன் றெரியினு மூறுபல தோன்றினும்
பெருநலங் கிளரினுந் திருநல வுருவின்
மாயா வியற்கைப் பாவை
கொல்லிக்குடவரைப்
பூதம் புணர்ந்த புதிதியல் பாலை - (நற்றிணை)
பெரும்பூட் பொறையின் பேஎமுதிர் கொல்லிக்
கருங்கட் டெய்வங் குடவரை யெழுதிய
நல்லியற்பாவை - ( குறுந்தொகை)

## அறப்பளீசுரர்

அறப்பள்ளீசுரர் கோவிலில் தென்முகமாகக் கோயில் கொண்டிருக்கும் அம்மன் மிகவும் ஆற்றல் வாய்ந்தது. உணர்வு முனைப்புள்ளது. அழகே திரண்டு வந்தாலன்ன உருவத்தை உடையது. ஏறக்குறைய அறுபது ஆண்டுகளுக்கு முன் திருக்கோயில் வழிபாடு செய்யும் குருக்கண்மார் ஒழுக்கந்தவறி நடக்கத் தலைப்பட்டனர். அப்படித் தவறி நடந்த குருக்கண்மார்களில் வழிப்பாட்டிற்காக கீழிருந்து மேலே சென்றவன் ஒருவன் மீண்டும் கீழே இறங்கியவனல்லன். ஒவ்வொருவரும் இங்ஙனமே மாண்டே தீர்ந்தார்கள். இதனை ஒரு பெரியவர் அறிந்து அம்மனுடைய சினத்தைத் தணிக்க வேறு பாகத்திலிருந்த குமரக் கடவுள் கோட்டத்தை அம்மன் திருமுன் பக்கம் நேராக நிறுவி வழிபாடுகள் செய்து வைத்தார். அதற்கப்புறம் அவ்வகையான நிகழ்ச்சி ஒன்றும் நடைபெறவில்லை. ஆனால் வழிபாடு செய்யும் குருக்கள்மார் அவர்களுக்கிருக்கும் இயற்கையறியாமல் மேன்மேலும் தவறி நடக்கவே அவர்களுக்குக் கால் வலியில்லாமல் அற்றுப் போயிற்று. இக்காலத்தில் மாதத்துக்கொரு ஸ்மார்த்த பார்ப்பனராக வழிபாடு நடத்திக் கொண்டு வருகிறார்கள். அதுவும் சில நேரங்களில் நின்று விடுகிறது.

கொல்லிமலை என்பது கொங்கு நாட்டுக்கும் சோழநாட்டுக்கும் எல்லையாக இருக்கிறது. ஒவ்வொரு பக்கத்துக்கும் இருபது கல் தொலைவு. எனவே நானூறு சதுர மைல் பரப்பும் 3000 முதல் 4100 அடியாக வாளவந்திநாடு, வலப்பூர் நாடு, அரியூர் நாடு, முண்டுர்நாடு, தேவானூர் நாடு, சேலூர் நாடு, திண்ணனூர் நாடு, இவ்வேழும்



(நாமக்கல் தாலுக்காவில் சேர்ந்திருக்கின்றன) பயில் நாடு, பிறக்கடை நாடு , சித்தூர்நாடு, இடைப்புளி நாடு, திருப்புளி நாடு, குண்டுணி நாடு ஆலத்தூர் நாடு, ஆனி இவ்வேழு நாடுகளும் ஆற்றூர் தாலுகாவை சேர்ந்தனவாக இருக்கின்றன. பதினான்கு நாடுகளுக்குள்ளே வளப்பூர் நாட்டில் அறப்பள்ளிப் பெருமகன் எழுந்தருளியிருக்கிறார். அம்மன் தாயம்மை பேரழகு வாய்ந்த திருவுருவம் வட மொழியில் தர்மகோகேசுவரர் கமதாம்பா என்று கூறுகிறார்கள். அம்மன் திருமுன் இருக்கும் சுப்பிரமணியர் மீது அருணகிரிநாதர் திருப்புகழ் பாடியுள்ளார். மாசி மலையான் கோயில் ஒன்று சிறப்புற விளங்குகிறது. மாசி மாதத்தில் திருவிழா நடைபெறும். கொங்கலாயி அம்மனுக்கு கருநெல், அரிசிப் பொங்கலும், கருவாழைப்பழமும் படைப்பார்கள். மலையின் தென் கீழ்ப்பாகத்தில் அன்பாயி கோயில் ஒன்றும் சிறந்து விளங்குகிறது. வாசலூர் குளிவளவு செல்லிப்பாளையம் இவ்விடங்களில் காட்டிலாக்கா மாளிகைகளுண்டு.

அறப்பள்ளீசுரர் கோயிலுக்கு வடபுறத்தில் ஐய்யாறு என்னும் ஆறு ஒன்று ஓடுகிறது. இந்த ஆற்றில் வகைவகையான கண்ணைக் கவரும் நிறங்களை உடைய மீன்கள் நிறைய உண்டு. அறப்பள்ளி ஈசுரர் மீன் வடிவமாக ஆற்றில் இருக்கிறார் என்பது மரபு. கோயிலில் வழிபாடு செய்வதற்கு முன் சோறு முதலிய தின்பண்டங்கள் மீன்களுக்கு ஆற்றில்விட்டுப் பின்புதான் கோயிலில் வழிபாடு செய்வது வழக்கம். அவ்வாற்றிலுள்ள மீன்களை ஒருவரும் பிடிப்பதில்லை. பிடிக்கக் கூடாதென்றும் கட்டுப்பாடும் உண்டு. இவ்வாறு கோயிலுக்கு வடகிழக்குப்புறமாகச் சென்று அரைமயில் தொலையில் நீர்வீழ்ச்சியாக (Waterfalls) வீழ்கிறது. இந்த நீர் வீழ்ச்சியின் உயரம் ஏறக்குறைய 150 அடி இருக்கும். அந்நீர் வீழ்ச்சி வரும்போது புகையாக மாறும். அந்நீர்வீழ்ச்சியில் முழுகினால் உடலிலுள்ள வலி முதலிய சில நோய்கள் நீங்கிவிடும். மின் ஆற்றல் உடம்பில் ஏறும். இவ்வித நீர்வீழ்ச்சி மலையினின்று இறங்கி துறையூர் முசிரி மார்க்கமாகக் காவிரியிற் கூடும்.

மலைவாழுநர், இக்கொல்லிமலையில் வசிப்பவர்கள் ஒரு வகை வேளாளர்கள். திருமணங்கள் கொங்கு வேளாளர்களைப் போன்று ஏகதேசம் நடக்கும். பயிர்த்தொழில், மேற்கூறிய பதினான்கு நாடுகளிலும் ஏராளமான சிற்றூருகளுண்டு. ஒவ்வொருவருக்கும் ஆடு, மாடுகள், எருமைகள், பன்றிகள் நிறைய உண்டு. பள்ளத்தாக்குகளை வயல்களாகவும், மேட்டுப்பாங்குகளை மற்றைய தானியங்களுக்கும் அமைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஒவ்வொரு நாட்டுக்கும் மலையாளிகளுள் நாட்டுக்கவுண்டன்

உண்டு. மலையாளிகளுக்குக் கவுண்டன் என்ற பட்டந்தான். எல்லா நாட்டுக்கும் தலைமையான இடம் அறப்பள்ளீசுரர் இருக்கும் வளப்பூர் நாடே ஆகும். அந்த வளப்பூர் நாட்டுக்குத் தலைவனாக வுள்ளவனே எல்லா நாட்டுக் கவுண்டன்களுக்கும் தலைவன். அறப்பள்ளிநாதப் பெருமாள் கோவிலுக்கும் தலைவன் அவனே. இத்தகைய தலைவனுக்குக் குதிரை ஏறுவதும், குடைப்பிடித்துக் கொள்வதும், மிதியடி போட்டுக் கொள்வதும், கம்பளத்தின் மேல் உட்கார்வதும் முதலான மரியாதைகள் உண்டு. மற்ற நாட்டுக் கவுண்டர்களுக்கு ஒவ்வொரு மரியாதை குறைவாயிருக்கும். இவர்கள் தங்கள் ஜாதி நியாயங்களுக்குப் புறப்பட்டாற் கொம்பு தப்பட்டை யுடன் குதிரை ஏறிக் குடை பிடித்துச் செல்வார்கள். மலையாளிகளுக்கு இவர்கள் செய்யுந் தீர்ப்பே கடைசியானது. மலையாளிகளைத் தவிர யாருக்கும் கொல்லிமலையில் நிலங் கொடுப்பதில்லை. இப் பொழுது மலையாளிகளுக்கு உபகாரம் செய்வதாகப் பாதிரி கொஞ்சம் பிடித்துள்ளார்.

## விளை பொருள்கள்

விசேஷமாகப் பலாப்பழம், மாம்பழம்,கொளிஞ்சி, கொய்யா, நாரத்தை, அநாசி, ஆரஞ்சு, கோதுமை, கேழ்வரகு, வரகு, சாமை, தினை, குதிரைவாள், நெல், உளுந்து, துவரை, பயறு, கடலை, பனிப்பயிறு, கரு மொச்சை, செம்மொச்சை, மொச்சை, தட்டைப்பயறு, ஏலம், திப்பிலி, கடுகு உண்டாகின்றன. தேக்கு, தேங்கண்ணி, வேங்கை, இருப்பூட்டு, கருநல்லி, சண்பகம் முதலியன உண்டாகின்றன. தேன் மிகுதி.

## மலைத்தடம்

கொல்லி மலைக்குப் போகக் கால்வழிகள் பல இருக்கின்றன. வண்டிகள் போகக்கூடிய தடம் இல்லை. போக்குவரவுக்குச் சேந்தமங்கலம் கால் வழி ஒன்றே தகுதி. அதில் லீச் என்று சொல்லப்பட்ட இரத்தத்தைக் குடிக்கும் புழுக்கள் கிடையா. மற்ற வழிகள் உண்டு. சேந்த மங்கலத்திலிருந்து வாசலூர் வழியாய் குதிரை வழி ஒன்றுண்டு. அந்த வழியில் குதிரைமேல் ஏறிக் கொண்டு போகலாம். இவ்வழியிற்றான் முற்காலத்தில் குதிரைகள், யானைகள் சென்று வந்தன.

## ஓரி

இவனை ஆதனோரியெனவும், வல்விலோரி எனவும் கூறுவர். கொல்லிமலையையும், அதனைச் சூழ்ந்த நாட்டினையும் ஆண்டிருந்த வல்வில் ஓரி பல் பழப்பலவின் பயங்கெழு கொல்லி (அகநானூறு) வல்விலோரி கொல்லிக் குடவரை (குறுந்தொகை), இரவலர்க்கு



வரையாது கொடுக்கும் வன்மையான், கடையேழுவள்ளலி லொருவன், கடையேழு வள்ளலில் மற்றொருவரான காரிக்குப் பகைவன், இவனைப் பற்றி நற்றிணை 6-265, கபிலர் 320-ம் பாடலிலும் குறுந்தொகை 100 -ம் பாடலிலும் சிறப்பித்திருக்கிறார்கள். கொல்லி குடவரை யென்பதால் கொல்லி மலையின் மேற்குக் கூறு எனத் தோன்றுகிறது.

இவன் கொல்லி மலையை ஆண்டு வரும் காலத்து அதிக மா னொடுமானஞ்சி திருக்கோவிலூரை முற்றி வென்று கைப்பற்றிக் கொண்டான். அதனை ஆண்டிருந்த திருமுடிக்காரி அஞ்சியோட போரில் நிற்கலாற்றாது தோற்றோடிச் சேரமான் பெருஞ்சேரனிரும் பொறையிடம் தான் பெற வேண்டுமென்று குறிப்புடையானாதலை யறிந்த காரி படையுடன் சென்று கொல்லிமலையிலே ஓரியுடன் போர் புரிந்துஓரியைக் கொன்று தான் மிக்க ஆரவாரத்தோடு ஓரி யினுடைய நகர் புகுந்தான். அங்ஙனம் புகுதலும் ஊர் முழுதும் ஒல்லென்னும் ஒலியுண்டாயிற்று.' ஓரிக்கொன்ற ஒரு பெருந் தெருவின் காரி புக்க நேரார்புரம் போற் கல்லென்றன்றாலூரே' (நற்றி 20) பின்னர் அக்கொல்லிமலை முதலியவற்றைச் சேரலனுக்கே கொடுத்து விட்டனன்.

' முள்ளூர் மன்னன் கழறொடிக் காரி, செல்லா நல்லிசை நிறுத்த வல்வி, லோரிக் கொன்று சேரலிற்கீத்த செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி' (அகம் 209)

கொல்லிமலையின் மேற்குப் பாகமானது பூந்துறை நாட்டின் இணைநாடான ஏழூர் நாட்டின் றொடரும், ராசிபுர நாட்டின் கூறும், வானவந்தி நாட்டின் பங்கான தூசியூர் நாட்டினிடமும் பொருந்தி யுள்ளது.

## துத்திக்குளம்

விநாயகன்

செல்லாண்டியம்மன்

மாரியம்மன்

பகவதியம்மன்

பட்டத்தலைச்சியம்மன்

அங்காளம்மன்

செல்லி ஆயிக்கும் மாரியம்மனுக்கும் காணியாட்சிக்காரன் தொண்ட வேளாளன். ஆண்டி பூசாரி, வடுக நாயக்கர் காணியாளர்கள்.

ஊருக்கு மேப்புறத்தில் கோட்டைமேடு இருக்கிறது. அதை உழுது பயிரிடுகிறார்கள். உழு படைச்சாலில் பழயகாலத்து வெள்ளி முதலிய லோக நாயணயங்கள் அகப்படுகின்றன. எள் ஆடும் செக்குகளுமிருக்கின்றன.

ஒன்றரை மயில் தூரத்தில் நயினாமலை இருக்கிறது. செல்லாண்டியம்மனுக்குத் தேர் உண்டு. நல்ல வளமான பூமி.

எலிமென்டரி பாடசாலை இருக்கிறது.

காளப்ப நாயக்கன்பட்டி

பிள்ளையார்

மாரியம்மன்

வேளாளர் காணியாட்சி

வடுக ரவுத்துகள் காணி

வடுக் நாயக்கர் பிரபலமாகப் பண்டரிநாதர் பஜனை மடம் கட்டி இருக்கிறார்கள். யூனியன் ஆபீஸ், தபாலாபீஸ், போர்டு ஸ்கூல் இருக்கிறது.

வெட்டுக்காடு

விந..யகன்

மாரியம்மன்

காணியாட்சிக்காரர் - குறும்பர் மலையாள கவுண்டர்

கருதானி

ஆவுடையாரிசுரர்

ஈசுவரி

விநாயகர்

பெருமாள்

காளியம்மன்

ஆச்சியம்மன்

மாரியம்மன்

கொங்கலாயி

முனியப்பன்

மதுரை வீரன்

கொங்கலாயிக்கு வேளாளர் காணி

ஆச்சியம்மன் பள்ளிகள் காணி

பங்குனி மாதம் திருவிழா



புடங்கம்

விநாயகன்

முனியப்பன்

படையாட்சிகள் காணி

திருமலைப்பட்டி

விநாயகன்

சென்றாயப் பெருமாள்

மாரியம்மன்

நயினாமலை வரதராஜ சுவாமி

மலைமான் வெள்ளிகோத்திரம் காணியாட்சி

சித்திரைமாதம் திருவிழா

கண்ணூறு பட்டி

ஆவுடையார் ஈசுரர்

விநாயகன்

பெருமாள்

மாரியம்மன்

செல்லியம்மன்

பெரியாண்டவன்

பட்டத்தலைச்சி

பெரியாண்டவர்

உத்தண்டராயன் - முனியப்பன் - கன்னிமார் - ஐயனாரப்பன்- கருப்பண்ணசாமி இருசாயி பாப்பாத்தியம்மன்

படையாட்சிகள் காணி.

கலங்காணி

வேலவர்

விநாயகன்

மாரியம்மன்

வரதராஜப் பெருமாள்

முத்துக்குமாரசாமி கைக்கோளருக்கு

மலையம்மன் - வெள்ளி கோத்திரத்தார் காணி

பங்குனி மாதம் திருவிழா

போர்டு ஸ்கூல் இருக்கிறது.

## உடுப்பம்

மாரியம்மன்

விலயகுல வேளாளர் காணி. பங்குனி மாதம் திருவிழா

போர்டு ஸ்கூல் இருக்கிறது.

## காரைக்குறிச்சி

பரமேசுரர்

அங்காளம்மன் ( தெலுங்க செட்டிகளுடையது)

வரதராஜப் பெருமாள்

செல்லியம்மன்

மாரியம்மன்

மலைமான் வேளார் குலகோத்திரம். தெலுங்கு செட்டியார்கள்.

கற்ப குலம் இவ்விருவர் காணி

## அகரம்

தத்தாத்திரி ஈசுரர்

மதிபதியம்மன்

வரதராஜப் பெருமாள்

மாரியம்மன்

விலையன் வேளாளர் காணி

மேற்கு கசரவரதி நதி

போர்டு ஸ்கூல் இருக்கிறது.

## முத்தயனூர் ( முத்தப்புடையான் பாளயம்)

விநாயகன்

சென்றாயப் பெருமாள்

செல்லாண்டியம்மன்

மாரியாயி

மலையமான் உடையார் காணியாட்சி

பெருமாள் கோவிலுக்கு வேட்டுவர்.

## மேல்கரைப் பூந்துறை

கொங்கு இருபத்து நான்கினுள்ளே பூந்துறை நாடு தலைமை யானது. அதுவும் காவேரி இடையுறக் கீழ்பாலுற்றது. கீழ்கரை பூந்துறை,மேல்பாலுள்ளது. மேல்கரைப் பூந்துறையாகும் என முன்னம் கூறப்பட்டிருக்கிறது.



பூந்துறை நாட்டிற் தலைமை பெற்றது என்பதல்லது பெரிய நகரமாயும் நகரத்துக்குள்ள பல சிறப்பு அமைதிகளும் கொண்டது. ஆனால் இப்பொழுது ஊர் கருங்கி இருக்கினும் பிற நலங்களெல்லாம் குறைவின்றி விளங்குகிறது. சைவ வைஷ்ணவ சம்பந்தமான கோயில்களே அன்றி ஜைனர் கோயிலும் இருக்கிறது. இப்பொழுதும் ஜைன வேதியரிருந்து பூசிக்கிறார்களென்பது விசேஷமாகும்.

புஷ்பவனேசுரர்

பாகம்பிரியாளம்மை

தான்றோன்றிலிங்கர்

விகவேசர்

விசாலாட்சி

தாமோதரப் பெருமாள்

அங்காலம்மை

கரிய காளி

வலம்புரி விநாயகர்

காடை விநாயகர்

செல்ல விநாயகர்

ஐயனார்

பார்கவ தீர்த்தநகரர்

கோயில்களிருக்கின்றன.

இது, தேவார வைப்புத்தலங்களிலொன்று. ஒரு புராணம் தமிழ்ச் செய்யுளாக இருக்கிறது.

இத்தலத்தில் உமாதேவியார் தவம் செய்திருக்கிறார்.

வியாழ பகவான் சாபத்தால் அரம்பை ஊர்வசியென்னும் இருவரும் தாசிப் பெண்களாய் அம்மையைப் பூசித்து வரம் வேண்டியதால் பொன்மாரி பூமாரி பொழிந்தது.

கரிகாற் சோழன் வணங்கி கரிய காளி பிரதிஷ்டை செய்தான்.

குலோத்துங்க சோழன் என்பவன், ஊர் ஒன்பது, மங்கலம் நான்கு, ஓடை நான்கு, பள்ளி இரண்டு, நிலை இரண்டு, துறை இரண்டு, பாடி ஒன்று, தொரு ஒன்று, மலை ஒன்று, வாச்சி ஒன்று, குறிச்சி ஒன்று, விளக்கு ஒன்று, கம் ஒன்று, விளக்கேத்தி ஒன்று என்னும் முடிபு களுடைய ஊர்களையும் முப்பத்திரண்டு வகைத் தருமங்களென ஏற்படுத்தினான் என்பது புராணக்கதை.

பூந்துறை நாட்டு காணி கொண்டவன் குப்பிச்சி என்பவன் மேல்கரைப் பூந்துறையில் கொங்கு வேளாளரில் காடை குலத்தில் மாட்டையாக் குப்பிச்சி என்போன் விஜய நகரஞ் சென்றான். அங்கே ஒரு மல்லன், இடது காலிற் சங்கிலி ஒன்றின் தலைப்பைக் கட்டி மற்றொரு தலைப்பை வாசற்படியின் எதிர்ப்பக்கமாக மேலே மாட்டித் தோரணம்போலத் தொங்க விட்டிருந்தான். வல்லவர்களா னாற் றன்னைச் சயித்து உள்ளேபோகவேண்டியது. இல்லையேல் தன் காலிற் கட்டித் தொங்கவிட்டிருக்கும் சங்கிலிக்குக் கீழே நுழைந்து போக வேண்டியது என்றிருப்பதைத் தெரிந்து கொண்டான். அந்த மல்லனுடன் யுத்தஞ் செய்து குப்புற வீழ்த்தினான். அத்தாணி மண்டபத்துட் புகுந்து வேந்தனைக் கண்டான். ஒரு குதிரை இருக்கிறது. அதன் மேலேறிச் சவாரி செய்து வருவாயேல் நீ வல்லாய் என்றரசன் கூறினன். அப்படியே நடத்துகிறேன் என்று ஒப்புக் கொண்டனன். அந்தக் குதிரையோ பொல்லாதது. ஏறினவுடனே அந்நகரத்து அருகிலுள்ள நீர்நிலையுட்கொண்டு சென்று கீழே தள்ளிப் புறழ்ந்து மிதித்து வருந் தகுதி பெற்றது என்பது தெரிந்தான். சுண்ணாம்புக்கல் சம்பாதித்துத் துணிப்பையுள் நிரப்பிக் குதிரை அடி வயிறு உறக்கட்டிவிட்டு ஏறினான். உடனே குதிரை அதிவேகமாக வீதி வழியாகச் சென்று வாரிதி போலத் தேங்கியுள்ள நீர்நிலையுள் வழக்கப்படி நினைத்துக்கொண்டு இறங்கியது. வயற்றளவு நீருட் செல்லவே அந்நீர் பட்டவுடன் சுண்ணாம்புக்கல் கொதிப்புற்றது. குதிரை அதனால் தோன்றிய எரிச்சலைப் பொறுக்க முடியாது வெளியேறிச் சாரி கொண்டது. அதி வேகத்திலேயே அந்நகர் வீதி சுற்றி ஆட்டுவித்து அரசன் முன் கொண்டு வந்து வந்தனஞ் செய்தனன். இவனது யுக்தியை மெச்சிய அரசன் பூந்துறை நாட்டு அதிகாரமும் மற்றும் அதிகாரமும் கொடுத்தனுப்பினான்.

' இவ்வகை வழக்கம் அக்காலத்து இருந்தது என்பதற்கு எட்டயபுர சமஸ்தானத்து வம்சமணிதீபிகை மூன்றாவது பிரகாணத்தில் 12-வது பட்டம் நல்லம நாயக்கரவர்கள் விஜயநகரஞ் சென்றிருந்த காலத்தில் தெற்கு வாசலில் சோமன் என்ற மல்லவீரன் இவ்விதம் இடது காலில் தங்கச் சங்கிலி கட்டிக் கொண்டிருந்ததாகவும், அவனைக் கொன்று உள்ளே நுழைந்ததாகவும்' எழுதப்பட்டிருக்கிறது.

சுண்ணாம்புக்கல் கட்டுதல் முதலிய யோசனைக்கு உடனிருந்து உதவி புரிந்த ஒரு உப்பிலிய நல்லயன் என்பவனுக்கு இந்த நாட்டதிகாரி ஒரு மரியாதை கொடுத்தனன். அது இது :-

பூந்துறையில் செதுக்கிய கல்லால் ஒரு மேடை கட்டப் பட்டிருக் கிறது. ஜாதி ஞாயம் உப்பிலியர் அம்மேடையிலிருந்து பேசுவர்.



அப்பொழுது மேலோர் அங்கு வரினும் உட்கார்ந்தபடியே பேசலாம் என்பதாம். அம்மேடையினிருபுறச் சுவரினும் குதிரையைப் பிடித்தல், சுண்ணாம்புக் கல்கட்டல், சாரி செய்தல் முதலிய குறிகள் வெட்டப்பட்டிருக்கின்றன.

பூந்துறை புட்பவன நாதர் ஆலயத்துள் பாகம்பிரியா நாயகியார் கர்ப்பக்கிரக இடப்புறச்சுவரில் அக்கோவில்களில் திருப்பணி செய்துள்ள குப்பன் அழைப்பித்தான் எனக் கண்டுள்ளவர்களுள் குப்பன் ( குப்பிச்சி) இவனாம். விஜயநகரம் சதாசிவராயர் - ராமராஜர் சாசனங்கள் இங்கு காணப்படுகின்றன. இவர்களுடைய காலம் கி.பி. 1541 முதல் 1565 வரை.எனவே இன்றைக்கு 380 ஆண்டுகளாகின்றன.

பார்கவ தீர்த்தங்கரர் என்பவர் ஜைன மதோத்தாரணர்கள் இருபத்து நால்வருள்ளே ஒருவர் பார்கவ தீர்த்தங்கரராவார். அவரைப்பற்றி, -

அற்புதனாயு சத்வருடம் முழமொன்பதுயர்
வெற்புயவக்ரகுல விகவசேனன் பிராமிசுதன்
உற்பித்ததை யிருளேகாத சிதிதி பச்சை வண்ணன்
நற்குணன் பார்கவனாதன் விசாகத்து நாள் வந்ததே

(சதுர்விம்சதி தீர்த்தங்கரர் அந்தாதி)

## வித்வான் - காழியண்ணப்புலவர்

திருச்செங்கோட்டுக்குக் கிழக்கே ஒரு மயிலில் உள்ள, மண்டகப் பாளையம் என்னும் ஊரிலே கருணீகர் மரபிலே, கிராமக் கணக்கு வேலை பார்ப்பவரான செம்புக்காளி பிள்ளைக்குப் புத்திரராகப் பிறந்தார். சிறு வயதில் வாசிப்பதில் அக்கரை பாராட்டுவதில்லை. விளையாட்டில் பிரியம் அதிகமாக இருப்பவர். வாசிப்பவர்கள், பிரசிங்கிப்பவர்களிடத்து அகலாமல் அவர்கள் சொல்லாமல் அவர்களுக்கு அவசியமான காரியத்தைச் செய்வர். கிராமக்கணக்கு எழுதலாகிய குலத்தொழிலைச் சிந்திப்பது கிடையாது. அதனால் உற்றார்கள் இவரை மதிப்பதில்லை. திருச்செங்கோட்டில் அக் காலத்தில் சிற்றம்பலக் கவிராயரென்பவர் பிரசித்த வித்வானாக விளங்கினர். இலக்கண இலக்கியங்களில் வல்லவர். அவரிடத்தே பாடல் கேட்டுக் கொண்டனர். பின்பு திருவாவடுதுறை சென்று ஸ்ரீ பண்டார சந்நதியவர்களைத் தரிசித்து இலக்கண வேலாயுதசாமி யவர்களிடத்தில் தொல்காப்பியப் பொருளாதிகாரம் பாடங் கேட்டனர். ஒரு நாள் ஆசிரியர் ஏட்டில் ஒரு நூலெழுதி மைசாத்திய திருமுறையைப் பார்த்த சில தம்பிரான்கள் புகழ்ந்தார்கள். அப்பொழுது இவர் :-

விருத்தம்

பண்ணை மொழி யகலாத பெண்ணாற் பங்கப்
படுசிவனு மிவற் கிணையோ பாரீர் யார்க்கும்
வெண்ணெயென வுருகு நெஞ்சக் கருணா மூர்த்தி
ழேவலப்பதேசிக னோர் வினயங் கூர்ந்து
பெண்ணை மட லூடெழுதி மஞ்சட்பூசிப்
பெருக்கமையிட் டலங்கரித்துப் பேணிப் பேணிக்
கண்ணையும்வைத் தொரு சாட்சி யிட்டுக்கட்டிக்
கற்புடைய னென்றுகொடி கட்டினானே

எனக்கூறக்கேட்டு மகிழ்ந்தனர். கேட்ட தம்பிரான்கள் செய்யுள் சொல்லும் விரைவையும், பொருளமைதியையுங் கண்டு வியந்தார் கள்.

சிலநாளங்கிருந்தும் சந்நிதானத்தும் ஆசிரியரிடத்தும் விடை பெற்றுக் கொண்டு திருச்செங்கோட்டுக்கு வந்து உமையொரு பாகரை வணங்கியிருந்தனர்.

இவரது புலமைத் திறத்தையும் இனிய குணத்தையும் கேள்விப் பட்ட பூந்துறை வாரணவாசிக் கவுண்டர் இப்புலவரைக் கண்டு பேசி, காளி என்று எடுத்துக்கூழி, என்று முடித்து ஒரு வெண்பாச் சொல்லுக என்றனர்.

வெண்பா

'காளி முரன்று கறங்கிவளர் பூந்துறைசை
வாளபிமன் வாரண வாசிமன்னன் - கேள்வியினாற்
பொன்னனையூ ரானேன் பொறாமயலுக் கென் செய்வேன்
என்னுள்ளம் வெவ்வியகூ ழி

கா - அளி-காளி, குடாகாயம் என்பது போல்வது, எனக் கூறக் கேட்டு மகிழ்ந்து தம்மூருக்கு அழைத்துப் போய் வீடும் கொஞ்சம் விளைநிலங்களும் சம்பாதித்துக் கொடுத்து நாட்டுப் புலவரென அனுமானித்து வைத்திருந்தனர். பழயகோட்டைக்குச் சென்று உத்தமக் காமிண்ட நல்ல சேனாதிபதி சர்க்கரை மன்றாடியாருக்கு அனுப்பிய,

விருத்தம்

கற்றவருக்கீயாதன் பாவிவெகுதண்டு மிண்டன் கருணையில்லான், உற்றறிவிலாதவன் றப்பிலிகேடு கெட்டவன் மெய்யுரையான் சண்டி, நற்பணியேகைக் கணியான் றேவடியார்க் கேவல் செய்வா னல்ல தம்பிச் சர்க்கரைசேய் நல்ல சேனாதிபதியாஞ் சர்க்கரையு தாரன்றானே.



இத்தனை வாசித்து உட்பொருளை நேசித்து அன்புடன் வரவழைத்துபசரித்து அவர் கருத்தை யறிந்து, மதுரைக்குப் போய்வருஞ் செலவுக்குப் பொருளுதவியனுப்பினர். மடவளாகம் லட்சுமண பாரதியாரும் இவரையடிக்கடி சந்தித்துச் சல்லாப கவிகள் பலபாடி மகிழ்வதுண்டு.

மதுரைக்குச் சென்று திருஞான சம்பந்தமூர்த்தி மடாதிபதியைக் கண்டு தரிசித்தனர். பலவரை நோக்கி " திருப்பரங்குன்றத்து வாழ்வே சிவபர தேசிகனே' என ஈற்றடியெடுத்துக் கொடுத்து மேல் மூன்றடியைச் சொல்க என்றனர்! உடனே இவர்,-

கட்டளைக்கலித்துறை

பொருப்பாங் குன்றத்து மாயூர நின்பொற்பொலிவினைக்கண்
டிருப்பரங் குன்றத் துவக்காட்சியா ரெளியோன் நொடிய
கருப்பரங்குன்றத் துணைத்தாட் கருத்தினுங் காண்பதென்றோ
திருப்பரங் குன்றத்து வாழ்வே சிவபரதேசிகனே " எனவே

' கயற்கண்ணி' என்ற எதுகை கொண்டு ஒரு திரிபு சொல்லுக என்றனர்.

கட்டளைக் கலித்துறை

' மயற்கண்ணின் மாதர் வழிக்கே வழிப்படு மாண்பனுஞ்சீர்
செயற்கண்ணி நல்வழி சேர்தலென் றோயிருஞ் சேர்பழன
வயற்கண் ணிகல்சங்கு மூத்தீன்ற செல்வ மதுரையிலங்
கயற் கண்ணியே யெனைக் காத்தாள்வதென்றுங் கடனுனக்கே'

எனக்கூறக் கேட்டுச் சந்தோஷமுற்றுத் தமது திருமடத்திற் சிலநாள் தங்கியிருக்கும்படி கட்டளையிட்டுப் பின், புலவரது கருத்தினையறிந்து விசேஷ தீட்சை செய்து உடையவரை எழுந்தருளிச் செய்வித்துக் கொடுத்தனர். சிலநாளிருந்து அரிதின் விடைபெற்றுக் கொண்டு திரும்பிப் பூந்துறைக்கு வந்தனர்.

பூந்துறையினின்றும் திருச்செங்கோடு சேர்ந்து ஸ்ரீ அர்த்த நாரீசுரரைத் தரிசித்துக் குமரமங்கலம், மானத்தி, கொக்கராயன் பேட்டை, சங்ககிரி, கொங்கணாபுரம் முதலிய மிட்டாதாரர்களைக் கண்டு பாடி சன்மானங்களைப் பெற்றுக் கொண்டு வேளுகுறிச்சி சென்று,

வெண்பா

இருமடந்தை நண்ப னிராசைவள நாடே
ளரு விழியன் வேள் குறிச்சி யாளன் - பரஞ்சேர்
வழிவேலவன் பேரன் வாணஞ் சயன்சே
யெழில்கப்ப ராயனெவன்

எனுஞ் செய்யுளை ஆரம்பிக்கும்பொழுதே மிட்டாதாரர் எழுந்து வணங்கி இரு கைகளையும் ஆரச்சேரப் பிடித்துத் தழுவி ஆசனத் திருத்தித் தானுமிருந்தனர். உடனே புலவர்,

விருத்தம்

'சிந்தை மகிழ்ந் திடுமைசூர்ச் சமஸ்தானத்திற்
செயவில்லை கம்பனியார் செய்யமாட்டார்
அந்த மிகு செஞ்சி தஞ்சா வூர்க் கூடற்கோ
வரசில்லைச் சேதுவுக்கோ ராணிப்பட்டம்
வந்த வெட்டி யாபுரத்திற் பேட்டியில்லை
மற்றவர்க்கோ கொடை கொடுக்க வளம் போதாது
செந்தமிழ்க்கு வேள் குறிச்சி யொன்றே யல்லாற்
செய்யுதற்கோ வேறிலை முச்செகத்திற்றானே' -என்றனர்.

என்று சொல்லக் கேட்டு மிக மகிழ்ந்து பலமாத காலம் தம்மூரிலேயே இருத்தல் வேண்டுமென்ற மிட்டாதாரரின் விருப்பத்துக்கிணங்கி மகிழ்ந்திருந்தனர். பின்பு கொக்கராயன்பேட்டை மிட்டாதார் பெரிய ரங்கைய கவுண்டரைக் கண்டு,

மெலிந்த பல சினகரமு மதிலு மெழின் மண்டபமும் விளக்கி யிந்து, மலிந்த முடியரனரி யெண்பந் தனநற் திருவுருவு மாதேர் கண்டு, பொலிந்த பல சமயமுதி யோருறவு கொண்டு சைவப் புனிதத் துள்ளம், வலிந்தமுன சைப்பெரிய ரங்கயநின் னடை நோக்கி மகிழ்கின்றேனே.

-என்பது முதலிய பல செய்யுட்களும் பிரசங்கங்களும் செய்து கொண்டு சிலநாளிருந்து, மிட்டா மானியமாக நிலங் கொடுக்கப் பெற்றனர். அந்தப் பிரதேசங்களிலுள்ள மற்றும் மிட்டாதாரர்களி டமும் மானியம் பெற்றுப் பின்பு வேளுகுறிச்சிக்குச் சென்றனர். அங்கே வரும் புளியங்குடி முத்துவீரர்க் கவிராயர் முதலிய பல தமிழ் வித்துவான்களுடன் கூடி அளவளாவி வாழ்ந்திருந்தனர். வேளுக் குறிச்சியிலேயே சிவபெருமான் திருவடி நீழலையடைந்தனர். இவர் இயற்றிய நூல்கள் கொன்றை வேந்தன் வெண்பா, கொன்றை வேந்தன் மாலை, பூந்துறைப் புராணம் முதலியன. காலம் இன்றைக்கு 60 வருஷங்களுக்கு முன் இருந்திருக்கின்றனர்.

வெள்ளோடை

மேல்கரைப் பூந்துறைத் தலைநகர் நான்கினுள் இது இரண்டாவது.

சர்வ லிங்கநாதர்

பாடகவல்லியம்மை



சுப்பிரமணியர்

கணபதி

ஆதிநாராயணப் பெருமாள்

லட்சுமி நாராயணப் பெருமாள்

பொன்காளி அம்மன்

அயத்தாள்

ஆயி அம்மன்

விசுவகன்மியான் அழகிய ஒரு சிவலிங்கம் செய்து முறைப்படிக்கு ஸ்தாபித்துப் போற்றி வணங்கினான். இந்திரனது வெள்ளையான ஐராவதம் நித்தியப்படி மூன்று காலங்களிலும் தொழுது வணங்கிற்று. அதன் மதம் பெருகி வடிந்து ஓடி வெள்ளோடையாயிற்று. அதைப் பாலோடை என்றும் கூறுவார்கள். அந்த வரப்பிரசாதமூர்த்தியைத் தேவர்களும் வணங்கினார்கள். பாடகவல்லிசமேத சர்வலிங்க மூர்த்தியை முனிவரும் வேந்தரும் தொழுது நல்வரங்கள் பெற்றனர் எனப் பூந்துறைப் புராணம் கூறுகிறது.

சாத்தந்தை - பயரன் - காணி

இக்குலத்தினர் காணியாட்சியுடையவர்கள். இவர்களுள்ளே மேல் கரைப் பூந்துறை வெள்ளோட்டில் கொங்கு வேளாளரில் சாத்தந்தை குலத்தின் ஒரு வாலிபன் தன் முயற்சியால் வீர பாண்டியன் சேனாபதி யானான். தமிழரசர் மந்திரி சேனாதிபதிகளுக்குக் காளிங்கராயன் மாளவராயன் (மழவராயன்) என்னும் பட்டத்தைப் பெற்றுப் புகழுடன் வாழ்ந்து வந்தான். தான் பிறந்த நாட்டுக்குந் தன் குலத் துக்குந் தனக்கும் புகழும் புண்ணியமுந் தோன்றக் காவிரியுடன் சங்கம மாகின்ற இடத்துக்கு அணித்தாக பவானி நதியைத் தடுத்து அணை கட்டினான். இன்னும் அவ்வணைக்குக் காளிங்கராயன் அணை என்ற பெயர் வழங்குகின்றது. கோயமுத்தூருக்கடுத்த ஊற்றுக்குழி ஜமீன்தார் (பாளையகாரர்) இவன் சந்ததியானதால் நாளுங் காளிங்கராயன் என்ற பட்டத்தைக் கொண்டு வருகிறார்கள். அந்த மந்திரி திருச்செங்கோடு ஸ்ரீ அர்த்தநாரீசுரருக்கு மானியம் விட்டிருக்கிறதாகத் திருப்பணி மாலையில் தெரிகிறது.

ஆலிங்க நாகமலை யர்த்தநா ரீசுரர்க்குக்
காலிங்க ராயனெனுங் காராளன் - மாலிங்க
மென்றேமா மாந்தை நிலமெழுமா வுங்கொடுத்தான்.
நன்றே புகழெய்தி னான்.-

(திருச்செங்- திருப்பணிமாலை)

திரை கொண்ட வாரியை மாலடைத் தான்செழுங் காவிரியை
உரைகொண்ட சோழன்மு னாளடைத் தானுலகேழறிய
வரை கொண்ட பூந்துறை நன்னாடு வாழ்கவவ் வானிதனைக்
கரைகொண்ட டடைத்தவன் வெள்ளோடைச் சாத்தந்தை காளிங்கனே

- (தனிப்பாட்டு)

ஏற்று - திரைப் பொன்னி கூடுறு வானி யிடைமடங்க
வெற்றி மிகுந்த அதிவீர பாண்டிய வேந்தமைச்சன்
கற்ற வறிவினன் காளிங்க ராயன்செய் கால்கழீநீர்
உற்ற வனத்தை வனவயலாக வுயர்த்தியதே.

- (தனிப்பாட்டு)

இந்த வீரபாண்டிய அரசன் கொங்கு நாட்டை ஆண்டிருக்கிறான் என்பதை விஜயமங்கலம் முதலிய இடங்களிலுள்ள கல்வெட்டுகளும் எபிகிராபி 1913-14 வருஷாந்த ரிபோர்ட்டும் நன்கு விளங்கும். கி.பி.1250க்கு மேல் 1280 வருஷங்களுக்கு இடையில் இவன் இருந்திருக்கிறான்.

1913 -ம் வருஷம் ஊற்றுக்குழி ஜமீன் மானேஜர் ஸ்ரீமான் ஜே.எம்.துரைசாமி பிள்ளையவர்கள் இங்கிலீஷில் எழுதி அச்சிட்டுள்ள ஜமீன் சரித்திர புத்தகத்திலும், அதை அநுசரித்த கோயமுத்தூர் ஜில்லா மானியுல் முதலிய ஆங்கில சரித்திரங்களிலும் காளிங்கராயன் என்ற பெயர்க்காரணமும் அணைக்கட்டு விவரமும் இதற்கு முரண்படுகின்றன. அவைகள் எந்த ஆதாரத்தின் மேல் எழுதியனவென்ற விளங்கவில்லை.

## மாளவராயன்

காங்கேய நாட்டு மயிலிரங்கம் வைத்தியநாதர் கோயில் சாஸனத்தில் "..... காணியாளர் காவிலவரில் பிறைசூடி வீரப்பெருமாள் ரோகாவும், வேளாளர் ஆந்தைகளில் சேருமா பிறவியாரும் மாடைகளில் மாளவராயர் அவிகை மாளவராயர்......." என்றிருப்பதாலறியக் கிடக்கின்றது.

கொங்கு மண்டலத்தில் கோயில் பூஜை ஊழிய முதலியன செவ்வனே நடந்தேறுதற் பொருட்டு, விட்டமானியம் முதலிய பல சாசனக் கல்வெட்டுகளில் காளிங்கராயன் என்று கையெழுத்திடப் பெற்றிருப்பவை பல காணலாம்.

இதுவும் அன்றி இவ்வூரில் வள்ளமை கொண்ட அதிகாரி வீர சோழக் காமிண்டன் என்பவன் இருந்ததாக ஈரோடு தொண்டீசுரர் ஆலய சாசனத்தால் தெரிகிறது.



வெள்ளோட்டில் இவரே அன்றி இன்னும் சில சிறப்பு வாய்ந்தவர்கள் வாழ்ந்திருந்ததாகத் தெரிகிறது. ஒருபோஜன் ராஜன் காலத்துத் தானம் செய்த சாசனம் ஒன்று ஈரோடு தொண்டீசுர் கற்பக் கிரகச் சுவரில் வெட்டப்பட்டிருக்கிறது. அதில் " வெள்ளோட்டில் வீர சோழக் காமிண்டன் எனக்கண்டிருக்கிறது.

## ஆதிநாததீர்த்தநாதரர்

பூமேவு காசிப கோத்தரம் பொன்னிறம் பூருவமாம்
தாமாயு வெண்பத்து நான்கிலந்தந்தனுத் தானைந்து நூற்
மோதி நாதனுயர் சித்திரையுத் திராடிருள் நவமி
தேமேவு நாபி மனுமரு தேவக்கச் சென்மித்ததே.

-(சதுர்விம்சதிதீர்த்தங்கரரந்தாதி)

## நசியனூர்

மூவேந்த ஈசுரர்
முத்து மரகதவல்லி
சுப்பிரமணியர்
கணபதி
ஆதிநாராயணப் பெருமாள்
மன்னாக் காளியம்மன்
மதுரை மாகாளியம்மன்
அங்காளம்மன்
அயத்தாள்

தென்னாட்டில் மழையின்றிப் பஞ்சம் அதிகரித்த காலத்தில் பாண்டிய அரசன் இங்கு வந்து பூசித்து வேல் வளை செண்டு பெற்று இந்திரனைச் சமரில் வெற்றி கொண்டு பின், தன் பெயரால் மதுரை காளி என பிரதிட்டை செய்து சுவாமிக்கும் ஆலய முதலியன நியமித்தனன்.

கண்ணன், பூச்சந்தை, கூறை, ஈஞ்சன், செம்பன், கீரன், பாண்டியன். - காணி

## எழுமாத்தூர்

சத்தியீசர்
சர்வலோகநாயகி
கனகமலைக் குமரேசர்
கலியுக வரதராஜப் பெருமாள்

கணபதி
கரிவரதராஜப் பெருமாள்
பொன்காளி
அங்காளம்மை
அண்ணன்மார்
செல்லியம்மன்
பகவதியம்மன்
மாமக கணபதி
குப்பியண்ணன்
செல்லக்குமாரர்
அத்தனூரம்மன்

முற்காலத்தில் ஏழு மாதர்கள் வந்து அம்மனை யாடிய பின்பு பூங்காவிற் சென்று விளையாடி ஆங்கு கண்ட ஒரு தீர்த்தத்தில் முழுகி எழுந்தார்கள். ஒன்பதின்மரும் பெண் வடிவு அகன்று ஆண்வடிவமாய் விட்டார்கள். பயந்து நடுநடுங்கி ஓடினார்கள். கணவர்கள் கண்டு மெத்த கோபித்து நங்கையர்களே, நீங்கள் பழவினையால் உருவம் மாறப் பெற்றீர்கள். நீங்கள் உடனே நாவலந்தீவிற் சென்று சிவ பிரானைப் பூசிப்பீர்களானால் இத்துயர் நீங்கும். நீங்கள் பழய உருவம் பெறுவீர்கள் என்றனுப்பினர். அவ்வாறே ஒன்பதின்மரும் இங்கு வந்து சத்தியீசரைத் தொழுது அவர் அனுக்கிரகத்தால் பழய வடிவம் பெற்றார்கள்.

அதன் தென்பால் அநுமநதி குரங்குபள்ளத்தின் அருகே கனகிரி என்னும் மலையில் விசேஷமான அதிசயங்கள் உண்டு. அதில் சுப்பிரமணியக் கடவுள் சாந்நித்தியமாக விளங்குகிறார்.

சோழ தேசத்து வாகனனின் மலைநாட்டுக்குச் சென்று மிளகு வாங்கிப் பல எருதுகளில் ஏற்றிக் கொண்டு இந்த மலையருகே யுள்ள தோப்பில் தங்கி இரவு துயில் கொண்டான். அதிகாலை ஒரு சித்தராய் வந்து என்ன பொதி என்றார். கேட்பார் எனக் கருதிபயறு என்றார். ஆனால் பயறு தானோ என்று போய்விட்டனர். இவன் நாடு புகுந்து மிளகு விலை பேசி மூட்டை [illegible] அவிழ்த்துக் கொட்டினார். எல்லாம் பயறாக இருந்தது. செட்டியைப் புரட்டன் என்றிகழ்ந்தார்கள். சித்தர் செயல் என்ற நினைந்து பழயபடி மிளகானால் அந்த தொகையை அங்கேயே ஆலயாதிகள் செய்விக்கிறேன் என வேண்டுதலும், அவ்வாறே ஆயிற்று. அந்தத் தொகையைக் கொண்டு கோபுரம் கோயில் முதலிய பணிவிடை செய்தான் நற்கதியுற்றான்.

பணங்காடை, செல்லன், காரி - காணியாட்சி



## சென்னிமலை

இந்த நாட்டிற் சென்னிமலை ஆண்டவன் என்பது பிரசித்தம். மலையின் பேரில் பாலதண்டாயுதபாணியாக விளங்குகிறார். வரப் பிரசாத கிருபாமூர்த்தி, தேவர், முனிவர், சித்தர், வித்தியாதாரர் களும், அரசர்களும், தபோதனர்களும், யோகிகளும் தவம் செய்திருப் பார்கள். வானப்பிரஸ்தா சிரமிகள் தங்கள் மனைவிகளுடனிருந்து யாகங்கள் செய்வார்கள்.சரவண மஹாமுனிவர் அகலாது தவம் செய்கிறார். அன்பர்கள் வேண்டிய வரங்களைக் கொடுத்தருளுகிறார் என்று பல கூட்டங்கள் வருகிறார்கள். இங்கு ஒரு விசேஷம். வரக் கூடிய இந்நாட்டுக் கவுண்டர்கள், ஒவ்வொருவரும் தயிர்க்கலையம் ஒன்று கொண்டு வருகிறார்கள். மலை ஏறினவுடன் தயிர்க் கலையத்தை முதலில் குருக்களிடம் கொடுத்த பின்னர் தான் தேங்காய், பழம், கருப்பூர வகை கொடுப்பர். உதயமுதல் அஸ்தமனம் வரையில் வரும், தயிர்களைச் சுவாமி மேல் ஓய்வின்றி அபிஷேகித்துக் கொண்டே இருக்கிறார்கள். அபிஷேகித்த தயிற்களை அர்ச்சகர்கள் பிடித்து பாத்திரங்களில் ஊற்றிவைப்பார்கள். இந்தத் தயிர் உடனுக் குடன் இரக்கம் வந்து விடும். பெரிய பானைகளில் சேர்த்து வைப்பார்கள். 10-15-20 ஒரு மாதகாலமும் வைத்திருப்பார்கள். தங்கள் மனைக்கு வரும் பந்தமித்திரர்களுக்குச் சொம்பு, குடம் முதலிய பாத்திரங்களில் கொடுப்பார்கள். அது வாசனையாயும், சிறு புளிப் பாயும், உண்ண உருசியாயும் இருக்கும். மலை 2 மைல் ஏற்றம். ஜலம் கிடையாது. கீழே இருந்து எருதின் மேல் மங்கணி வைத்துத் தண்ணீர் மலைக்குப் போகவேண்டும். அங்கு தான் தீர்த்தம் என்னும் அருமை விளங்கும்.

தை மாதம் தேர் பிரபலமாக இருக்கும். பங்குனி மாதத்தும் சில வருஷங்களாக, வேட்டுவபாளயத்துப் பூசாரி உபயமாக நடக்கிறது.

சூருசம்மார உத்ஸவமும் விசேஷம். அடிவாரத்தில் பல மடங் களுண்டு. சிவபெருமான், பார்வதி, சுப்பிரமணியர், வள்ளி ஆத்தாள், சந்நியாசி அய்யன், இடும்பன் முதலிய தெய்வங்களும் பிரசித்தம். ஆதிசைவர்கள் வீடு 24 இருக்கின்றன. வருவோர்களை அன்போடு உபசரிக்கிறார்கள். யாத்திரிகர்களுக்கு இவர்களே பேராதரவாக இருக்கிறார்கள். பூந்துறைக் கவுண்டர்கள் ஆதரவில் கோவில் காரியங்கள் நடக்கின்றன.

யூனியன் ஆபீஸ், போலீஸ் ஸ்டேஷன், ஆஸ்பத்திரி, வைத்திய சாலை, சப்-ரிஜிஸ்திராராபீஸ், போர்டு ஸ்கூல் முதலியன இருக் கின்றன. நெய்தல், வியாபாரம் செங்குந்த முதலிகள் பிரபலமாகச் செய்கிறார்கள். கோயிலுக்கும் கட்டளை நடத்துகிறார்கள்.

### பிடாரியூர்

திருமுகமலர்ந்தநாத ஈசுரர்

திருத்தார் முதலியம்மை

சண்முக சுப்பிரமணியர்

திருசுந்தி விநாயகர்

திருக்கை நாராயணப் பெருமாள்

திருபிராட்டியம்மன்

அத்தனூரம்மன்

குமாரங்கியம்மன்

மாகாளியம்மன்

அயத்தாள்

கவுண்டாயி

முத்தையன்

பொருளந்தை, கூரை - காணி

### ஈங்கூர்

அல்லாள ஈசுரன்

வடிவுள்ள நல்ல மங்கை

கணபதி

கரிவரதராஜப் பெருமாள்

வெங்காடசலப் பெருமாள்

பத்திரகாளி அம்மன்

தம்பராட்டி அம்மன்

அங்காளம்மன்

காசிப முனிவர் அருளால் சூரன் முதலானவர்களை ஈன்ற மாயை என்பவள் தன் புத்திரப் பெருக்கையும் அவர்கள், அதிகாரப் பெருக்கையும் நினைந்து களிப்புற்று செருக்கு, மீறிப் பேசிவருவள். இதனை தினமும் கண்டு கேட்டு வரும் அவ்வினத்தவளுள் ஒருத்திக்கு வெறுப்பாக இருந்தது. அவள் நல்ல குணமுடையவள். பரமசிவத்தை வேண்டிக் கடுமையான தவம் புரிந்தனள். மாதொரு பாகர் எதிர்தோன்றி வேண்டுவது என்னை என்றனர். அடிகாள் எனக்கு இந்த அசுர சரீரம் வெறுப்பாக இருக்கிறது. எந்தப் பிறவியும் சம்மதம். ஆனால் புத்திரப் பேறு அதிகம் வேண்டும். அப்பிள்ளைகளோ , தன் அவயாதிகளால் செய்யும் சம்பாத்தியம் பிற உயிர்க்குத் தீங்கு புரியாத



தாக இருக்க வேண்டும்.அவ்வாறு தேடும் பொருள் தேவர் களுக்கும் பிதுரர்களுக்கும் அசுரர்களுக்கும் மனிதர்களுக்கும் நல்லார்க்கும் பொல்லார்க்கும் உகந்ததாக இருக்க வேண்டும். பிள்ளைகள் சுறுசுறுப்பாகவும், தூரதிருஷ்டியும் அதிவேக மனமுங் கொண்டிருக்க வேண்டும் என வேண்டினள். அசுர ஜன்மமாக இருந்தும் மிகுந்த சாதுத் தன்மையான எண்ணத்துக்கு வியந்து அப்படித் தருகிறோம். ஈப் பிறவி கொண்டு அதில் அரசியாக வாழ்வாயாக என்றனர். மெத்த மகிழ்ச்சி கொண்டனள். பின்பு தமிழ்நாட்டில் கொங்கு மண்டலத்திலே ஈக்கு அரசியான பிறவி வந்தது.

அரசி எழுந்தருளியுள்ள பரமேசுரனை தினமும் தொழுது வந்தது. அந்தத் தாய் ஈவழி பல குஞ்சுகள் தோன்றியன. வெகு தூரத்துள்ள பொருளை வாசனையால் கண்டு அது இருக்கும் இடந்தேடி ஒரு நிமிஷத்தில் சென்று பூ நலுக்காமல் தேன் எடுத்து வரும். அந்தத் தேன் தேவர் பிதுரர் அசுரர் மனிதர் முதலானவர்களும் வெகு இன்பமாகப் பெற்று அருந்தும் தகுதி வாய்ந்ததாக இருக்கிறது. இதனால் யாவருக்கும் மகிழ்ச்சியே ஆயிற்று.

அந்த ஈயால் பூசிக்கப்பட்ட சிவபெருமானைப் பெற்ற ஊரானதால் ஈக்கு ஊர் ஈங்கூர் என வழங்கப்படுகிறது.

ஈஞ்சன் - காணி

### பெருந்துறை

சோழீசுவரர்

வேத நாயகி

சுப்பிரமணியர்

கணபதி

பிரசன்ன வெங்கடரமணப் பெருமாள்

செல்லாண்டியம்மன்

கோட்டை முனியப்பன்

கோட்டை இருந்த இடம்.

மேதி, காடை - காணி

சேரன் கணைக்கால் இரும்பொறை என்பவன் மிகுந்த வன்மையும் அறிவுமுள்ளவன். அவ்வரசன் அவைக்காத்துச் சிறப்புற வீற்றிருந்த புலவர் பெருமான் பொய்கையார். இப்புலவர் பெருந்தகை துவாபா யுகத்தில் இருந்ததாக வைணவ குருபரம்பரை கூறும் பொய்கையாழ்வார் என்பவராவர். இவரே நாலாயிரப் பிரபந்தத்து இயற்பாலில் முதற் திருவந்தாதி முதலியன பாடினவர் என யாப்பருங் கல விருத்தி உரைகாரர் கூறுகிறார்.

இந்தக் கணைக்காலிரும்பொறைக்கும், கோச்சோழன் செ ங்கணா னுக்கும் பகைமை நேர்ந்தது. முன்பிறப்பில் சிலந்தியாக இருந்து திருவானைக்காலில் சிவபெருமான் மீது சருகு விழாது மேற்கட்டுக் கட்டிய புண்ணியத்தால் அரசனாகப் பிறந்து, பல கோயில்கள் கட்டினானென்று சைவசமயாசாரியார்களாலும், திருமங்கையாழ்வார் முதலியவர்களாலும் கூறப்பட்டிருக்கிறது. இவ்விரு பெரு வேந்தருக் கும் பகைமை முதிர்ந்தது. போர் தொடங்கினார்கள். கொங்குப் பொன்க்லூர் நாட்டுத் திருப்பூர் முதலிய இடங்களிலும், பூந்துறை நாட்டுப் பெருந்துறை வெளியினும் கடும்போர் நேர்ந்தது. சோழன் வென்ற பெருந்துறைக் கோட்டையிற் சேரனைச் சிறை செய்து விட்டனன். இது சேதி பொய்கையார் அறிந்து சோழனைச் சிறப்பித்து களவழி நாற்பது என்னும் நூலியற்றிச் சோழன் அவைக்களத்து அரங்கரேற்றினர். சந்தோஷித்து சேரனை விடுதலை செய்தனன். இதனைக் " களவழிக் கவிதை பொய்கை உரை செய்ய வுதியன், கால்வழித் தளையை வெட்டி யாசிட்டபரிசும்" கலிங்கத்துப் பரணி என்பதனாலறிக. மற்றைய விவரம் இந்நாட்டுப் பாட்டுகளில் குறித்திருக்கிறது.

### சாத்தம்பூர்

வல்லாள ஈசுரன்
காமாட்சியம்மன்
கலியுக வரதராஜப் பெருமாள்
சாமுண்டேசுவரி
நட்டாற்று அகத்தீசுரர்

கிழ்கரைப் பூந்துறைப் பட்டிலூரிற் பார்க்க.

வண்ணக்கன் - காணி

### காளமங்கலம்

மத்தியபுரி ஈசுரர்
பூலோகவல்லி அம்மை
சுப்பிரமணியர்
சித்தி விநாயகர்
கல்யாண வரதராஜப் பெருமாள்
குளவிளக்கம்மன்
மதுப் பயரம்மன்
பச்சையம்மன்

கண்ணன் - காணி



சீரங்கத்தில் மடைப்பள்ளித் தொழில் புரிந்து வந்த ஒரு வைணவப் பிராமணன் திருவானைக்காலில் ஒரு தாசியிட்த்து நட்பினனாக இருந்தான். ஆனைக்காலில் உத்ஸவத்தில் திருவெம்பாவையோதி னார்கள். " அதில் என் கொங்கை நின்னன்பர் அல்லார் தோள் சேரற்க" எனும் பாசுரம் ஒதுகையில், அவள் வைணவனோடு சம்பந்தம் கொண்டுள்ளது கருதி, நகைப்புற்றார்கள். இந்த தாசி நாணமுற்றனள். வீடு சென்று அன்றிரவு இவர் வந்தனர். வைஷ்ணவனோடு கலர மாட்டேன் என வெறுத்தனள். உடனே சென்று வருந்தி மறுநாள் கிரமப்படி சைவதீட்சை பெற்றுக் கொண்டு அத் தாசியோடு கலந்துற் றனள். பின்பு சிலநாளில் ஸ்ரீ அகிலாண்டேசுவரி அனுக்கிரகத்தால் விரைந்து பாடும் வல்லபம் உற்றனன். பாடும் வேகத்தைக் கண்டு காள மேகம் பொழிவது போல எடுத்தடி மடங்காது கூறுவதால் காளமேகம் எனப் பெயரால் அழைக்கலாயினர். கண்டசுத்தி முதலிய பாடும் வல்லபமுற்று பல சமஸ்தானங்களிலெல்லாம் சென்று பரிசு பெற்று காரைக்காலுக்கருகிலுள்ள திருமலைராயன் பட்டணத்துக்குச் சென்று சமஸ்தான வித்வான்கள் கேட்ட கேள்விகளான சிசேஷை- கண்ட சுத்தி முதலியன பாடிச் சிறப்புற்றுக் கொங்கு நாட்டு யாத்திரையாக வந்தனர். அங்கே பாசூர் என்னும் ஊரில் திருவானைக்கா அகிலாண் டேசுவரியைப் பூஜிக்கும் சோழியப் பிராமணரில் பூந்துறை நாட்டுத் தலைவர்களுக்குக் குருதவம் பெற்று வாழ்ந்திருக்கக் கண்டார். ஸ்ரீசுந்த ரேசுவரி, மீநாட்சியம்மன் சந்நதியும் உண்டு. அடுத்தாற்போலக் காவேரி அருகில் மத்யபுரீசுரர் ஆலயத்தைக்கண்டு தெய்வ சானித்தியம் முதிர்ந்துள்ளதை அறிந்து காவேரி ஸ்நானம், தரிசனம், பாசூர் தீட்சிதர் போஷணை செய்யச் சிலகாலம் அங்கு வசித்தனர். அதனால் காள மேகக் கவிஞர் வசித்துள்ளதால் காளமங்கலம் என்று பெயராயிற்று. அதனால் முன்னம் மத்யபுரி (நகர்) என்று பெயராக இருந்தது. இப்புலவர் சித்திரமடல் என்னும் பிரபந்தம் இவ்வூரினின்று இயற்றினர் என்பர்.

தீட்சிதர் வரலாறு கிடைத்தவுடன் தெரிவிப்பன்.

### குழாநிலை

சர்ப்பபூஷண ஈசுவரர்
பங்கசாக்ஷியம்மன்
சுப்பிரமணியர்
கணபதி
வரதராஜப்பெருமாள்
பொன்குழலி அம்மன்
கோட்டை மாரியம்மன்

கங்கநாட்டு மன்னன் கொங்கு நாட்டின் மீது படை எடுத்துக்கலகம் விளைத்தனன். இதனையறிந்த பாண்டியன் போர்க்கு உதவவலல்ல திடசாலிகளெல்லாம் வந்து சேருமாறு விளம்பரப்படுத்தினான். போர்க்குப் பயிற்சியும் வீரமுமுள்ள குழாங்கள் இவ்வூர்க் கோட்டை வெளியில் வந்து கூடினார்கள். அங்கேயே சில நாளிருத்தி நன்றாகப் பயிற்சி செய்விக்கப்பட்டது. பல படைத் தலைவர்களை நியமிக்கப் பட்டது. வீரர்களான குழாங்கள் நிலைத்திருந்ததால் குழாம் நிலையென்ற பெயர் வந்தது என்பர்.

இவ்வூர்க் கோட்டையிலெழுந்தருளிய மாரியம்மன் மிகுந்த பிரபலமுற்றது. மாசிமாதத்தில் திருவிழா. மிகுந்த கூட்டங்கள் கூடும். எருமைக்கடா பலி பல நடக்கும்.

கண்ணன் காணி.

### கிழான்பாடி

கைலாசநாத ஈசுரர்
விசாலாட்சியம்மை
குமாரமூர்த்தி
செல்ல விநாயகன்
வெங்கடரமணப் பெருமாள்
சொக்கநாச்சியம்மன்
பசுபதியம்மன்

குழாநிலைக் கோட்டையில் பயிற்சி பெற்றுப் படை பிரித்தல், வேளாள சேனாபதி ஒருவர் அவரை மரபு விளக்கம் தோன்றக் கிழான் என்பர். (கிழான் என்பது வேளாளர்க்குரிய பட்டப் பெயர்) அவரதாகியுள்ள படை வகுப்பு நிற்கும் பாடிவீட்டைக் கிழான்பாடி என வழங்குவர்.

கண்ணன் - காணி

இவ்வூரில் முத்தண கவுண்டன் மகன் பாம்பண கவுண்டன் என ஒருவன் கல்வி கேள்விகளில் வல்லுனன். குறவஞ்சி என்னும் பிரபந்தம் கேட்டிருக்கிறான். அவனது மனைவி உத்தம குணமுள்ளவள். கற்றவள். குறவஞ்சியில் புகழப் பெற்றிருக்கிறாள். குறவஞ்சிப் பாடினவர் பவானி பாலபாரதி முத்துசாமி ஐயர்.

பாடினோர் பாடப்பட்டோர் வரலாறுகள் அச்சிட்டுள்ள பாம்பண கவுண்டன் குறவஞ்சியில் காணலாம்.



### முடக்குறிச்சி

வரகேசுவரர்
வடிவுடையம்மை
பாலசுப்பிரமணியர்
செல்லக்கணபதி
கரிவரதராஜப் பெருமாள்
கரிய காளியம்மன்

முடத்திருமாறன் என ஒரு பாண்டியனிருந்தான். மிகுந்த வீர தீரன். அவன் கல்வியிற் சிறந்த புலவன். இவன் எதிர்த்த அரசர்களை வென்று வரும்நாளில் மாலைக் காலமாயிற்று. அவ்விடம் வரகு விளைந்து நிரம்பியிருந்தது. பார்ப்பதற்கு மிகுந்த ரமணீயமாக இருந்தது. மனது புனிதமுற்றது. இரவு தங்கினன். அங்கு எழுந்தருளியுள்ள சிவ பெருமான் மிகுந்த கருணாமூர்த்தியாகக் கண்டமையாலும், வரகங் கொல்லையிருந்தமையாலும் வாகீசுரன் என்று புகழ்ந்து போற்றினன். இதனால் வாகீசுரரென்று பெயராயிற்று. இவன் அன்பாகத் தங்கி இருந்தமையால் இவன் பெயரின் முதற் பதத்தால் குடக்குறிச்சி யென ஊருக்குப் பெயராயிற்று என்கிறார்கள்.

இந்தப் பாண்டியன் இடைச்சங்க மிருந்த கபாடபுரம் அழிவுற்ற பின்பு இப்போதுள்ள மதுரைமாநகரங் கண்டவன் என்பர். "முனிகொடிவலந்த' என்ற நற்றிணை 105-ம் " என்னெனப்படுமோ' என்ற 228-ம் பாடல் இவர் பாடியன என்கிறார்கள்.

தூரன், காரி, பனங்காடை - காணி

### வெண்பா

மதுரை கண்ட மாறன் வழுத்துவரகீசன்
பதும பத நாடிப் பணிந்தால் - மதுரகவி
சொல்லலாம் செல்வந் தொகுக்கலாம் மாற்றவரை
வெல்லலாம் வன்மை மிகுத்து

### அநுமன்பள்ளி

அநுமேசுரர்
அன்னபூரணி அம்மன்
சுப்பிரமணியர்
செல்லவிநாயகர்
அழகு சொக்கப் பெருமாள்
செல்லாண்டியம்மன்

ஆயி.சின்னாயி பெரியாய்

மாகாளியம்மன்

ஸ்ரீ ராமர் தண்டகாரணியத்தில் வந்த காலத்தில் ராவணன் சீதா பிராட்டியாரைத் தூக்கிப் போய்விட்டான். எங்கு இருக்கிறாரென்று அநுமன் முதலிய வானர வீரர்கள் தேடினார்கள். அப்பொழுது கொங்குப் பூந்துறை நாட்டில் கீழ்கரையும் மேல்கரையும் தேடும் பொழுது காணாமையால் மனம் நொந்து சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து வேண்டினார். அதனால் அநுமேசுர ரென்று சுவாமிக்குப் பெயரும், **அநுமன் பள்ளி** யென்று ஊர்க்குப் பெயருமாயிற்றாம்.

சேல்கயல்பாய் வயல்மோரூர்த் திருமலையத் தப்பனன்பாம்
பால் கனிபோல் நல்லதம்பி படைத்த கொங்க மண்டலத்தான்
மால்கவி ராமாயணம்போல் வடகலைபோற் றென்கலைபோற்
மேல்கரையும் கீழ்கரையும் விளங்க வெங்கும் நாடினனே.

தக்கை ராமாயணம் ஆற்றுப்படலம் 16

செல்லன், பண்ணை - காணி

## பழமங்கலம்

அண்ணாமலை ஈசுரர்

உண்ணாமலைநாயகி

வெங்கடாசலபதிப் பெருமாள்

மங்கலத்தம்மன்

பகவதியம்மன்

புக்கராண்டியம்மன்

## குளவிளக்கு

பாண்டீசுவரர்

பங்கயச் செல்லியம்மன்

பொன்மலைக் குமாரர்

கோபாலப் பெருமாள்

பச்சையம்மன்

## காகம்

கைலாசநாதேசுவரர்

காமாட்சியம்மன்

கற்பக விநாயகர்

கரியபெருமாள்



செல்லாண்டியம்மன்

ராவுத்தமரர்

அத்தனூரம்மன்

ஒரு பெரிய மஹாரிஷியிடம் சிலகாகங்கள், அடைந்து ஐயா, மஹா தபோதனரே! ஏழைகளுக்கு உதவி செய்வதுதான் பெரும்புண்ணிய மாகும். நாங்கள் அற்ப ஜந்து. எங்களைப் போன்றவைகள் பெரியாரை அடுத்து மேன்மை கொண்டுள்ளன. எங்களிடத்து விசேஷமான நற் குணங்களிருக்கின்றன. அகாவது, விடியற்காலை துயில் நீங்கி மற்ற வர்களையும் கரைந்து எழுப்பல். இனத்தைக் கூட்டிப் புசித்தல். இனத்தில் ஒருவர் துன்புற்றுக் கரைந்தால் ஓசை கேட்டவுடன் யாவரும் கூட்டங்கூடி அனுதாபப்படுதல், மறைவிற் புணர்தல், மாலைநீர் மூழ்கிச் சேக்கை சேர்தல் முதலிய நற்குணங்களைக் கொண்டுள் ளோம். இப்படியிருந்தும் பட்சிகளில் சண்டாளம் என எங்களை நிந்திக்கிறார்கள். ஒரு தெய்வத்தின் துணை வேண்டுமென வருந்தி முயன்றோம். ஜேஷ்டாதேவி (மூதேவி) எங்களை வெற்றிக் கொடியாகக் கொண்டார். ஆனால் மிருகங்களில் கழுதை சண்டாள மெனச் சொல்லப்படுகிறது. அந்தக் கழுதையை வாகனமாக ஏற்றுக் கொண்டிருப்பதால் எங்களுக்கு மிகுந்த குறைவாக இருக்கிறது. ஆதலால் நல்லோர்கள் மதிக்கத்தக்க ஒரு பதவி வேண்டுகிறோம். அதற்கு ஒரு வழியருளல் வேண்டுமென வேண்டின. நீங்கள் கூறியவாறு நல்ல குணங்களிருந்தாலும், நீங்கள் அந்த உணவுகளை அருந்துதல், இனிமையில்லாத வெடிகுரல் கொண்டிருக்கிறீர்கள். ஆயினும் சூரிய புத்திரனாகிய சனீசுரனைக் குறித்துத் தவம் செய்யுங் கள். நன்மையுண்டாம் என்றனர். அவ்வாறே செய்தன. சனீசுரன் எதிர்தோன்றி அவற்றின் தவத்தை மெச்சி காக்கையை வாகனமாக ஏற்றுக் கொண்டனர். காக்கைகள் சந்தோஷித்தனவாம்.

## அறச்சலூர்

புற்றிடங்கொண்ட ஈசுரர்

பூலோகநாயகி அம்மன்

அறச்சாலம்மன்

மேல்கரைப் பூந்துறை நாட்டைச் சார்ந்த அறச்சலூரில் கரையவேடுவரில் செய்யான் என்பவன் ஒய்சல வீர வல்லாள வேந்தனிடத்தில் சேனாவீரனாக இருந்தான். அவனது யுத்த தந்திரத்தை நன்கு மதித்து அந்த அரசன் **பல்லவராயன்** என்று பட்டப் பெயர் கொடுத்தான். தன் பெயருடன் **செய்யான் பல்லவராயன்** என்று புகழுடன் வாழ்ந்தான். இவன்மீது சில பிரபந்தங்களும் இருக்கின்றன.

இவனது சாசவம் அறச்சலூர் புற்றிடங்கொண்ட நாயனார் ஆலயத்தின் தென்புறச் சுவரில் இருக்கிறது. ......ஸ்வஸ்திஸ்ரீ போஜனவீர புஜபல வீரவல்லாள தேவர் பிரதிவி ராஜ்ஜிய பரிபாலனம்...... மேல்கரைப் பூந்துறை நாட்டு அறச்சலூர் கரைய வேட்டுவரில் செய்யான் பல்லவராயனேன் இவ்வூரில் உடையார் புற்றிடங்கொண்ட நாயனார் கோயிலில் திருக்கட்டளையில் திருநிலைக்காலும் செய்வித்தான்....... இச்சாசனமிருக்கிறது.

கறைசை வேட்டுவரில் நல்ல ம..காளி மகன் முத்தணன் என்போன் ஒரு காதல் பிரபந்தங் கேட்டிருக்கிறான்.

இது பரமுத்தி வெள்ளைக் கவிராயன் பாடினது.

பூச்சந்தி குலம் - காணி

**விளக்கேத்தி**

வித்தகநாத ஈசுரர்
விசாலாட்சியம்மன்
வீரநாராயணப் பெருமாள்
பொன் காளியம்மன்
பழயபூசைக் கருப்பண்ணன்

**ஈஞ்சம்பள்ளி**

சோழீசுவரர்
சுப்பிரமணியர்
கணபதி
சென்னராயப் பெருமாள்
பொன் காளியம்மன்
வேலக்கவுண்டிச்சியம்மன்
அப்பிச்சிமார்
பகவதியம்மன்
வேடன் சாமி

பொருளந்தை - காணி

**சத்தியமங்கலம்**

சத்தீசுரர்
தையல்நாயகி
வரதராஜப் பெருமாள்
செல்லாண்டியம்மன்
அண்ணன்மார்

புல்லன் - காணி



## கோயம்புத்தூர் லங்கார்கானா

அங்க ஈனர் முடவாண்டிகளின் பிழைப்பு (ஜீவன) விருத்திக்காக உதவப்பட்டதாதலின் முடவாண்டி சத்தியமங்கலம் எனப்பெயரா யிற்று. ஆனால் இந்த முடவாண்டிகளுக்கு ஒரு விதமாகக் கதை புனைந்திருக்கிறார்கள். முற்காலத்தில் கம்பர் என்னும் மஹாவித்து வானை ஆதரித்த, வெண்ணெயூர்ச் சடையப்பன் என்னும் கொடை யாளியை முதலியார், பிள்ளை, உடையார் என்னும் பட்டம் இட்டு வழங்குகிறார்கள். அவர் தஞ்சாவூர் ஜில்லா வெண்ணெயூர். அவர் அரிய மனைவியாருக்கு ஒரு ஆண்மகவு தோன்றியது. முடமாக இருந்தது. அதனை வைத்துப் பார்க்க மனம் ஒப்பாது, பொன்தகடு போர்த்து ஒரு பேழையில் வைத்து காவேரியில் விட்டு விட்டதாகவும் கூறுகிறார்கள். அப்படி ஆற்றில் வரும்பொழுது கொல்லி மலை நேராக வந்தது. அங்கு கொங்கு நாட்டுத் தலைவனும், ஒரு சோழிய வேளாளனும் இந்தப் பெட்டி தூரத்தே பிரகாசித்து வருவதைக் கண்டதாயும், பெட்டியிலுள்ள பொருள் எனக்கும், தங்கப் பேழை உனக்குமாக வைத்துக் கொள்ளுவோம் என்று பேசிப் பிடித்துத் திறந்து பார்த்ததில், உள்ளே ஒரு ஆண் மகவு உயிருடன் இருந்ததாயும், பேசிய வண்ணமே வைத்துக் கொண்டார்கள். சோழிய வேளாளன் குழந் தையை அன்பாக ஆசையுடன் வளர்த்து வந்தான். போஷணைக்கு நாட்டுத் தலைவன் உதவி வந்தான் என்றும், குழந்தையின் ஜீவன விருத்திக்காக வேளாளக் கவுண்டர்களெல்லாரும் வருஷவாரி ஒரு வரி கொடுத்து உதவி வருவதாயும் அக்குலத்தில் அங்க ஈனமாகப் பிறந்த பிள்ளைகளை, அந்தச் சோழியப்பிள்ளை, வலவந்தமாக எடுத்து விடலாம் என்றும், தடைசெய்தால் ஜாதி ஞாயம் பேசிக் கட்சிக்குள் ளாக்கலாம் என்றும் கூறுகிறார்கள். இதற்கு அக்காலத்துப் பட்டயம் இருக்கிறது என்றும் காண்பிக்கிறார்கள்.

கொங்கு நாடு மேலுள்ளது. சோழநாடு நீர் ஓடும் கீழ்பாலிருந்து மேலே வந்திருக்கிறது. ஆனால், திருஞான சம்பந்தர் பாசுரம் எழுதி, இட்ட ஏடு மேலே ஏறினது போன்ற ஒரு தெய்வீகச் செயல் எனக் கூறுவதில்லை. ஆதலின் பேழை எவ்வாறு சோழ நாட்டிலிருந்து கொங்கு நாட்டுக்கு வரும்?

மணிமேகலை கூறுவது போலத் தமிழரசர்கள் காணார், கேளார், கான் முடப்பட்டார், பேணுநரற்றார், பிணிவாய்ப் பட்டார், முதலான தொழில் செய்ய இயலாதவர்களை அழைத்துக் காப்பாற்று கிறார்கள். மற்றும் தொழில் செய்ய இயலாத கூனர், குறளர் முதலானவர்களுக்குக் கோயில்களில் கைவிளக்குப் பிடிப்பதும், பதிகம் பாடுவதுமாகிய விருத்தி கொடுத்திருந்ததாக, முஞ்சியூர்ச் சாசனம் முதலியன

தெரிவிக்கிறது. திருவாமாத்தூரில் முதலாவது குலோத்துங்கன், திருப்பதிகம் பாட 16 குருடர்களை ஏற்படுத்தி அவர்களுக்கு உணவுக்கும், ஆடைகளுக்கும் வேதனம் கொடுத்துவரத் திட்டஞ் செய்தானென்று கூறுகிறது.

EPANF ON 1903 483 Of 1903

உழுதொழில் செய்து பிழைக்கும் ஏழை மக்களிடத்து முடம் குருடு முதலிய அங்கவீனமுற்றவர்களை வைத்துக் காப்பாற்றுமாறு ஒரு நியமனம் செய்திருப்பதாகத் தெரிகிறது. (பார்ப்பாரில்) எத்தொழிலும் செய்ய இயலாதவர்களை சமைத்துச் சாப்பிட்டு விட்டு இருக்குமாறு கைராத்து மானியம் என விட்டிருப்பதாகத் தெரிகிறதல்லவா? அது போல உழவர்களான இந்நாட்டு வேளாளக் கவுண் டர்களில் கூன், குருடு, முடம் முதலிய அங்கவீனமுற்றுள்ளவர்களை வைத்துக் காப்பாற்றுமாறு பூந்துறைக்கு அடுத்த சத்தியமங்கலம் என்னும் கிர்ராமத்தை இறையிலியாக விடப்பட்டது. அதன் விபரம் கோயமுத்தூர் ஜில்லா கஜட்டியரில் பிரகரித்திருக்கிறது. அதனை இங்கே கொடுக்கிறேன். அது இது :-

கோயம்புத்தூரில் இருக்கும் லங்கார்கானா என்னும் தர்மசாலை வெகு புராதன காலத்திலிருந்து வருகிறது. சமீபகாலம் வரை அது ஈரோடு தாலூகாவிலுள்ள முடவாண்டி சத்தியமங்கலம் கிராமத்து இனாம் நிலங்களின் வரும்படியிலிருந்து நடத்தப்பட்டது. இந்த இனாம் நிலங்கள் தர்மத்துக்காக ஹிந்து அரசர்களாலேற்படுத்தப்பட்டது. பின்னால் திப்புவினால் ஊர்ஜிதப்பட்டது. அத்தர்மமானது 32 நிலத்தையுழுகும் வேளாள வகுப்பைச் சேர்ந்த அங்கவீனர்களைக் காப்பாற்றுவதாகும். இந்த அங்கவீனர்கள் வேறு நாட்டிலிருந்தாவது அல்லது அதற்கும் அக்கம்பக்கத்துள்ள தாலூக்காக்களிருந்தாவது வர வேண்டும். முதலில் முடவாண்டி சத்யமங்கலம் முழுவதும் இத் தர்மத்துக்காக விடப்பட்டிருந்தது. ஆனால் லங்கார்கானா கவர் மெண்டுக்கு பாதி அரசாங்க வரியைக் கொடுக்க வேண்டும். இந்தக் கிராமம் பிரிட்டிஷ் ராஜியத்திற்குள் வந்த பிறகும் இந்த தர்மம் தடையில்லாமல் நடைபெறலாயிற்று. ஆனால் பிரிட்டிஷ் கவர்ன் மெண்டார் இனாம் நிலங்களினுடைய பாதி வரிக்கு (அதாவது வருஷத்துக்கு ரூபாய் 1193 - 14-5) பொருமான நிலத்தை, இனாம் நிலங்களுக்கு பர்த்தியாக, இத் தர்மத்துக்கு விடலானார்கள். இந்த வரும்படியை 32 அங்கவீனர்களும் அவர்களை மேற்பார்வை பார்த்து வந்த காவடிகள் அல்லது நல்ல திட ஆரோக்யமும் வேலை செய்து சாப்பிடக்கூடிய சக்தி உடையவரான மனிதர்கள் 42 பேரும் அனுபவிக்கலானார்கள். ஆனால் காலக்கிரமத்தில் இத்தர்மம் சரியாக



நடைபெறவில்லை. காவடிகள் முடவாண்டிகள் தொகையைக் குறைத்து தர்ம சொத்தைத் தாங்களே அனுபவிக்க ஆரம்பித்தார்கள். சில முடவாண்டிகள் கூட, கிராம, தாலூகா உத்தியோகஸ்தர்கள் உதவிபெற்ற இந்த மாதிரி மோசங்கள் செய்ய ஆரம்பித்தார்கள்.

இந்தமாதிரியான ஊழல்களைத் தடுப்பதற்காக 1837 - 42 வருஷம் வரை கலெக்டர்களே இந்த இனாமை மேல்பார்வை செய்ய ஆரம்பித்தார்கள். ஆனால் இந்த மாதிரி மேற்பாவை திருப்திகரமா யில்லாமலிருந்ததால் பழைய ஊழல்கள் அத்தோடு ஒழியவில்லை. அதனால் 1850 - ம் வருஷம் கவர்ன்மெண்டு இனாம் நிலத்தைத் தாங்களே எடுத்துக் கொண்டு இனாம் வரும்படிக்குச் சமமான தொகையை, லங்கர்கானா அல்லது ஒரு தர்ம சத்திரத்தைப் பராமரிப்பதற்காகச் செலவு செய்தார்கள். புது சத்திரம் கட்டுவதனால் உண்டாகும் செலவைத் தடுக்க வேண்டி, கோயம்புத்தூர் தற்பொழுதைய தாலூக்கா போர்ட் ஆபிசுக்கருகாமையிலுள்ள ஒரு பெரிய பழைய காலத்திய புகையிலைக் கிடங்கை அத்தர்மசாலைக்காக வேற்படுத்தினார்கள். அத்தர்மமானது வருஷா வருஷம், கிராமத்திலிருந்து பணம் கிடைத்தவுடனே துவக்கப்படும். அத்தர்மத்தினால் பிரயோஜனமடைபவர்கள் வருஷா வருஷம் எவ்வளவோ ரூபாய் பெற வேண்டுமென்பது அதன் பின்னால் நிச்சயிக்கப்படும். ஆனால் 1852 - ம் வருஷம் ரெவின்யூ போர்டார் சிபார்சின் பேரில் கவர்ன்மெண்டார் முதல் முதலில் ஏற்பட்டபடியே இனாம் நிலங்களை விட்டு விட்டார்கள். 1871 - ம் வருஷம் இந்த தர்மசாலை கோயம்புத்தூர் முனிசிபாலிட்டிக்குள் வந்தது. கிட்டத்தட்ட 16 வருஷம் ஈரோடு தாசில்தார்கள் அதிகாரத்திற்கு உட்படாமலிருந்தாலும் தானே அந்த இனாம் நிலத்திலிருந்து வரிகளை வசூலித்து அவைகளைக் கோயம்புத்தூர் முனிசிபாலிடிக்குக் கொடுத்து வந்தார். இம்மாதிரியாக 1854 -ம் வருஷம் [illegible] வானது அவசியமானபோது தப்பாக உபயோகப்படுத்தப்பட்டது. இந்த தப்பான முறையானது 1886 - ம் வருஷம் கவர்ன்மெண்ட் நோட்டீசுக்கு வந்தவுடனே, கவர்ன்மெண்டார் முனிசிபல் கௌன்சிலைத் தனிப்பட்ட பொறுமான மனிதர்கள் மூலமாக வசூலித்துக் கொள்ள ஏற்பாடு செய்து கொள்ளச் சொன்னார்கள். கௌன்சிலானது அந்த மாதரி செய்தால், அதிக கஷ்டத்திற்கும் செலவிற்கும் அது உட்படாம லிருக்க முடியாது என்று அபிப்பிராயப்படவே கவர்ன்மெண்டார் தாங்களாகவே இனாம் நிலத்தை யெடுத்துக் கொண்டு அதற்குப் பதிலாக ரூ. 1000 வருஷா வருஷம் கௌன்சிலுக்குக் கொடுப்பதாகத் தீர்மானித்தார்கள்.

(ஸ்) எஸ். சின்னப்பன்

செக்ரிடரி

### சேமூர்

விக்கினேசுரன்

செல்லாண்டிம்மன்

அங்காளம்மன்

காமாட்சியம்மன்

குடி - காணி

### மங்கலம்

விக்கிநேசுரன்

மங்கலகிரிப் பெருமாள்

கண்ணன் - காணி

### வீரகனல்லூர்

மாதேசுரன்

கொங்களம்மன்

மந்தைப் பிடாரி

பயரன், சாத்தந்தை, காடை, கண்ணன், தூரன், முழுக்காதன், செல்லன் - காணி

### ஈரோடு

தொண்டீசுரர்

சேடீசுவரர்

அர்த்தகபாலபுரி ஈசுரர்

மஹி மாலீசுரர்

அம்மை

சுப்பிரமணியர்

பள்ளி கொண்ட பெருமாள்

கொங்காளம்மன்

ஐயனாரப்பன்

அன்பனான ஒரு ஆயனுக்குத் தொண்டுப்பட்டியில் தொண்டு வேலை செய்து வந்தபடியால் தொண்டீசுரர் எனத் திருநாமமுற்றது.

பூர்வம் கைலாயத்தில் திருமந்திரப் பொருளைப் பரமேசுரர் பார்வதியாருக்கு உபதேசித்தனர். அப்பொழுது பிராட்டியார் சுவாமியினது கழுத்து நீலமணி போன்ற ஒளி வீசுதலைக் கவனித்தார். இதனையோர்ந்த சிவபெருமான் பார்வதியாரை நோக்கி உமையே



மஹா மந்திரார்த்தத்தை உபதேசிக்குங்கால் அதனை அவமதித்து நீலகண்டத்தைக் கவனித்தனையாதலின் மயிலுருவம் கொண்டு தமிழ்நாட்டில் காவிரிநதியருகே தவம் புரிந்து இப்பாவத்தை நீக்கிக் கொள்வாயாக எனக் கட்டளையிட்டனர். தேவியாருந் தன் குற்றத்தை எண்ணி வருந்தி பூலோகம் வந்து மயிலுருவேற்றுப் பல தலங்களுங் கண்டு பின்பு கொங்கு நாடடைந்து இத்தலத்தைக்கண்டனர். புனித முற்றிருப்பதால் தினமும் காவிரியடைந்து முழுகிக் கடவுளை வணங்கி தவம் புரிந்தனர். இறைவனைப் பிரிந்து நெடுநாளாயினமையால் வருந்தி மாழ்கினர். தவத்துக்கிரங்குந் தயாநிதி கருணை கூர்ந்து ஆண் மயிலுருவேற்று அழகிய தோகைகளை விரித்துத் தேவியார் முன் சதியுற நடித்தனர். பார்வதியார் களி கூர்ந்து மகிழ்ந்து சமீபத்து நெருங்கி வணங்கினர். இறைவன் ஆரத்தழுவி வாழி கூறினர்.

சுவாமியும் அம்மையாரும் மயிலுருவேற்று வசித்தலால் இத் தலத்துக்கு மயிலை என ஒரு பெயர் வழங்குகிறது. இது புராணக்கதை.

இவ்வூரில் தாண்டவன் என்று ஒரு ஏழைக் கைக்கோளன் தினமும் தான் நெய்த வேலைக்கான கூலி வாங்கித் தான் உணவுப் பொருள் வாங்கிச் சீவிப்பன். ஆனால் அதிகாலை தொண்டீசர் கோயில் வாயிலில் நின்று ஒரு கும்பிடு போட்டுச் செல்வன். உள்ளன் புள்ளவன். இவனது அன்பை வெளிப்படுத்துதற்காக தொண்டீசுரர் ஒரு மெலிந்த தளர்நடை ஏழையாக நடுங்கிக் கொண்டு தண்டவன் குடிசைக்குச் சென்றார். குளிர் சகிக்க முடியவில்லை. ஒரு கந்தல் இருந்தால் பிழைப்பேன் என்று கேட்டனர். ஐயா, என் கணவனார் நெசவுக்குப் போயிருக்கிறார். அவரிருந்தாலும் இடையில் சுற்றியுள்ள ஒரு துண்டுதானிருக்கிறது என்று கூறினள். அவர் புறப்பட்டார். சுவாமி எங்கே இருப்பு என்றனள். தொண்டீசர் கோயில் வெளியிலிருப்பவன் எனக்கூறி நடந்தனர். இரவு 5 நாழிகைக்கு மேல் கணவன் வந்தவுடன் கூறினள். திடீரென்று தான் தொழில் செய்யும் தலைவனிடம் சென்று அஞ்சிநின்று ஒரு துண்டு கொடுங்கள் எனக் கெஞ்சிக் கேட்டு வாங்கி ஓடி வந்தனன். ஆலயமுகப்பில் இரு முழங் காலிடையில் தலையைக் குனிந்து வைத்துக் கைகளால் மேலையும் போர்த்து நடுங்கிடும் பெரியவரைக் கண்டு வருந்தி, கொண்டு வந்த சிறு துண்டை விரித்துப் போர்த்து வணங்கிச் சென்றனன். அதிகாலை கோவில் திருக்காப்புத் திறந்து பூசகர் பார்க்கவே, அர்த்த சாமத்துச் சாத்திய பரிவட்டமில்லை ஏதோ ஒரு புதுத்துண்டு போர்த்தப்பட்டிருந்தது. நடுங்கி வெளியே ஓடி வந்து ஊரினர் கோயிலதிகாரிகளும், ஊரதிகாரிகளும் அபிமானிகளும் வந்து கூடினர். குருக்கள் விவரம் சொன்னார். துண்டைப் பார்த்தார்கள். இத்தாண்டவன் தொழிற்

சாலைத் தலைவனும் பார்த்தான். இத்துண்டு நேற்று ராத்திரி தாண்டவன் என்னிடம் வாங்கி வந்ததுதான் என்றான். அவனை அழைத்துக் கேட்டார்கள். நடந்ததை சொன்னான். இவன் உண்மை சொல்வதில்லை என அவனைப் பிடித்துத் தாம்புக் கயிறு கொண்டு வந்து தூணுடன் சேர்த்துப் பின்கட்டாகக் கட்டினார்கள். சாட்டை கொண்டு அடிக்க ஆரம்பித்தார்கள். தாண்டவன் ஆஆ ஈசுரா இதற்கு நான் என் செய்வேன் என ஓலமிட்டான். எழைக்கிரங்கும் தொண்டீசுரர் ஊர் அதிகாரியின் சிறு பிள்ளை மீது ஆவேசித்து நில் நில் என்று முன்பே கட்டிய தாம்பு அறுந்து விட்டது. இவனது அன்பை உலகத்துக்கு வெளிப்படுத்தவே இச்செயல் செய்யப்பட்டது என்று சொல்லியவுடன் மருள் தெளிந்து விட்டது. யாவரும் தாண்டவனது அன்பைப் பாராட்டினர். தொண்டீசர் திருவருளையும் கொண்டாடினார்கள்.

கன்னட வார்த்தை பேசும் நாயக்கர்கள். கௌடு இத்தலத்துக்கு ஆதிக்கமுற்றிருக்கிறார்கள். வெங்கட நாயக்கர் சத்திரம் ஒன்று பேருபகாரமாக இருக்கிறது. இத்தருமத்துக்கு நஞ்சை நிலம் விட்டிருக்கிறார். இவர் இளைய குமாரர்தான் சிறப்புப் பத்திரிகை நடத்தும் ஈ.வெ.இராமசாமி நாயக்கரவர்கள்.

## சாசனம்

திருமலை நாயக்கர் காலத்தில் கோட்டையிருந்தது. இங்கிலீஷார் இடித்தனர். ஸ்ரீ தொண்டீசுரர் கோவிலுள்ள ஒரு போஜள அரசன் காலத்துத்தான சாசனத்தில்:-

வெள்ளோட்டில் வீரகேரள சாமிண்டன் எழுத்து எனக் கூறப்பட்டுள்ளது. பள்ளி கொண்ட பெருமாள் கோவிலில்:-

கோவிராஜ கேசரிவர்மன் திரிபுவன சக்கிரவர்த்திகள் சுந்தர பாண்டிய தேவரது 12-வது வருஷத்திய சாசனம் ஒன்றுள்ளது

## காவேரிக் குடிநீர்

ஈரோடு நகர பரிபாலன சங்கத்து ( முனிசிபாலிட்டி)க்கு வக்கீல் சீனிவாச முதலியார், பி.ஏ.பி.எல்., தலைவர்( சேர்மன்) ஆக ஏற்பட்டார். இவர் பெருமுயற்சி செய்து, காவேரியில் நீர் இழுப்பு சூத்திரம் வைத்து மேற்கூறிய பேய்ச்சிப் பாறையில் நீர்நிலை கட்டி அதில் காவிரித் தண்ணீரைக் குழாய் வழி கொண்டு வந்து தேக்கி நீரைச் சுத்தி செய்து நகரத்துக்கு குழாய் வழி செலுத்தி அங்கங்கே தெருக்களில் வேண்டிய தண்ணீர் பிடித்துக் கொள்ளும்படி அமைத்து வைத்துள்ளனர். இது மிகுந்த பேருபகாரமாக இருக்கிறது. இதனால் தண்ணீர்ப் பஞ்சமும் தீர்ந்தது. வாய்க்கால் தண்ணீர் முதலிய ஜலத்தால்



உண்டாகும் தொத்துவியாதிகளின் உபத்திரவம் இவ்வூருக்கு நீங்கிற்று. இவ்வேலையை முடிக்க அரும்பாடுபட்டார்.

## பேய்ச்சிப் பாறை

ஈரோட்டிற்கு அருகே வைராபாளையம் என்னும் ஊரில் சில ஆயர்கள் (கோனார்கள்) வாழ்ந்தார்கள். பசுக்கள் முதலியன மூவினங்களும், நிறைந்து விளங்கின. அங்கு பெரியவர் ஒருவர் முன்னிரவில் வந்து சேர்ந்தனர். ஒரு சிறு பெண் வந்த பெரியவரை உபசரித்துப் பால் உதவியது. மறு நாள் மாலையும் வந்தனர். உதவி உபசரித்தது. பெரியவர்கள் கூறாது இச்சிறுமி உபசரித்துதவுவதற்குப் பெரிதும் மகிழ்ந்தவர். மூன்றாம் நாள் பாறைக்குச் சென்றனர். அங்கிருந்து பால் வேண்டுமானால் கொண்டு வருகிறேனென்றது. பேசாதிருந்தவர். ஓடோடியும் வீட்டிற்குப் போய்ப்பால் கொண்டு வந்து கொடுத்தது. அருந்தி மனமுவந்து ஏதோ சில அச்சிறுமி காதில் சொல்லினர். எந்நேரமும் அதையே சிந்தித்துக் கொண்டிருந்தது. இதே நினைவாக இருப்பதால், தலை விரித்திருக்கும். அதனால் பேய்ச்சி என்றும். எந்நேரமும் அப்பாறையிலேயே இருப்பதால், பேய்ச்சிப் பாறை என்றும் கூறுவார்கள். அப்பாறைச் சரிவில் ஒரு ஊற்றுக் கண்டு அதைத் தோண்டவே ஊற்றுப் பெருகி வந்தது. நீர் குளிர்ச்சியாயும், உருசியாயும் இருப்பதால் ஊரார் குடி நீராக இதனையே உபயோகித்தார்கள். அப்பெண்மணியைப் பலர் வந்து வணங்குவார்கள். நல்ல நாட்களிலெல்லாம் வந்து வணங்கிச் செல்வார்கள். பின்னர் மழுட்டிப்பப் பெரியார் சமாதியும் உண்டாயிற்று. நல்ல தண்ணீர் இவ்விடம் பெறுதற்கு நீங்காது பேய்ச்சியம்மன் ஆசியால் காவேரித் தண்ணீர் கொண்டு வந்து தேக்கி, இப்பொழுது ஈரோடு நீர் செழிப்புற்றிருக்கிறது. திருமலை நாயக்கர் காலத்துச் சிறந்த கோட்டை இருந்தது.

## பார்க் - நந்தவனம்

இத்துடன் அந்தப் பேய்ச்சிப் பாறையைச் சூழ ஒரு சிங்கார வனம் ஏற்படுத்தினார். அதில் அரிய செடிகள் வைத்துப் பயிராக்கப்பட்டிருக்கின்றன. சாயங்காலம் உல்லாசமாக ஆண் பெண் இரு பாலரும் பொழுதுபோக்க அங்கு வந்து உட்கார்ந்தும் உலாவியும் சல்லாபமாடியுமிருக்கிறார்கள். இது சென்னை பெங்களூர் முதலிய பெரிய நகரத்திலிருப்பது போல இருக்கிறது என்கிறார்கள்.

## ஹைஸ்கூல்

இவ்வூரில் மஹாஜன ஐஸ்கூல் என ஒன்று இருக்கிறது. மாணவர்களுக்கு அது போதவில்லை என்று முனிசிபாலிட்டியில் ஒரு ஐஸ்கூல் ஏற்படுத்தினர். அது மெத்த உபகாரமாகவே இருக்கிறது. பரோபகாரமான இவைகளை உண்டாக்குவதற்குப் பல வழியிலும் இடைஞ்சல்

எற்பட்டன. சில ஜனவிரோதங்களும் தோன்றிற்று. என்றாலும் அவற்றைப் பாராட்டாது இப்புண்ணிய வேலைகளை முடித்தார். இவ்வுபகார குணத்தை வகுத்தவருக்கும் அவருடைய சகாக்களுக்கும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டவர்களாக இருக்கிறோம்.

இவரது மாமனார் ஜே.எம்.நல்லசாமி பிள்ளையவர்கள் பி.ஏ.பி.எல். இந்த ராஜதானியில் பல ஜில்லாக்களில் டிஸ்திரிக்ட்டு முனிசிபாக இருந்தவர். அவர் சைவ சித்தாந்த சாஸ்திரங்களை இங்கிலீஷில் மொழி பெயர்த்துள்ளார். இவரை ஆங்கில பாஷியகாரர் என்று சைவர்கள் புகழ்வார்கள். தமிழிலும் சில நூல்கள் எழுதி யுள்ளார். இவரது பிரசங்கத்துக்குப் பல இடங்களிலிருந்து பாதிரி மார்கள் வருவார்கள். இவரது சைவ நூல் புத்தகங்கள் ஜர்மனியார் கொண்டாடி வாங்கிப் படிப்பார்கள். தமிழர்கள் முன்னுக்கு வர வேண்டுமென்று மிகுந்த அக்கரை கொண்டவர்.

## வைத்தியசாலை

இங்கே முனிசிபல் ஆஸ்பத்திரி இருப்பதுடன் பாதிரிகளுடை யதும் இருக்கிறது. பாதிரிமார் வைத்தியசாலை கோஷா ஆஸ்பத்திரி மிகு புகழ் கொண்டு விளங்குகிறது. கவரவமான நிலையிலுள்ளவர் களின் வீட்டுப் பெண்களும் கூட, உபசரிப்பு அக்கரை கொண்டு கவனிக்கும் விஷயத்தையும் கருதி, (ஆஸ்பத்திரி) க்கே பிரசவத்திற்குப் போகிறார்கள். இவற்றிற்கு அதன் தலைவரான ரெவரெண்டு பாப்லி துரை அவர்கள் நடத்தும் முறையாகும். அப்பெரியார் தமிழறிஞர். தமிழில் போற்றத்தக்கவாறு உபநியாசம் செய்கிறார். அம்மட்டோ, திருக்குறளை இங்கிலீஷில் மொழி பெயர்த்திருக்கிறார். அநாகரீகமாக இருந்த ஆதிதிராவிடர்கள் மறு பிறவியுற்று வந்தாலென்ன நாகரீகராகச் செய்துள்ளவை முதலியன போற்றத்தக்கனவாக இருக்கின்றன.

அவ்வூரில் வெங்கட நாயக்கர் என்னும் வர்த்தகர் தமது பொருளைத் தருமத்திற்கு எழுதி வைத்து, இரண்டாவதாக மக்களுக்கு வைத்திருக் கிறார். பழைய ரயில்வே ஸ்டேஷனுக்கு அருகில் கட்டிடமிருக்கிறது. யாவரும் அறிவர். இவரது குமாரர் ஈ.வெ. ராமசாமிப்பெரியார் எனப்புகழ்ந்து பேசுபவர். இவரது தமயனும் நூலறிவுள்ளவரே.

## புகை வண்டி

சென்னை இருப்புப் பாதையுடன் திருச்சினாப்பள்ளிக் கிளை சந்திக்கும் இடமாக இருக்கிறது. ஸ்டேஷன் வெகு நேர்த்தியாகக் கட்டப்பட்டிருக்கிறது.

## பேரோடு

விநாயகன்
செல்லாண்டியம்மன்
கரிகாலி - அப்பிச்சி



## சித்தோடு

விக்கினேசுரன்
மாகாளியம்மன்
வேணுகோபாலப் பெருமாள்
மாகாளியம்மன்
காமாட்சியம்மன்

கண்ணன்- காணி

## திண்டல்

விநாயகன்
மலைக்குமார சுப்பிரமணியர்
பத்திரகாளிம்மன்
கருமலையான்

காடை, கண்ணன் - காணி

## இலவமலை

விநாயகர்
செல்லாண்டியம்மன்
உதியமரத்துக் கருப்பண்ணன்

சாத்தந்தை - காணி

## திருவாச்சி

கணபதி
கதிரோபல மூர்த்திப் பெருமாள்
கரிய காளியம்மன்

தூரன், ஆந்தை, ஓதாளன், அந்துவன் - காணி

## பனயம்பள்ளி

கணபதி
பொன்காளிம்மன்
ஆயி அம்மன்
முத்தாலம்மன்

பொருளந்தை - காணி

## ஓடா நிலை

கணபதி
பொன்காளி

சாத்தந்தை - காணி

முருங்கைத்தொழு

பரமசத்தி ஈகரர்

வடிவுடையமங்கை

படைவெட்டி விநாயகர்

சுப்பிரமணியக் கடவுள்

அணிரங்கமூர்த்தி

வாகைத்தொழு அம்மன்

ஆயியம்மன்

செல்லாண்டியம்மன்

மாகாளியம்மன்

பெரியகுலம்- காணி

## தாராபுரம்

### தென்கரை நாடு

தாராபுரமென்பது வஞ்சிபுரம், இலாடபுரம், ராஜராஜபுரம், தில்லாபுரம், என்பனவாதி பெயர்கள் கொண்டுள்ளது. இது ஆம்பிரா நதியின் மேல் கரையிலுள்ளது. ஆம்பிரா நதி பொருநை, ஆன் பொருநை, அமராவதியென்றும் பெயர் பெற்றுள்ளது. சங்கப்புலவர் களால் தண்ணான் பொருனை என்று 36-ம் புறப்பாட்டிலும், வஞ்சிப் புறமதில்லைக்கும், தண்ணான் பொருனை என 387-ம் பாட்டினும், வியந்து கூறப்பட்டுள்ளது. பெரிய கோட்டை சூழ்ந்த கடிஸ்தலம் இங்கு ஒரு ராஜா, ராஜப்பிரதிநிதி ஆட்சி புரிந்துள்ள தானம்.

அகத்தீசுரர், அகிலாண்டேசுவரி, சமயங்காத்த விநாயகர், சுப்பிரமணியர், வரதராஜப்பெருமாள் முதலிய ஆலயங்கள் நகரத்துளிருக்கின்றன. இப்பொழுது நதிக்குக் கட்டியுள்ள பாலத்துக்கு வடக்கு ஒரு மயிலில் தில்லாலம்மன் கோயில். அதற்கு இந்தத் தாராபுரம் கடிக்குச் சார்ந்த நாடுகள் 24. வடபுரம் ஒரு பர்லாங்கில் வயலிடையே ஒரு திட்டில், யட்சி சந்திரப்பரப தீர்த்தங்கரர் திருவுருவம் 5 அடி உயரத்தில் நல்ல வேலைப்பாடாகவும், இன்னும் புதைந்து காணப்படும் பிம்பங்களும் இருக்கின்றன. அவ்விடங்களில் பல நந்தி, சிவலிங்கங்கள் பாணி வட்டங்கள் உடைந்தும் புதைந்தும் கிடக்கின்றன. தில்லாபுரியம்மன் கோவிலைச் சமீப காலத்தில் புதுப்பித்திருக்கிறார்கள். இதனால் இக்கோயில் சாசனங்கள் தெரியவில்லை. கோயிலின் முன் ஒரு பலகைக் கல் கிடக்கிறது. அதில்:-



சாலி ககஉருக்கு மேல் செ ்லா நின்ற சாளயுக்தி வருஷம் புதவாரம் தசமி உத்தரம் மீன லக்கினம் இப்படிப்பட்ட சுபதினத்தில் கொங்கு வஞ்சி...லாடபுரம், ராஜ ராஜபுரம், விதாபுரம், கறைய நாடு காணி கொண்டது, பிராமண கவுண்டன், ...நல்லா....ட்டி கவுண்டன் நல்லமுத்து கவுண்டன், சின்னணகவுண்டன், தெய்வம் வஞ்சி யம்மன் தில்லாபுரி பிரமராயன்... தில்லாரியம்மன் சாசனத்திற் குறித்த சேரகுல வேளாளர்களால் மாதத்தில் 15 நாளும், பிடாரி கோயில் பூசகர்களான பண்டாரங்களால் மற்றை பதினைந்து நாளும்பூசை செய்யப்பட்டு வருகிறது.

ஆனால், சேர வேளாளர்கள் என்று சொல்லும் கொங்குப் புலவர்கள் தங்களைச் சார்ந்தவர்களல்லர் என்கிறார்கள்.

அழிவுற்ற கோட்டைக்குள் ஆஞ்சநேயர் வீரபத்திரர், உத்தமராகவப் பெருமாள் ஆலயங்களிருக்கின்றன. உத்தமராகவப் பெருமான் கோவிலினுள் நம்மாழ்வார் உடையவர் சொருபங்களிலிருக்கின்றன.

விஜயநகரம் வீரகிருஷ்ண தேவராயர், சதாசிவ தேவராயர், கோனேரின் மேல் கொண்டான் என்னும் சோழர்களுடைய சாசனங் களும், திப்பாசய்யர், நஞ்சையர் முதலியோர் தரும சாசனங்கள் தமிழிலும், நகரலிபி கன்னட மொழியிலும் இருக்கின்றன. வீரபத்திர ஸ்வாமி கோவிலின் முன் ஒரு பிராமணர் தன் பொருளில் பாதி மக்கள் முதலியோர்களுக்கும் மற்றைய பாதி தரும சாதனங்களுக்கு என்றும் நாகரலிபியில் குறிப்பிட்ட சாசனக்கல் கிடக்கின்றன.இங்குள்ள கோயில்கள் கட்டுவதற்காக வெட்டித்தயார் செய்த கற்கள் அல்ல. அங்கங்கே பெயர்த்து புதைந்து கிடக்கும் சிவலிங்கப் பெருமான் கோயில்களிலிருந்தோ அல்லது ஜைன விக்கிரகங்கள் கி ‘பதால் ஜைனப்பள்ளிகளிலிருந்தோ பிரிந்து வந்து கட்டினதாக இருக்க வேண்டும் எனத் தோற்றுகின்றன. பழய கல் வெட்டுச் சுவர்க் கற்கள் உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. அவை அங்குமிங்கும் தலைமேல் கீழாகவும்,குறுக்காகவும் வெட்டியுள்ள சாசன எழுத்துக்கள் காணப்படுகின்றன.

அகத்தீசரர் கோயில் ஆதிசைவர்களாலும், பெருமாள் கோயில் களில் கலியாணராமசுவாமி கோவில் தென்கலை வைஷ்ணவராலும், பூசிக்கப்படுகிறது. கலியாண ராமசுவாமிகோயிலில் உத்சவ மூர்த்தி மூன்றரை அடி உயரத்தில் இருக்கிறது. அம்மன்கள் உம்மைகூர் நஞ்கண்டன் கூடலிலிருப்பதாக அர்ச்சகர்கள் கூறுகிறார்கள். மற்றை உத்தமராகவப் பெருமாள் முதலிய கோவில்கள் தென்கலை வைஷ்ணவர்களாலும், வீரபத்திர சுவாமி கன்னட வீர சைவராலும், பூசிக்கப்படுகிறது. நதி ஓரத்தில் ஆஞ்சநேயர்கள் மத்வ ஆசாரர்களால்

பூசிக்கப்பட்டு வருகின்றன. இவற்றுள் காடு அநுமந்தராயர் கோயில் பெரிது. வைகாசி மாதத்தில் ரத உத்சவம் 12 நாள் பிராமண போஜனம். இதற்கு மைசூர் ஐதராபாத் பெங்களூர் முதலிய இடங்களிலிருந்து மத்வ பிராமணர்கள் வருகிறார்கள். வேளை 1-க்கு 2000, 3000 பிராமணர்கள் சேருகிறார்கள். மிகுந்த சிறப்பாக நடக்கிறது. இவ்விடத்தே பாடசாலையில் வாசிக்கும் 5 பிள்ளைகளுக்குச் சாப்பாடு கொடுத்து வருகிறார்கள். இதற்காகவும் அப்பிரமேயர் பூசை முதலிய வற்றிற்காகவும் வருஷம் 100 சலகை நெல் வரக்கூடிய நிலத்தை பட்டக் காரர் வேணுடையார் குடும்பத்தில் தரும சாசனம் செய்திருக்கிறார்கள். ஊரருகே நதியும் ஊரில் இடையே பாசன வாய்க்கால் ஓடுவதும் நீர்வளம் உண்டு.

இந்நகரத்துள்:-

| | | |
|---|---|---|
| ஐஸ்கூல், டிஸ்டிரிக்ட் போர்டு | ... | 1 |
| மஹமதிய லோயர் ஆண் டிரி ஸ்கூல் | ... | 1 |
| பெண்டு | ... | 1 |
| மிஷின் ஸ்கூல் | ... | 1 |
| ஆஸ்பிடல் முனிசிபாலிட்டி | ... | 1 |
| முனிசிபாலிட்டி லோ.ச.ஸ்கூல் | ... | 7 |
| மெஸ் | ... | 5 |
| ஆதி திராவிடர் ஸ்கூல் | ... | 1 |
| ஜின்னிங் பாக்டரி | ... | 4 |
| அரிசி அரைப்பது | ... | 5 |

இந்த சேரகுல வேளாளர்கள் பிள்ளை யென்ற பட்டங் கொண்டவர்களாக வாழ்ந்திருக்கிறார்கள். ஆனால் அவர்களின் தலைமையானவர்கள் கவுண்டன் என்னும் பெயர்புனைவது வழக்கமாம். இப்பொழுதும் கவுண்டன் பிராமணப் பிள்ளை என்பது போல் வழக்கம்.

## கொற்றனூர்

இது அமராவதியாற்றருகில் மேல்கரை போல் உள்ளது தென் கரை நாட்டுக்கொற்றனூர்.

ஸ்ரீ தென்னீசுரர்

அகிலாண்ட நாயகியம்மன்

இக்கோயிலுக்கு வீரராஜேந்திர சோழன் மானியம் கொடுத்திருக்கிறான். வீரசோழிய மென்னும் தமிழிலக்கணத்தில் எல்லா உலகும்



ஏற்றிய வெண்குடைச் செம்பியன் வீரராஜேந்திரன் என்று குறிக்கப் பட்டிருப்பவனாவான். இவன் சாசனம் 1070-க்கு மேலாகிறது.

இக்கொற்றனூருக்கு அடுத்துத் தெற்கு ஒரு மைலில் மறவ பாளையம் என இப்பொழுது வழங்கும் தலத்துக்கும் இப்பெயரே அங்கு ஸ்ரீ அப்பிரமேயாசுரர், பெரிய நாயகியம்மன் (பிரஹத் நாயகி) இதில் கோயில் வாசற்படி நிலவு காலில் ஸ்வஸ்தி ஸ்ரீ குலோத்துங்க தேவற்கு யாண்டு பத்தாவ்து சாசனமும், பின்புறமும் மற்றொரு சோழ சக்கிரவர்த்தி சாசனமும், கீழே குமுதவரியில் ஸ்வஸ்தி வீரவல்லாள தேவற்கு தென்கரை நாட்டுக் கொற்றனூரில் ஆவுடையார் அப் பரமேசுரமுடையார் தேவகன்மிகளுக்கும் தானிகர்க்கும் ஓலை கொடுத்த பரிசாவது என்று ஒரு சாசனம், இந்த வீரவல்லாள தேவர் பல்லவ அரசன் அருணாசல புராணத்தில் கூறும் மகாபக்த சிகாமணி சாம்பலோத்தமராகிய அரசர், பின்புறம் வீரநஞ்சயராய உடையார் தென்கரை நாட்டுக் கொற்றனூர் என ஆரம்பித்துள்ள சாசனமும் இருக்கிறது. இவர் மைசூர் அரசராவார்.

அக்கோயில் முன்புறம் குறட்டு வாசல் மண்டபத்தில் இடப்புறத் தூணில் இந்த சிவலிங்கப் பெருமான் தோன்றிய ஆதிசரித்திரமாகிய ஓர் ஆயர் சிறுவன் பசுக்களை மேய்க்கச் சென்றது. பசு பால் சொரிவது, சந்தேகித்து புதையை வெட்ட , சிவலிங்கப் பெருமான் திருமுடி மேல் மண்வெட்டி பட்டு இரத்தந் தோற்றக் கடவுள் என்று பூசை புரிந்ததும், பிம்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன.

வலப்புறத் தூணில் எருதின்மேல் பொதி போட்டுவரும் செட்டியை சிவபிரான் மனித வடிவாக வந்து கொஞ்சம் மிளகு கேட்பதும், இது மிளகு அன்று, பயறு என்று வணிகன் கூறுவது , கேட்பதும், இது மிளகு அன்று, பயறு என்று வணிகன் கூறுவது , கிழக்குத் திசை சென்று விலைபேசி மிளகுக்கு முன்பணம் வாங்கி மூட்டையை அவிழ்க்க பயராக இருந்தது கண்டு பயந்து கடவுளை வேண்டிக் கொள்ள மிளகு ஆனதும், அந்தத் தொகையைக் கொண்டு வந்து கோயில் கட்டின குறிப்புகள் பிரதிமைகளாக வெட்டப் பட்டிருக்கின்றன.

பின் மற்றை மண்டபங்கள் திருமதில்கள் எல்லாம் இந்நாட்டுப் பட்டக்காரரான வேணுடையாரால் கட்டப்படடிருக்கிறது. முன் கோபுரம் ஒரு பால் விற்கும் இடையர் மாதுவால் கட்டப்பட்டதாம்.

அப்பிரமேயர் கோயிலின் முன் இளையான் மண்டபம் என்று ஒரு மண்டபம். இது இத்தலத்துக்கு அப்பிரமேயர் புராணம் பாடின இளையான் கவிராயர் கட்டியது. அம்மண்டபத்துத் தூணில் ஒரு பிரதிமையும் வெட்டப்பட்டுள்ளது. இது இளையான் கவிராயர் என்கிறார்.

### பெரிய நாச்சியம்மன்

முன் கூறிய தென்னீசுரர் கோவிலுக்கு அடுத்தாப்போல் வடக்கே பெரிய நாச்சியம்மன் என்று அழைக்கப்படும் பத்திரகாளியம்மன் கோயில் இருக்கிறது. அக்கோயிலின் முன் வலப்புறம் சுவரில் கலியுக சகாத்தம் 4890 -க்கு சாலிவாகன 1716 க்கு செல்லாநின்ற ஆனந்த வருஷம் சித்திரை மாதம் பெரிய நாச்சியம்மன் திருப்பணி கற்பகிரக அர்த்த மண்டபம் மகாமண்டபம் பூந்தேர் பொன்னூஞ்சலுக்கு அதிபரான வேணுடையான் உபயம். பாப்பனாசாரி :-

" அக்கோயில் மகாமண்டபத்து மேற்பாவு கல்லில் சிறுக் கிணறு ஆந்தைகுலப்பெரியண்ணன் உபயம்.

அதே மண்டபத்து மேற்பாவு கல் ஒன்றில் கடா கொண்டு வருதல் குழந்தையை வெட்டுதல். பூந்தேர் ஊஞ்சல் முதலியது இன்னும் சில குறிப்புகளாக 11 பிம்பங்கள் வெட்டப்பட்டன.

### தென்னீசுரர்

ஊரின் வடபுறமாகத் தென்னீசுரர் ஆலயமிருக்கிறது. அகிலாண்ட நாயகி, இக்கோயிலுக்கு வீரராஜேந்திர சோழன் மானியம் கொடுத் திருக்கிறான். ஸ்வஸ்திஸ்ரீ வீரராஜேந்திர சோழன்....தென்கரை நாட்டுக் கொற்றனூர் ஆளுடைய தென்னீசுரமுடையஎன்று கோயிலின் முன் மண்டபச் சுவரில் இருக்கிறது. வீர சோழிய மென்னும் தமிழ் இலக்கியத்தில் எல்லாவுலகும் மேவிய வெண் குடைச் செம்பியன் வீரராஜேந்திரன் எனக்கூறிய அரசனாவான். இவன் கி.பி. 1062 -ல் இருந்திருக்கிறான். அன்றியும் கோயிலைச் சுற்றிலும் பல அரசர்களின் சாசனங்களிருக்கின்றன.

இக்கோயிலுக்கும் அப்பிரமேயர் கோயிலுக்கும் இடையே சங்கராண்டம்பாளையத்தில் முக்குத் தொட்டாடிய விநாயகன் கோவில். முக்குத் தொட்டாடல் என்பது ஒரு விளையாட்டு. மூன்று மூலையில் ஒவ்வொருவர் பிடித்துக் கொள்வது. மற்றொருவன் " நாலுமூலைப்பட்டி நந்தவனப்பட்டி ஓடுங் குதிரைக் குட்டி, உடனே தொட்டாச்சு" என்று பாடிக்கொண்டு, நான்கு மூலையும் சுற்றிக் கொண்டு வருவன். அவனை நிற்பவர்கள் எட்டிப் பிடிப்பார்கள். அவர்களுக்குச் சிக்காமல் வரவேண்டும். சிக்கினால் தோல்வி யுற்றவன்.சுற்றி வரவேண்டும். இவ்வாட்டத்தில் இளைப்பான ஒரு சிறுவன் தினமும் தோல்வியுற்று வருந்தி விக்கிநேசுரனை வேண்டிக் கொண்டான். ஏழை பங்காளனாகிய யானைமுகக் கடவுள் ஒரு சிறு வாலிபனாகத் தோன்றி இந்த விளையாட்டில் தினம் தோல்வி யுறுபவன் ஸ்தானத்தில் நின்று ஆடினான். ஜெயித்தான். யாவன் இவன் என உற்றுப் பார்த்தார்கள். மறைந்து விட்டனர். எல்லோரும் ஆச்சரிய முற்றார்கள். அதனால் அது முதல் முக்குத்தொட்டாடிய விநாயகர்



எனப் பெயராயிற்று. அக்கோயிலை அடுத்து பிராமணர் வீடுகள் இருக்கின்றன. அதை அடுத்து இந்நாட்டுக்கு அதிபதியாயும் விளங்கி வரும் வேணுடையார் திருமலை. இவர்களது சரித்திரம் பின்னர் விளக்குவோம். அதற்கு கிழக்கே ஆற்றருகே ரத்னமூர்த்தி கோவில். அது வேணுடையார் கோவில். அப்பிரமேயர் கோயிலுக்கும் தென் னீசுரர் கோயிலுக்கும் ஏகதேசம் 2 - மையில். இவ்வளவும் முன்னாள் நகரமாக இருந்திருக்க வேண்டும். கோட்டையுள்ளதால் தான் கோட்டை மாரியம்மன்எனப் பெயர். மானியமும் உண்டு.

காணியாளர்கள்.

காவலுவன், குழாயம், பெரிய குலம், ஆந்தை, சேரன், செம்பூத்தன், வணிகன்

### இளையான் கவிராயர்

தென்கரை நாட்டுக் கொற்றனூர் இலக்குவ நாயக்கன் பேட்டை என வழங்கும் குறிச்சி என்னும் கிராமங்களில் கிராமக்கணக்கு எழுதும் சீர் கருணீகர் மரபினராகிய வைத்தியநாத பிள்ளை என்பவர் ஒருவரி ருந்தார். அவரது தவப்பயனால் இளைச்சியண்ணன் என ஒரு சற் புத்திரர் பிறந்தார். அவர் இளமையிலேயே இலக்கிய இலக்கணங் களைக் கற்றார். இதிகாச புராணங்களை நன்கு உணர்ந்தார். திரண்ட சிவ பக்திமான். ஆலய வழிபாட்டில் அழுத்தமான அன்புடையவர். திருஞான சம்பந்த மூர்த்தியை உபாசனா மூர்த்தியாகக் கொண்டவர். " நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்றவாறு பிறரும் சிவபக்தி அடியார் பக்தி ஆலய வழிபாடு புரிய வேண்டுமென்னும் கருத்தால், " காகமுறவு கலந்துண்ணக் கண்டீர் அகண்டா கார, சிவ போக மெனும் பேரின்ப வெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமாய், ஏக வெளியாய்க் கிடக்குதையோ இனி நாமிந்த உடலை விட்டுத், தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேர வாரும் சகத்தீரே என்ற வண்ணம் ஒவ்வொருவரையும் வற்புறுத்தி ஆலயத்துக்கு அழைப்பார். சிவ புராணங்களைக் கேட்குமாறு வேண்டி உரைப்பார். பிரசங்க வன்மை யுடையவரானதால் யாவரும் வந்து கேட்பர். பிரசங்கம் முற்றுப் பெறுகிற வரையில் ஒருவரும் எழுந்திருக்க மாட்டார்கள். வல்லார்க்கும் வல்லார் அல்லார்க்கும் சுவை பெறுமாறு, பிரசங்கம் புரிவர். இவர் அவிநாசிக் கடுத்த நடுவச்சேரிக் கிராமக் கணக்கப் பிள்ளையின் அருந்தவப்புதல்வியை மணந்து இல்லறம் நடத்தி இருந்தனர். " எட்டுச் செங்கலினாயினும் ஈர்ஞ்சடை வேணி-வட்டச் சென்னியான் ஆலயத் திருப்பணி வகுத்தல், ஒட்டிப் பெற்ற இவ்வுடற் பயனாமென உணர்வீர்" என்று பிறர்க்கு இவர் எடுத்துரைப்பதோ டமையாது தானும் அவ்வித திருப்பணியில் புகுந்து அப்பிரமேய

ஈசுரர் ஆலயத்தின் முன்புள்ள மண்டபத்தைக் கட்டி வைத்தார். அம் மண்டபத் தூணில் இவருடைய உருவமும் வெட்டப்பட்டிருக் கிறது. இளைச்சியண்ணன் மண்டபமென்று இன்னும் கூறுகிறார்கள்.

இவர் மாமனார் ஊராகிய நடுவச்சேரியிலிருந்து கொண்டு அவிநாசித் தலப்புராணம பாடினார் என்று பெரியோர்கள் கூறு கிறார்கள். கொற்றை நகர் அப்பா மேயர் புராணமும் பாடியுள்ளார். வித்தையிலும் புத்தியிலும் பத்தியிலும் சிறந்தவர்களான கொடை யாளிகளுக்குச் சீட்டுக்களெழுதுவதும் உண்டு. உதாரணமாக அக் காலத்தில் புரவிபாளையத்தில் சிற்றரசராகப் பெரிய கோப்பண னென்றொரு கொடையாளி இருந்தார். அவர் வாரக்கு நாடு களந்தை நகர்க்கு அதிபர். மூவரசர் காலத்தும் திகழ்ந்த குறுநில மன்னர் மரபினர். முன்னொருவனைப் பற்றி கொங்கு மண்டல சதகம் ஏழாவது பாட்டு கூறுகிறது. மேலும் அவர்களின் முன்னோர்கள் பேரூர், அவிநாசி முதலிய ஆலயங்களில் கல்வெட்டுக்கள் கூறு கின்றன. அந்தப் பெரிய கோப்பண்ணனுக்கு இவர் எழுதிய சீட்டுக் கவி ஒன்று கிடைத்திருக்கிறது.

உலகை ஒருகுடை நிழலிலங்கு செங்கோன்மன்ன
    ரொளிரு முடி மிசையசையவே
ஊடெழுது தமிழ் வகை நாலாவிதக்கவியு
    முதவ மிர்த மதுரவாக்கி
இலகிய சிவாகம புராணீக வவதானி
    யினிய பிரசங்க விரகன்
எழுது கருணிக்கனாம் திருவருட் சந்தான
    விளையா னனுப்பு மோலை
குல குருல திகல நுதல் சய்கிராம துங்கவேள்
    குரகதததுரக நகுலன்
குடை கருணை யாதிபதி தென்களந்தைப் பெரிய
    கோப்ப னெதிர் கொண்டு காண்க
அலகில் பல புகழ் பெறு குமாரசாவாமியோர்
    அஷ்டகம் கொண்டு வாரார்
அது கேட்டு நீயவர் சிந்தாகுலந்தீர
    ஆடகம் வழங்கு வாயே.

கலியுக சகாப்தம் 4734 க்கு மேல் வாயுறைக்கா நாட்டுக் களந்தைக் காணிப்பூலுவர் பெரும்பற்றார் சந்திரகுமாரர் கோபமன்றாடியார்



கந்தசாமிக் கவுண்டர் கட்டிவித்த கற்பக்கிரகம் முடிந்தது.

பேரூரில் சுவரின் ஒரு கல்லில் சித்தார்த்தி வருஷம் 2350 1993-554

இன்னும் இவர் சரிதத்துக்கு ஆதரவான செய்யுள்.

மாடவர் கோன் கொற்றை வைத்தியநாதன் விளையான்
பாடல் செய்தான் இன்பப்பரைத்காண ஆபல் செய்த
அற்புதானந்த அவிநாசி மான்மியத்தைச்
சொற்பனு லாகத்தொகுத்து...

அப்பிரமேயர் தலபுராணத் தனியன்
மருவளர் செந்திருவனசத்தார் சுசிலன்
வரிசையன்ன பரித்துவசன்றன குபேரன்
திருவளர்சேர் திருமாடல் கோத்திரத்திற்
செனித்ததிகத் தமிழ்கடலான் றேர்ந்த நெஞ்சன்
அருள்பரவு மப்பரமேசர் புராண
மவிநாசிலிங்கர் புகழிரண்டுஞ் செய்து
வருண முதற்சம்பந்தர் பதத்தைப் போற்றி
வளரிளையான் தமிழுலகில் வாழிதானே

இவரைக் கூறுகின்ற தனியன்கள் வைத்திய நாதன் விளையான் என்று தந்தை பெயரைப் புரைர்த்திக் கூறுவதுண்டு. இது பண்டைக்கால வழக்கு -

-----

கோயம்புத்தூர் ஜில்லா சில சாசனப் புஸ்தகம் 107 வது பக்கம் 105 நெம்பர் தாறாபுரம் தாலூக்கா டிவிஷன் காங்கயாம் தாலூக்கா ஊதியூர் முதலிபாளையம் மிட்டா மறவபாளையம் அப்பரமேஸ்வர சுவாமி தேவஸ்தானத்தில் எழுதியிருக்கப்பட்ட சாசனங்களுக்கு சரியான நகல் கெர்ப்பக்கிரகம் பின்புரம் பிரகாரம்படி வரியில் ஸ்வஸ்ஸ்ரீ குலோத்துங்க சோள ராசன் சோழதேசத்து திருவளத்தான் செல்லா நின்ற நளாய நாட்டுக்குச் சேர்ந்த தென்கரைநாடு கோஸ்ட்னூறை ஆளம் உடையார்

அப்பரமேஸ்வர உடையாருக்கு சங்கர சத்திரத்து நிலம்காக

கேரா மக்காவில் யிறுப்பரு நாக கல்லருக்கு விட்ட நிலம்,

தென் கரைநாட்டு நிலம் பேரூர் மேல் கரையில் ஆண்டநாயகி நிலத்துக்கு வடக்கு சொக்கநாதசாமி நிலத்துக்கு தெற்கு தென்வடல் கவுருக்கு கிழக்கு புளியமரத்துக்கு மேற்கு. தா 40 - இந்த நிலம் ஏளு மாவுமகுமார பரல்லியர் குடுக்த நமக்கு வாலார் பொறை

நானும் யாரும் கேட்கக் கடவார்களாகவும் இ்‌த தருமம் அளித்தவன் ஏதேழு சென்னப்பர் அணிவார் மகேசுவரர் சாக்ஷி 106 நெ. ஸ்வஸ்தஸ்ரீமான் மகாமண்டலீகாரன் அபிப்பதால் வசன நடன் பரராணசகற் குத்தப்பு வறாயன் கண்டன பூர்வதக்ஷிண பக்ஷிம உதார சமுத்திராதிபதி ஸ்ரீவரகதேவறாயர் குமாரர் அரிய சஜயர் செல்லாநின்றன நாரதன் வருஷய ஆவணி ௵ 25 தேதி தென்கரை நாட்டு வரும் எங்கள் கரட்டில் அப்பரமேஸ்வர உமையர் தேவஸ் தானங்களுக்கும் உடையானுக்கும் பூர்வம் நடந்த மருவாருளும் நாச்சியார் படுக்கை உபயம்.

*****



## பிற்சேர்க்கை

## கொங்குமண்டல ஊர்த்தொகை

### நூல்முறை

தண்டமிழாய் பவர்பதிகள் தரிசிப்போர் தொன்மைச்
சரிதமுறை விவகரிப்பேர் தடுமாற்று உறாது
மண்டலத்துள் இருபத்து நான்குநாடு அவற்றை
மருவுஉபநாடு. ஒவ்வொன்றின் மன்னியபே ருரைப்
பண்டரசர் செப்பேடு கல்லெழுத்துத் தமிழ்நூல்
பல ஆய்ந்து பிழைபோக்கி பழங்கவியும் இதுகொள்
வண்டெனயான் இசைகவியும் தொகுத்ததனைக் கொங்கு
மண்டலஊர்த் தொகையெனப்பேர் வழங்கவிளக் கினனே.

### கொங்கு 24 நாடுகள்

சொல்லஅரி தானபூந் துறைசைதென் கரைநாடு
தோன்றுவா ரக்கநாடு
தோவாத பொன்கலூர் நாடுநிகழ் ஆறை அளி
தோய்ந்தவா ரக்க நாடு

வல்லமை செறிந்ததிரு வாவிநன் குடிநாடு
மணநாடு தலையநாடு
வரதட்டை பூவாணி அரையநாடு ஏடுவங்கம்
வடகரை கிழங்குநாடு

நல்லுருக் காநாடு வாழவந் தியும்அண்ட
நாடுவெங்காலநாடு
நாவலர்கள் சொல்கா வடிக்காநாடு ஆனைமலை
ராசிபுர நாடுதிதமும்

இல்லறம் வளர்ந்துதவு மல்குகாஞ் சிக்கோயில்
இயல்செறி குறுப்புநாடு
இனியபுகழ் சேர்கொங்கு மண்டலம் தனியான
இருபத்து நான்கு நாடே*

| | |
|---|---|
| பூந்துறை நாடு | ஒடுவங்கநாடு |
| தென்கரைநாடு | வடகரைநாடு |
| காங்கேயநாடு | கிழங்குநாடு |
| பொன்கலூர் நாடு | நல்லுருக்கா நாடு |
| ஆறைநாடு | வாழவந்திநாடு |
| வாரக்கநாடு | அண்டநாடு |
| திருவாவிநன்குடிநாடு | வெங்காலநாடு |
| மணநாடு | காவடிக்காநாடு |
| தலையநாடு | ஆனைமலைநாடு |
| தட்டயநாடு | இராசிபுரநாடு |
| பூவாணியநாடு | காஞ்சிக்கோயில் நாடு |
| அரையநாடு | குறுப்புநாடு |

## மேல்கரைப்பூந்துறைநாடு

பூந்துறைசை வெள்ளோடை நசியனூர் எழுமாதை
புகழ்சேர் பிடாரிநகரம்
பூங்கமழும் ஈங்கியூர் பெருந்துறை சாத்தம்பூர்
பொன்காள மங்கலம் அதும்

ஆய்ந்த தமிழ் கூறும் குழாநிலை கிழாம்பாடி
ஆண்மைகொள் முடக்குறிச்சி
அநுமநகர் பழமங்கை குலவிளக்குக் காகம்
அறச்சலூர் விளக்கேத்தியும்

* கொங்கு 24 நாடு பின்பு 42 நாடுகள் ஆனது. தாராபுரம் சூழ்நாடு 24 ; கோட்டை சூழ்நாடு 6 ; குன்றத்தூர் சூழ்நாடு 12.



வேந்தர்மகிழ் ஈஞ்சநக சத்தியமங் கலம்அதும்
மிக்கசே ரூர்மங்கலம்
வீரநகர் ஈரோடு பேரோடு சித்தோடு
மிக்கான திண்டல்புதூர்
சேர்ந்துமழை பெய்திடும் இலவமலை திருவாச்சி
திகழ்பனசை ஒடாநிலை
தென்முருங் கைத்தொழுவு முப்பத்தி ரண்டூர்
சிறந்தபூந் துறைசை நாடே

| | | |
|---|---|---|
| பூந்துறை | பழமங்கலம் | சித்தோடு |
| வெள்ளோடு | குலவிளக்கு | திண்டல்புதூர் |
| நசியனூர் | காகம் | இலவமலை |
| எழுமாத்தூர் | அறச்சலூர் | திருவாச்சி |
| பிடாரியூர் | விளக்கேத்தி | பனயம்பள்ளி |
| ஈங்கூர் | ஈஞ்சம்பள்ளி | ஓடாநிலை |
| பெருந்துறை | சத்தியமங்கலம் | முருங்கத்தொழு |
| சாத்தம்பூர் | சேமூர் | (தலைமைத்தலம் |
| காளமங்கலம் | மங்கலம் | சென்னிமலை |
| குழா நிலை | வீரகநல்லூர் | ஊர்த்தொகையுள் |
| கிழாம்பாடி | ஈரோடு | சேரவில்லை) |
| முடக்குறிச்சி | பேரோடு | |
| அனுமன்பள்ளி | | |

## கீழ்கரைப் பூந்துறைநாடு

மோரூரு டன்முளசை குலவும்ஏ மப்பள்ளி
முற்றுதக டப்பாடியும்
மோடமங் கலம்மேழிப் பள்ளிஇருப் புலிபிரிதி
முட்டில்சிறு முளசைஅணிமூர்

நீரூர்கு மரமங்கை அகரம்சே தாபுரம்
நிழலுற்ற கருமாபுரம்
நீதிவட் டூர்மணலி கோக்களையும் உஞ்சனியும்

நிலைகொள்கூத் தம்பூண்டியும்
சீருரும் ஆனங்கூர் கொக்கரா யன்பேட்டை
தேவைகா டச்சிநல்லூர்
செயமா விரட்டியுடனேலத்தி வாடிடும்
செய்யபடை வீடுபட்டிலூர்

ஏருர் வயல்கழனூர் மண்டபத் தூர்தோக்கை
இன்பமிகு சித்தளந்தூர்
இணையில்கத் தாரியுடன் முப்பத்தி ரண்டூர்கள்
இனியபூந் துறைநாடே.

| | | |
|---|---|---|
| மோரூர் | கருமாபுரம் | பட்டிலூர் |
| முளசை | வட்டூர் | கழனூர் |
| ஏமப்பள்ளி | மணலி | மண்டபத்தூர் |
| தகடப்பாடி | கோக்களை | தோக்கைவாடி |
| மோடமங்கலம் | உஞ்சனி | சித்தளந்தூர் |
| மேழிப்பள்ளி | கூத்தம்பட்டி | கத்தேரி |
| இருப்புலி | ஆனங்கூர் | (கோட்டைத்தலம் |
| பிரிதி | கொக்கராயன்பேட்டை | சங்ககிரியும் |
| சிறுமுளசை | தேவணாங்குறிச்சி | புண்ணியத்தலம் |
| அணிமூர் | கூடச்சிநல்லூர் | திருச்செங்கோடும் |
| குமரமங்கலம் | மாவிரட்டி | இடம் பெறவில்லை) |
| அகரம் | லத்திவாடி | |
| சேதாபுரம் | படைவீடு | |

## பருத்திப்பள்ளிநாடு
### (பூந்துறை நாட்டின் இணைநாடு)

சீர்பருத் திப்பள்ளி மல்லைகோட் டைப்பதி
திகழ்கருங் கல்பட்டியும்



திறமிகும் கொன்னையாறு அவிநாசிப் பட்டியும்
செயமேவு பண்டிநத்தம்

ஏர்கொழுங் கொண்டைகூத் தாநத்தம் வைகுந்தம்
இசைகரும னூர்தாழையூர்
ஏகாபுரம் புள்ளா நகர்நடுவ னேரியுட
ஷேகன் னந்தேரியும்

பேர்கொள்தப் பக்குட்டை கூடலூர் மங்கலம்
பேரிடங் கணசாலையும்
பேணுக்ச் சுப்பள்ளி இரணா புரம்கனகை
மெய்சண்டை பாலைமுஞ்சை

பார்கொள் பல்லக்குழி கண்டமா ணிக்கமும்
பகர்ஆட்டை யாம்பட்டியும்
பழுதில்மாம் பூண்டிமின் னாம்பள்ளி மரப்பறை
பருத்திநன் னாடுதானே

| | | |
|---|---|---|
| பருத்திப்பள்ளி | தாழையூர் | சண்பகாமாதேவி |
| மல்லசமுத்திரம் | ஏகாபுரம் | பாலமேடு |
| கோட்டைப்பாளையம் | புள்ளாநத்தம் | முஞ்சனூர் |
| கருங்கல்பட்டி | நடுவனேரி | பல்லக்குழி |
| கொன்னையாறு | கன்னந்தேரி | கண்டகுளமாணிக்கம் |
| அவிநாசிப்பட்டி | தப்பக்குட்டை | ஆட்டையாம்பட்டி |
| பண்டிநத்தம் | கூடலூர் | மாம்பூண்டி |
| கொழுங்கொண்டை | மங்கலம் | மின்னம்பள்ளி |
| கூத்தாநத்தம் | இடங்கணசாலை | மரப்பறை |
| வைகுந்தம் | கச்சுப்பள்ளி | |
| கருமனூர் | இரணாபுரம் | |
| | கனககிரி | |

## ஏழூர் நாடு

(பூந்துறைநாட்டின் இணைநாடு)

ஏழூரி னோடுநாட் டாமங்கை கலியாணி
எழில்நவனி முசிரிபுத்தூர்
இணையில் தாழம்பாடி தும்பை நகர் மானத்தி
இளநகரி மாறப்பனூர்
தாழா மருர்ப்பட்டி முதலையின் பட்டியொடு
தனிநல்லி பாளையமுடன்
தங்குகொண்ட டப்பனூர் சிவியான நரிமுத்
தக்காளூர் மின்னாம்பளி
வாழைமிகு சேந்தமங் கலமோர் துத்திக்குளம்
வண்மைகா ளப்பனூரும்
மாழைவெட் டுக்காடு வேளைகரு காவியும்
மாபுடங் கந்திருமலை
காழிகண் ணூர்ப்பட்டி யோடுடுப் பங்காரை
கவின்வலங் காணிஅகரம்
கருதுமுத் தப்பனூர் முப்பத்தி ரண்டிவ்வூர்
காணும்ஏ ழூர்நாடரோ

| | | |
|---|---|---|
| ஏழூர் | முதலைப்பட்டி | புடங்கம் |
| நாட்டாமங்கலம் | நல்லிபாளையம் | திருமலைப்பட்டி |
| கலியாணி | கொண்டப்பனூர் | கண்ணூறுப்பட்டி |
| நவணி | சிவியாம்பாளையம் | கலங்காணி |
| முசிரி | முத்தக்காள்பட்டி | உடுப்பம் |
| புத்தூர் | மின்னாம்பள்ளி | காரைக்குறிச்சி |
| தாழம்பாடி | சேந்தமங்கலம் | அகரம் |
| தும்பங்குறிச்சி | துத்திக்குளம் | முத்தப்பனூர் |
| மானத்தி | காளப்பநாயக்கன்பட்டி | (மலைக்கோட்டை |
| இளநகரி | வெட்டுக்காடு | நகரம் நாமக்கல் |
| மாறப்பனூர் | வேளுக்குறிச்சி | இந்நாட்டினதே) |
| மருர்ப்பட்டி | கருதாணி | |



## தென்கரை நாடு

கோதிலாக் கொற்றனூர் மூல னூரும்
குறிச்சிஇளம் பிள்ளைவீ ராச்சி யோடு
ஏதிலா ரும்புகழும் தூரம் பாடி
எதிரனூர் பிரமியமும் நீலம் பூரும்
ஊதியூ ருடன்கொழுமண் குழிகி ழானார்
உயர்குண்ட லுடன்பன்னி ரண்டூர் சேர்ந்து
நீதிசேர் தென்கரைநாடு ஆகும் என்றார்
நிரம்புகல்வி கற்றபெரும் புலவர் தாமே

| | |
|---|---|
| கொற்றனூர் | எதிரனூர் |
| மூலனூர் | (மாம்பாடி) |
| குறிச்சி | பிரமியம் |
| இளம்பிள்ளை | நீலாம்பூர் |
| (முளையாம்பூண்டி) | ஊதியூர் |
| வீராச்சிமங்கலம் | கொழுமண்குழி |
| தூரம்பாடி | கிழான்குண்டல் |

(கோட்டை நகர் தலைமையான தாராபுரம் இந்நாட்டுள் அடக்கம். நறையூர் நாடு என்ற வழக்கும் உண்டு)

## காங்கேய நாடு

காங்க யத்துடன் வல்லிதன் காடையூர்
கந்தர் மேவிய பட்டாலி கீரனூர்
ஓங்கு பார்ப்பதி நற்பரஞ் சேர்வலி
உற்ற காரை மருநுறை வெண்முத்தூர்
தேங்கு கண்ண புரம் வெள்ளை கோவிலும்
சிறந்த ஆறு தொழுஆலாம் பாடியும்
தீங்கி லாதகங் காகுல நாட்டார்
செழிக்கும் காங்கய நலாடெங்கள் நாடே

| | |
|---|---|
| காங்கயம் | முத்தூர் |
| வள்ளியறைச்சல் | கண்ணபுரம் |
| காடையூர் | வெள்ளைகோயில் |
| பட்டாலி | ஆறுதொழு |
| இரணூர் | ஆலாம்பாடி |
| பார்ப்பதி | (சிவன்மலை காங்கேய |
| பரஞ்சேர்வளி | நாட்டின் பொதுத்தலம்) |
| காரையூர் | |
| மருதுறை | |

## பொன்கலூர் நாடு

பொங்கலூர் கொடுவாயி செம்பைகுன் றாபுரம்
புற்றிரசை உகாய நகரம்
புகல்பொருந் தாபுரி திருப்பையூ ருடனேற்
புகழ்பெரும் பிள்ளைநகரம்
தங்கும்இச் சிக்காணி வானவன் சேரியொடு
தளிகைநிறை அங்கிநகரம்
சரவணநல் லூர்பல் லாபுரி குடிமங்கை
தகைமையுடன் ஒதுதென்ன
மங்கலம் தென்பள்ளி லக்கம்பெற் றம்பள்ளி
வாய்த்தநம நாரிஎழில்சேர்
மண்ணறை முகுந்தநல் லூர்அமுக் கயம்கற்றை
மாலூற்ற லூர்சிறந்த
புங்கமிகு காஞ்சிநதி லவணநதி ஆண்கொல்லி
புராரிநதி மாமாங்குசூழ்
பூர்வீக அலகுமலை ஆண்டவன் அரகபுரி
பொன்கலூர் நாடுதானே

| | |
|---|---|
| பொன்கலூர் | சரவணநல்லூர் |
| கொடுவாயி | பல்லாக்கோயில் |
| செம்புத்தொழு | (பொட்டிக்காம்பாளையம்) |
| (சொக்கம்பாளையம்) குடிமங்கலம் | |



| | |
|---|---|
| குன்றிடம் | தென்னமங்கலம் |
| புற்றிரைச்சல் | தென்பள்ளி |
| உகாயனூர் | இலக்கம்பாடி |
| பெருந்தொழு | பெற்றம்பள்ளி |
| திருப்பூர் | நமநாரி |
| பெரும்பிள்ளையூர் | மண்ணறை |
| இச்சிக்காணி | நல்லூர் |
| அலகுமலை | அமுக்கயம் |
| தளிகை (அவிநாசிபாளையம்) | கத்தாங்கண்ணி |
| நிறையூர் | ஊற்றுக்குழி |
| அங்கித்தொழு | |

## தென்பொங்கலூர் நாடு

இரணூர் பொம்மநல்லூர் கேடில் பருத்தியூர்
நாரிபொன்னி பாடியொடு ராயகுளம் - வீரமிகந்
தங்ககூத் தம்பூண்டி தானாம்ஆ றாருந்தென்
பொங்கலூர் நாடாய்ப் புகல்

| | |
|---|---|
| இரணூர் | பொன்னிபாடி |
| பொம்மநல்லூர் | ராயகுளம் |
| பருத்தியூர் | கூத்தம்பூண்டி |

## ஆறை நாடு

சேவைநகர் அன்னியூர் வெள்ளாதி கோமங்கை
திசை;;கழ வாழ்முடுதுறை
தென்கவசை துடியலூர் நீலநகர் பேரையொடு
தெக்கலூர் கரைமாதையூர்
மேவுபுகழ் அவிநாசி நஞ்சைகா ஹூர்கரவை
வெண்பதியும் இருகாலூரும்
விரைசேரும் உழலையொடு வடதிசையில் உறுகின்ற

வெள்ளையாம் பாடிநகரும்
நாவலர்க்கு இனிதான திருமுருகன் பூண்டியொடு
நலசெவளை பழனைநகரும்
நம்பியூ ரோடேலத் தூருக்கிரம் புலவர்
நகரமுடன் இனிமையான
கோவில்நகர் தொண்டைமான் புத்தூரு முட்டமே
கூடலூர் சிங்கநகரும்
குடக்கோட்டூர் குள்ளந் துறைப்பதியு வாள்வந்தி
கோட்டைக்கரை ஆறுநாடே

| | | |
|---|---|---|
| சேலூர் | அவிநாசி | எலத்தூர் |
| அன்னூர் | கஞ்சப்பள்ளி | உக்கிரம் |
| வெள்ளாதி | கானூர் | புலவர்நகர் |
| கோமங்கை | கருவலூர் | (கருக்கம் பாளையம்) |
| (கோயில்முத்தூர் - | வெள்ளையன்பதி | கோயில்பாளையம் |
| கோயமுத்தூர்) | இருகாலூர் | தொண்டாமுத்தூர் |
| முடுதுறை | உழலை | முட்டம் |
| கவசை | வெள்ளையன்பாடி | கூடலூர் |
| (கோயில்பாளையம் | திருமுருகன் பூண்டி | சிங்காநல்லூர் |
| சர்க்கார்சாமக்குளம்) | செவளாபுரி | குடக்கோட்டூர் |
| துடியலூர் | (நடுவச்சேரி) | குள்ளந்துறை |
| நீலம்பூர் | பழனை | வாளவந்தி |
| பேரூர் | (பெருமாநல்லூர்) | கோட்டைக்கரை |
| தெக்கலூர் | நம்பியூர் | |
| கரைவழி மாதப்பூர் | | |

அவிநாசியுள்ளிட்ட பதிகள் 'வடபரிசாரநாடு' என்பது சாசன வழக்கு.

'ஆறு நாடு' எனக்கொண்டு
காவியஞ்சூழ் கோவைகோ வங்க நாடு
கவித்துவளர் அன்னியூர் மன்னி நாடு
மேவியசா மக்குளத்தூர் கவைய நாடு



மிக்கசேலூர் தனக்குச் செம்பை நாடு
தேவிநடு வச்சேரி தணக்கு நாடு
செய்சவள பூண்டியாம் பெருமா நல்லூர்
ஆவிபெறும் பழனைநாடு இவையென்று ஓதும்
ஆறநாட்டு இதன்பெருமை அளக்கொ ணாதே.

1) கோவங்கநாடு 2) மன்னிநாடு 3) கவைய நாடு
4) செம்பைநாடு 5) தணக்குநாடு 6) பழனநாடு
எனக்கூறுவதும் ஒருவகை.

## வாரக்கநாடு

பூமேவு தென்சேரி திருவளர் களந்தையும்
புகழ்கொண்ட பல்லடமுடன்
பூமலூர் அழகாய பேறைமா நகரமும்
புகல்குயிலை சூரனூரும்
தேமேவு சோலைசெறி சாமளா புரம்எழில்
செய்புதுமை வெள்ளலூரும்
திரமான கோடிநகர் மங்கலம் வாகையொளிர்
சேர்நிகமம் ஆவலூரும்
பாமேவு வாணி நடி கொண்டிலகும் இரவலர்கள்
பகரஅரி தாயபுத்தூர்
பன்னுமறை அந்தணர்கள் வாழ்வில் செழித்திடும்
பழமைமிகு சிங்கநல்லூர்
மாமேவு செந்தா மரைப்பொய்கை யும்காஞ்சி
மாநதி வயங்கமேலாம்
மாநிலம் புகழ்மந்திர கிரிமுருகர் வாசம்செய்
வாரக்க நாடுதானே.

| | |
|---|---|
| தென்சேரி (செஞ்சேரி) | புதுவை |
| களந்தை | வெள்ளலூர் |
| பல்லடம் | கோடிநகர் |
| பூமலூர் | நிகமம் |
| பேறை | ஆவலப்பூம்பட்டி |
| குயிலை | புத்தூர் |
| சூரனூர் | சிங்காநல்லூர் |
| சாமளாபுரம் | |

## ஆவிநன்குடிநாடு

### (வையாபுரிநாடு என்பதும் இதுவே)

திருமிகும் பழனியூர் கோதைமங் கலமுடன்
செப்புகலை யம்புதூரும்
சேரமா னூர்இறைய மங்கலம் மடந்தூரு
திகழ்கடத் தூரினுடனே
அருமைமிகு கணியூர்கண் ணாடிப் புதூருடன்
அழகுமிகு கோட்டைத்துறை
ஆகும் கொழுங்குண்டை மேல்கரைப் பட்டிலூர்
அமர்தேவ தாகுடியுமே
பெருமைமிகு ஆய்க்குடியி னோடுஅமரர் பூண்டியும்
பிசகா மணிச்சிலம்பு
பீடுறும் கொழுமம்வாழ் கரையோடு ஈரொன்பதூர்
பிறங்குபுகழ் ஓங்குநாடும்
உரிமையுடன் இரவலர்கள் மனநிலைமை யாய்த்துள்ளும்
உவந்துதவு கின்ற செய்கை
உத்தமர்கள் மேவுதிரு ஆவிநன் குடியென்ன
உயர்வுமிகு வளநாடரே

| | | |
|---|---|---|
| பழனியூர் | கடத்தூர் | தேவதாகுடி |
| கோதைமங்கலம் | கணியூர் | ஆய்க்குடி |
| கலயமுத்தூர் | கண்ணாடிப்புத்தூர் | அமரர்பூண்டி |
| மானூர் | கோட்டைத்துறை | மணிச்சிலம்பு |
| இறையன்மங்கலம் | மேல்கரைப்பட்டிலூர் | கொழுமம் |
| மடத்தூர் | கொழுங்கொண்டான் | வாழ்கரை |

## மணநாடு

### (மணலூர் நாடு)

தென்னிலை கூடலூர் சேர்கோடந் தூர்நடந்தை
சின்னத்தா ராபுரமும் சேர்ந்துமிக - உன்னிதங்கள்
சூழ்ராஜ மாபுரமும் சூடா மணியிலவை
வாழ்மணலூர் நாடாய் வழுத்து

| | | |
|---|---|---|
| தென்னிலை | நடந்தை | சூடாமணி |
| கூடலூர் | சின்னதாராபுரம் | இலவனூர் |
| கோடந்தூர் | ராஜபுரம் | |



## தலையநாடு

தங்குபுங்கம் பாடிஅர வக்கு - றிச்சி
தகுசேந்த மங்கலமும் நன்மு டக்கூர்
பொங்குசாந் தப்பாடி இனுங்க னூரும்
புகழ்வேளாண் பூண்டிஎழில் தலையூர் ஓங்கும்
மங்கைகன்னி வாடிகிழான் கொண்டல் சின்ன
மருதூரி டக்கலப்பாடி அறிஞர் எல்லாம்
புங்கமிகு குமரபா ளையத்தினோடு
போந்தபதின் மூன்றூரும் தலையநாடே

| | | |
|---|---|---|
| புங்கம்பாடி | இனுங்கனூர் | சின்னமருதூர் |
| அரவக்குறிச்சி | வேளாண்பூண்டி | இடக்கலப்பாடி |
| சேந்தமங்கலம் | தலையூர் | குமரபாளையம் |
| முடக்கூர் | கன்னிவாடி | |
| சாந்தப்பாடி | கிழான்குண்டல் | |

## தட்டயநாடு

வண்மைமிகு புலியூர்உப் படமங்கலத்தி னோடு
மணவாடி சவதாப்புநீள்
வாலரா சன்புரம் தான்தோன்றி ஏழூரு
வாழ்வுமிகு வெள்ளியணையும்
திண்மைமே லைப்பாளை யத்துடன் கட்டளை
திருவனூர் சனப்பிரட்டி
சிரங்க நாதபுரம் மணவாசி ராமகிரி
திகழாச்சி மங்கலமுடன்
அண்மையுள கூடலூர் நொச்சிபட் டியும்அப்பி
யாபாளை யம்சிறப்பாய்
அமர்கோயி லூர்பிச்சை பட்டிகொடை யூர்மூக்க
ணாங்குறிச்சி யும்மண்ணுளோர்
உண்மையுரை தோரணக் கல்பட்டி அறிஞருக்கு
உதவிடும் பாதநத்தம்
உரைத்தஇவ் விருபத்தோ டைந்தூர்களும்சேர
உற்றதட் டயநன்னாடே

| | | |
|---|---|---|
| புலியூர் | வெள்ளியணை | கூடலூர் |
| உப்படமங்கலம் | மேலைப்பாளையம் | நொச்சிப்பட்டி |

## கீழ்கரை அரையநாடு

திருவுலவும் இடையாறு திடுமல்வன் பொத்தனூர்
திகழ்கபிலை பாண்டமங்கை
தென்கபிலை மாநகர் வெங்கரை சிராப்பள்ளி
சிகைசமரு தூர்கொந்தளம்
மருவுலவும் ஆனங்கூர் குன்னம்வட கரையாறை
வண்மைசிறு நல்லிகோயில்
வளர்கொற்ற மங்கைமா தேவிநல் இளம்பள்ளி
வாய்மைகொள் ராமதேவம்
தருவுலவு சோழன்சி காமணியு டன்சித்த
சன்நகர் பெருங்குறிச்சி
தனைகமைநல் ஊர்மணிய னூரொடு
செருக்கலை
தாளக்கரை கோவாரம்
பருவம்உயர் பரமுத்தி சேலூரு மாவையும்
பண்ணுமா ணிக்கநத்தம்
பகர்கலங் காநிலையும் ஆனநா லெட்டூர்கள்
பழுதில்கீழ் அரையநாடே

| | | |
|---|---|---|
| இடையாறு | கொந்தளம் | பெருங்குறிச்சி |
| திடுமல் | ஆனங்கூர் | நல்லூர் |
| பொத்தனூர் | குன்னம் | மணியனூர் |
| கபிலமலை | வடகரைஆற்றூர் | செருக்கலை |
| பாண்டமங்கலம் | சிறுநல்லிகோயில் | தாளக்கரை |
| கபிலக்குறிச்சி | கொற்றமங்கலம் | கோலாரம் |
| வெங்கரை | மாதேவி | பரமுத்தி |
| சிராப்பள்ளி | இளம்பள்ளி | சேலூர் |
| சிகசை | ராமதேவம் | மாவிரட்டி |
| மருதூர் | சோழசிராமணி | மாணிக்கநத்தம் |
| | சித்துப்பூண்டி | கலங்காநிலை |



## ஒடுவங்கநாடு

சீருலவி டும்தடப் பள்ளிகூ டற்கரை
திருக்கணாம் பேட்டையுடனே
திகழ்சத்தி மங்கைஅர வக்கோட்டை கலையனூர்
திறமைமிகு சிறுமுகைநிதம்
காருலவி வரும்இரு காலூர்கா ராப்பாடி
கருத்துரு மதிப்பனூரும்
கனிவுமிகு வானிபுத் தூரெழில்வின் ணப்பள்ளி
கனமாம் இரும்பரையுடன்
ஏருலவும் ஆலத்தூர் கெம்மநாய்க் கன்பட்டி
இணைமேவு சதுமுகையதும்
இறையவர்க்கு உபதேசம் ஓதும்மலை ஆண்டவன்
இன்பம் சிறப்பதான
பாருலகில் உத்தண்ட தவளமலையான் கிருபை
பாலிக்க நின்றுவளரும்
பரிவுமிகும் ஒடுவங்க நாட்டிலுள அனைவரும்
பலகாலம் மிகவாழ்கவே

| | | |
|---|---|---|
| தடப்பள்ளி | கலையனூர் | இரும்புரை |
| கூடற்கரை | சிறுமுகை | ஆலத்தூர் |
| திருக்கணாம்பேட்டை | இருகாலூர் | கெம்மநாயக்கன்பட்டி |
| சத்தியமங்கலம் | காராப்பாடி | சதுமுகை |
| அரவக்கோட்டை | மதிப்பானூர் | |
| | வானிபுத்தூர் | |
| | விண்ணப்பள்ளி | |

இதன் இணைநாடு தனாயக்கன் கோட்டைநாடு, படிநாடு என்பனவாம்.

## வடகரைநாடு

அந்தியூ ரும்பட்டி ஊரும் குறிச்சிபூ
லாம்பட்டி சம்பைவானி
ஆப்புகூ டலினோடு கீழ்வானி மூங்கில்நகர்
ஆனமூ கப்பனூரும்

பைந்தரு விளங்குகரு வல்வாடி தன்னோடு
பகரமாப் பேட்டைபொன்னிப்
பழநதிக் கரைநெருஞ் சிப்பேட்டை வளவயல்
பரவுஎண்ண மங்கலமுடன்
செந்திரு விளங்கவளர் கோட்டை பூதப்பாடி
சேருநகர் ஊர்உலகடம்
செழியகன் ஊப்பிலி பருவாச்சி பிரமயம்
சிர்கட்டி யின்சமுத்திரம்
வந்தனை செயும்பெரியர் தங்குபூ னாச்சியுடன்
வளர்சென்னம் பட்டிஎன்ன
மாகவிஞர் சாற்றுமிரு பத்துநான் கூர்களும்
வடகரைநன் னாடுதானே

| | | |
|---|---|---|
| அந்தியூர் | மூங்கில்பட்டி | நகலூர் |
| பட்டிலூர் | மூகயனூர் | உலகடம் |
| குறிச்சி | கருவல்வாடி | கன்னப்பிலி |
| பூலாம்பட்டி | அம்மாப்பேட்டை | பருவாச்சி |
| சம்பை | நெருஞ்சிப்பேட்டை | பிரமியம் |
| பவானி | எண்ணமங்கலம் | கட்டிசமுத்திரம் |
| ஆப்புக்கூடல் | கோட்டை | பூனாச்சி |
| கிழ்வானி | பூதப்பாடி | சென்னம்பட்டி |

## கிழங்குநாடு

திருவேட்ட மங்கலமும் புகலி யூரும்
செழியதோட் டக்குறிச்சி தேவர் எல்லாம்
கருவேட்டுப் பரவுகடம் பன்குறிச்சி
கருதரிய வாங்கல்நெரூர் ஆமா றூரும்
மருவேட்டு மலர்கரைசேர் காஞ்சி யின்கீழ்
மன்னிஎழில் காவிரித்தென் கரையின் நீ!?
ஒரு ஏட்டில் எழுதவொண்ணா வளப்பம் எல்லாம்
உயர்ந்தொளிரும் பழம்பதியாம் கிழங்குநாடு

| | | |
|---|---|---|
| வேட்டமங்கலம் | தோட்டக்குறிச்சி | வாங்கல் |
| புகலியூர் | கடம்பன்குறிச்சி | நெரூர் |



## நல்லுருக்காநாடு

சமத்தூர்மா னுப்பட்டி அந்தியூர் புக்குளம்
தளிவாழை வாடிசித்தூர்
தாழ்வில்பூ லாங்கிணறு கஞ்சிவா டியினோடு
சாற்றுடுக் கம்பாளையம்
நிமித்தமுறும் அங்கலக் குறிச்சிஏர்ப் பட்டியும்
நீள்குறிச் சிக்கோட்டையும்
நேமம்உறும் உடுமலைப் பேட்டைவே லூர்வளம்
நீள்குறுஞ் சேரியூரும்
அமைத்தகோட் டூர்புதூர் மலையாண்டி பட்டணம்
அழகிளைய பாளையத்தோடு
அமர்சடைய பாளையமும் ஏலம்இல வங்கமும்
கரியமிளகு ஆதிவிளையும்
திமிர்த்தனம் இலங்குவெண் கோட்டிபமும் ஓங்கச்
செழித்துவளர் பூனாச்சியும்
திகழவல் லார்த்தேவி புரியுநல் லார்க்கணிரை
செறியுநல் லுருக்கநாடே.

| | | |
|---|---|---|
| சமத்தூர் | பூலாங்கிணறு | வேலூர் |
| மானுப்பட்டி | கஞ்சிவாடி | குறுஞ்சேரி |
| அந்தியூர் | உடுக்கம்பாளையம் | கோட்டூர் |
| புக்குளம் | அங்கலக்குறிச்சி | புதூர் |
| தளி | ஏர்ப்பட்டி | மலையாண்டி பட்டணம் |
| வாழைவாடி | குறிஞ்சிக்கோட்டை | இளையபாளையம் |
| சித்தூர் | உடுமலைப்பேட்டை | சடையபாளையம் |

## வாழவந்திநாடு

வாகுசேர் தருவாழ வந்திகூ டற்சேரி
வாய்த்தபுல் லூர்மோகனூர்
மருவுகி ரம்பூரு வல்லிபுரம் அதனோடு
மனத்திடத் தோளூரினும்
மேகமென நீடுசாத் தம்பூரு சொல்லுக்கு
மேலான திண்டமங்கை

வித்தக நடந்தையும் ஆரியூர் கோதையூர்
மேலைசாத் தம்பூருடன்
ஆகமந் தெரிபிள்ளை கரையாறு கோதூரும்
அம்பிகை மடப்பள்ளியும்
அழகுறு பிராந்தகம் தளிகைசெங் கைப்பள்ளி
அருள்மேலை ஆரியூரும்
கோகனை முத்தாறு குடகனொடு காவிரி
குலவு சீரங்கம் அதுவும்
கொங்கமண்டலம்மேவு நாலாறு நாட்டினில்
குடவாழ வந்திநாடே

| | | |
|---|---|---|
| வாழவந்தி | சாத்தம்பூர் | கோதூர் |
| கூடற்சேரி | திண்டமங்கலம் | மடப்பள்ளி |
| புல்லூர் | நடந்தை | பிராந்தகம் |
| மோகனூர் | ஆரியூர் | தளிகை |
| சீரம்பூர் | மேலைச்சாத்தம்பூர் | செங்கைப்பள்ளி |
| வல்லிபுரம் | பிள்ளைக்கரை | மேலைஆரியூர் |
| தோளூர் | | |

## தூசூர் நாடு

(வாழவந்தி நாட்டின் இணைநாடு -1)

மருவுலவு தூசியூர் குவளமா பட்டியுடன்
வளம்பெரிய தோகைநத்தம்
வளர்சிதம் பரப்பட்டி முத்தக்கா பட்டியும்
வருபழைய பாளையமுடன்
தருநிலவு வேப்பையும் வசந்தரா யன்கோயில்
தருலத்தி வாடிபரணி
தாதுலவு பொன்னேரி புதுப்பட்டி புதுக்கோட்டை
தங்கும்ஆ லப்பட்டியும்
விரிவுமிகு நாமக்கல் கோடங்கிப் பட்டியும்
வெற்றிசீ ரங்கநல்லூர்
வீறான திப்பிரமா தேவிஎரு மைப்பட்டி
வீரசோ முரசைநத்தம்



திருவுலவு தட்டையம் பட்டிமேட் டுப்பட்டி
சீர்கொள்ளும் அருவூருடன்
செய்யபுத் தூர்அலங் காநத்த மும்சேர்ந்து
செயதூசூர் நாடுதானே.

| | | |
|---|---|---|
| தூசியூர் | பரளி | திப்பிரமாதேவி |
| குவளம்பட்டி | பொன்னேரி | எருமைப்பட்டி |
| தோகைநத்தம் | புதுப்பட்டி | அரசநத்தம் |
| சிதம்பரப்பட்டி | புதுக்கோட்டை | ரட்டையம்பட்டி |
| முத்தக்காபட்டி | பாலப்பட்டி | மேட்டுப்பட்டி |
| பழையபாளையம் | நாமக்கல் | அரூர் |
| வேப்பநத்தம் | கோடங்கிப்பட்டி | புத்தூர் |
| வசந்தராயன்கோயில் | நல்லூர் | அலங்காநத்தம் |

## விமலை நாடு

(வாழவந்தி நாட்டின் இணைநாடு - 2)

கருமைஅயி லூருடன் விருதுகாட் டுப்புதூர்
கனகடா ரம்உன்னியூர்
காமதரு வாஞ்சியாப் பிள்ளைபுத் தூர்நத்தம்
கமழ்நாக யநல்லூரும்
அருமைதனில் மேலாம் பிடாரமங் கலமுடன்
ஆனஒரு வந்தூரதும்
அருமைமெய்க் காநாய்க்கன் பட்டிகாட் டுப்பட்டி
அமர்சேர்வை காபுரணூரும்
வருமைமழை பொழிகளத் தூர்முருங் கைப்பதியும்
வண்மையாண் டாபுரமுடன்
வரிசைமேட் டுப்பட்டி தமிழ்வலைய பட்டியும்
வானோங்கு புத்தூருமே
திருகொள்வேந் தன்பட்டி அரசலூர் முதலபல
செல்வமிகு நகரம்எல்லாம்
சேர்ந்துபல வளமையுடன் ஓங்கும்அலை நதிபரவு
சீர்விமலை நாடுதானே.

| | | |
|---|---|---|
| அயிலூர் | பிடாரமங்கலம் | ஆலங்டாபுரம் |
| காட்டுப்புத்தூர் | ஒருவந்தூர் | மேட்டுப்பட்டி |
| கடாரம் | மெய்க்காநாயக்கன்பட்டி | வலையர்பட்டி |
| உன்னியூர் | காட்டுப்பட்டி | புதூர் |
| சிப்பின்ளார்புத்தூர் | சேர்வைகாரன்பட்டி | வேந்தன்பட்டி |
| நத்தம் | களத்தூர் | அரசலூர் |
| நாகயநல்லூர் | முருங்கை | |

## அண்ட நாடு

சீர்கொண்ட பொன்னிநதி வானியான் பொருநையும்
சேர்கொங்கு மண்டிலத்தில்
சிறப்புமிகும் இருபத்துநான்குநாட் டிற்கவை
தெரிந்தநா வலர்மிகுந்து
பேர்பெறு விருப்பாட்சி பெரியநற் கோட்டையும்
பெருமைசேர் கொற்றைமேடு
பிரபலம் பெறுபுரவி யூர்கள்ளி மாந்தெத்து
பிசகாத கரைசைப்பொது
பார்புகழு மாம்புறைவி னோடுஇடைய கோட்டையும்
பகர்குட்ட மொடுகவுத்வம்
பண்புமிகு கல்லா புரம்புகழ் பூதிப்புரம்
பலக்கணூற் றெண்ணும்பதி
நார்கொண்ட கேதின் குறும்புபுலி யூர்நத்தம்
நவிலும்இம் மூவைந்தெனும்
நகர்சூழ்ந்த வளநாடு புவனிபுகழ் தருகின்ற
நல்அண்ட நாடுதானே

| | | |
|---|---|---|
| விருப்பாட்சி | கரைசைப்பொது | கல்லாபுரம் |
| பெரியகோட்டை | மாம்புறை | பூதிப்புரம் |
| கொற்றைத்திட்டு | இடையகோட்டை | பலக்கணூற்று |
| புரவியூர் | குட்டம் | கேதுகுறும்பு |
| கள்ளிமாந்தெத்து | கவுத்துவம் | புலியூர்நத்தம் |



## வெங்கால நாடு

காருற்ற புன்னம் பவுத்திரம்நா கம்பள்ளி
காளிக்குறிச்சி குப்பம்
கமழ்தும்பி வாடியும் நெடுங்கூர் கோயம்பள்ளி
காசிபாளை யம்கோயிலூர்
சீருற்ற விகுர்தநா யகர்வெஞ்ச மாக்கூடல்
சீராம புரமதோடு
சேர்பள்ள பாளையம் வெங்கடா புரமுடன்
திகழ்திமிர்ந் தப்பட்டியும்
பேருற்ற ஆற்றூரு முதலபதி னாறூர்கள்
பெருமைபெற வேபொருந்தி
பிணிமுகப் பீலியும் கயமருப்பு ஆரமும்
பிரசமுமு தாதுமலரும்
ஏருற்ற மறியலைச் செங்கையால் இருகரை
எறிந்துவரு சிற்றாறுடன்
இணையிலான் பொருநைநதி சூழஆ னிலைஓங்கு
இன்பவெங் காலநாடே.

| | | |
|---|---|---|
| புன்னம் | நெடுங்கூர் | இராமபுரம் |
| பவுத்திரம் | கோயம்பள்ளி | பள்ளபாளையம் |
| நாகம்பள்ளி | காசிபாளையம் | வெங்கடாவரம் |
| காளிக்குறிச்சி | கோயிலூர் | திமிர்ந்தம்பட்டி |
| குப்பம் | வெஞ்சமாங்கூடல் | ஆற்றூர் |
| தும்பிவாடி | | |

## இடைப்பிச்ச நாடு

(வெங்கால நாட்டின் இணைநாடு)

பொன்ஆரி யூர்நெடுங்கூர் போற்றுபர முத்தியுடன்
முன்னூரும் சேர்நான்கு மூதூர்கள் - கன்னிச்
சடைப்பிச்சன் ஆடும் தலமேவு கொங்கில்
இடைப்பிச்ச நாடென்று இயம்பு

ஆரியூர், நெடுங்கூர், பரமுத்தி, முன்னூர்.

(இந்நாட்டை மணநாட்டிற்கு இணைநாடு என்றும் கூறுவர்)

## ஆனைமலை நாடு

ஆனைமலை காளிஅர சூர்மஞ்ச நாயக்கன்
அப்பிச்சி யின்புதூரும்
அர்த்தநாரி பாளையப் பாரமடை ரெட்டி
யாரூர்கோ டங்கிப்பட்டி
சோளைபொழி பெரியபோது உப்பிலிய னூர்முத்தூர்
சொல்பூச்ச நாரியுடனே
தொகுதியுறும் ஆட்டுப்புள் ளாச்சிமா றப்பனூர்
சுகசின்ன யன்பாளையம்
ஞானமுறு தாதாரா வுத்தன் புதூரோடு
நற்கம்பா லப்பட்டியும்
நாவலர்கள் புகழ்கின்ற வேட்டைக்கா ரன்புதூர்
நவமாகும் உடையகுளமும்
வானைநிமிர் மலையோங்கு காடருடன் இறவுளர்கள்
மலைசர்களும் அடைவதாக
மாதங்க வேட்டைபுரி ஆனைமலை தனில்இன்று
வளமாகும் இருபதூரே

| | | |
|---|---|---|
| ஆனைமலை | ரெட்டியாரூர் | மாறப்பகவுண்டன்புதூர் |
| காளியாபுரம் | கோடங்கிப்பட்டி | சின்னய்யன்பாளையம் |
| அரசூர் | பெரியபோது | தாதாராவுத்தன்புதூர் |
| மஞ்சநாயக்கன்பட்டி | உப்பிலியனூர் | கம்பாலப்பட்டி |
| அப்பிச்சிக்கவுண்டன்புதூர் | முத்தூர் | வேட்டைக்காரன்புதூர் |
| அர்த்தநாரிபாளையம் | பூச்சநாரி | உடையகுளம் |
| பாரமடை | ஆட்டுப்புள்ளாச்சி | |

## காவடிக்கா நாடு

உண்மைமிகு பொள்ளாச்சி நெகமம்சந் தராவரம்
ஊற்றுநகர் ராமபட்டணம்
ஒதுநா கூர்வடுக பாளையம் கோமங்கை
ஒத்தகோ பாலபுரமும்
வண்மைமிகும் மாய்ச்சிநகர் மாவலுப் பன்பட்டி
வருசலத் தூர்சிராமி
வண்ணாரின் மடைகறைப் பாடிசிங் காநல்லூர்
மருவுவெள் ளாளரூரும்



பண்மைமிகு ராசக்கா பாளையம் மாய்க்கனாம்
பட்டியுட னேப்புதூரும்
பருவமழை யகலாது பொழியவள மொடுவயல்கள்
பலனுதவி இனிதின்ஓங்கும்
திண்மையொடு குடிசெழித்துத் தான தருமம்
திருக்கோயி லும்தொழில்களும்
சேரச் சிறந்தழகி தேவடிக்கு அன்புவினை
செய்காவ டிக்கநாடே

| | | |
|---|---|---|
| பொள்ளாச்சி | கோமங்கலம் | கறைப்பாடி |
| நெகமம் | கோபாலபுரம் | சிங்காநல்லூர் |
| சந்திராவரம் | ஆய்ச்சிப்பட்டி | வெள்ளாளபாளையம் |
| ஊற்றுக்குழி | மாவலுப்பன்பட்டி | ராசக்காபாளையம் |
| இராமபட்டணம் | சலத்தூர் | மாய்க்கனாம்பட்டி |
| நாகூர் | சிராமி | புதூர் |
| வடுகபாளையம் | வண்ணார்மடை | |

## இராசிபுர நாடு

வளமிகு ராசைநகர் பாய்ச்சல் ஆலத்தூரு
வருபட்டணம் அத்தனூரும்
வன்மைமின் னாம்பள்ளி மல்லூரி னோடுவட
கன்பட்டி சீராப்பள்ளி
குளமிகு பிள்ளாநல்லூர் கூனவே லன்பட்டி
குணநத்த மேடுகல்லல்
குளத்திெனொடு மின்னக்கல் ஒருவன் குறிச்சியும்
குவிசிங் களாந்தபுரமும்
தெளிவேள் குறிச்சிகல் லுக்குறிச் சியினோடு
சேர்ந்தகரு காணியூரும்
செய்யதுத் திக்குளமும் சேந்தமங்கலம் அழகு
சேர்தொப்பைப் பட்டியுடனே
இளைஞர்சேர் நாமகிரிப் பேட்டைகலி யாணியுடன்
இருபத்து நான்கூர்களும்
எந்நேர மும்சோம்பல் இல்லாமல் வாழ்கின்ற
இராசிபுர நாடுதானே.

| | | |
|---|---|---|
| இராசிபுரம் | சேராப்பள்ளி | வேளுக்குறிச்சி |
| பாச்சல் | பின்னாநல்லூர் | கற்குறிச்சி |
| ஆவத்தூர் | கூனவேலம்பட்டி | கருதாணி |
| பட்டணம் | நத்தமேடு | துத்திக்குளம் |
| அத்தனூர் | கல்லங்குளம் | சேந்தமங்கலம் |
| மின்னாம்பள்ளி | மின்னக்கல் | தொப்பைப்பட்டி |
| மல்லூர் | ஒடுவன்குறிச்சி | நாமகிரிப்பேட்டை |
| வடகன்பட்டி | சிங்களாந்தபுரம் | கலியாணி |

கொல்லிமலையின்மேல்,

வாளவந்தி நாடு, வலப்பூர் நாடு, குண்டுர் நாடு, தின்னனூர் நாடு, அரியூர் நாடு, தேவனூர் நாடு, சேலூர் நாடு, குண்டுனி நாடு, ஆலத்தூர் நாடு, திருப்பள்ளி நாடு, இடைப்புல்லி நாடு, சித்தூர் நாடு, பிறக்கரை நாடு, பயில நாடு, முதலிய பதினான்கு நாடுகள் உள்ளன.

## சேலம் நாடு

(இராசிபுரம் நாட்டின் இணைநாடு)

வளமிகுந் திடுசேர ராயன்மலை நின்றுவரு
மணிமுத்து நதிசெழிக்கும்
வண்மைசேர் சேலம்வெண் ணந்தூர் அமாப்பேட்டை
வளர்செவ்வாய்ப் பேட்டைமல்லூர்
தனமிகும் குமரநகர் அலைவாய் நடுப்பட்டி
சௌதாபுரம் மின்னக்கல்
தணிவில்மிசி னாம்பட்டி குமரசா மிப்பட்டி
தாங்குசெம் மாண்டபட்டி
உளமகிழ நிமிரிளம்பள்ளிராக் கிப்பட்டி
ஒயிலான வீரபாண்டி
ஓதறிஞர் சந்ததம் வந்துதமிழ் பாடிடும்
உத்தமச் சோழபுரமும்
அளவில்பயன் உதவிஇன் புறுகாசி பட்டியும்
ஆண்மைவீ ரானமுடனே
அயோத்தியணி நகரமும் சேரவரும் இருபதூர்
அழகான சேல நாடே



| | | |
|---|---|---|
| சேலம் | நடுப்பட்டி , | ராக்கிப்பட்டி |
| வெண்ணந்தூர் | சௌதாபுரம் | வீரபாண்டி |
| அம்மாப்பேட்டை | (ஒலைப்பட்டி) | உத்தமசோழபுரம் |
| செவ்வாய்ப்பேட்டை | மின்னக்கல் | (கரபுரம்) |
| மல்லூர் | மிசினாம்பட்டி | காரிப்பட்டி |
| குமரபாளையம் | குமரசாமிப்பட்டி | வீராணம் |
| அலைவாய்ப்பட்டி | செம்மாண்டபட்டி | அயோத்திப்பட்டணம் |

சேர்வராயன் மலைமேல் முட்டநாடு, மோகநாடு, சேலம் நாடு என மூன்று நாடுகள் உள்ளன.

## காஞ்சிக்கோயில் நாடு

பன்னு தமிழ்இன்பம் சிறந்ததென் காஞ்சிநகர்
பண்பான கூகலூரும்
பார்புகழ்ந்தருள் கவுந்தப் பாடியுடன் அதிக
பழனமுள பாரியூரும்
பொன்னினியல் வாழும் பெருந்தலைசை யூருடன்
பொருவில்புலி யூர்முடச்சூர்
புங்கமிகு பங்கயம் இலங்கிய கலிங்கயம்
புகழே விளங்கிநாளும்
மன்னுமணி மேடைதிகழ் மின்னிய அழுக்கொளி
வளமிகு குளப்பலூரும்
வானவர் விளங்குதா ளுன்றியும் பூஞ்சோலை
மருவுபுகழ் அயிலூருடன்
கன்னிபங் காளர்திரு நீலகண் டேசுரர்
கவுரியுமை கருணையதனால்
காஞ்சிவள நாட்டவர்கள் நீடுழி காலமும்
காசினியில் வாழ்கமாதோ.

| | | |
|---|---|---|
| காஞ்சிக்கோயில் | பெரும்புலியூர் | தாளுன்றி |
| கூகலூர் | முடச்சூர் | (விக்கிரமசோழபுரம்) |
| கவுந்தப்பாடி | கலிங்கயம் | அயிலூர் |
| பாரியூர் | அழுக்கொளி | |
| பெருந்தலையூர் | குளப்பலூர் | |

## குறுப்பு நாடு

குருமந்தூர் கோசனம் செவியூர் அயிலூருடன்
கூறும் குளப்பலூரும்
கோனா அலங்கயம் முடச்சியூர் கலிங்கயம்
கோலமுறும் ஆதியூரும்
பெருகுசிவ லூர்குன்னத் தூர்அமுக் கொளியுடன்
பெருமைதரு தாளுன்றியும்
பீடுபெறு திங்களூர் மூதூர்நல் லூருடன்
போந்ததிருப் பூர்வாய்ப்பூர்
வருவிசய மங்கையும் நிரம்பையும் கூடலூர்
மறுவறு சிறுக்கழிஞ்சி
பாரில்செங் கைப்பள்ளி மண்ணறை சினாபுரம்
வன்மைசெறி பால்தொழுவுடன்
திருவுலவு வெள்ளரி வளிமுகுந் தைப்பதி
சிறந்தகற் றான்காணியும்
தேர்ந்தகொடு மணல்அமுக் கயம்தக்க ளூர்ஊற்று
சேர்குழி குறுப்புநாடே

| | | |
|---|---|---|
| குருமந்தூர் | தாளுன்றி | மண்ணறை |
| கோசனம் | திங்களூர் | சினாபுரம் |
| செவியூர் | மூதூர் | பாலத்தொழு |
| அயிலூர் | நல்லூர் | வெள்ளரிவெளி |
| கொளப்பலூர் | திருப்பூர் | முகுந்தை |
| அலங்கயம் | வாய்ப்பூர் | (பெரியபாளையம்) |
| முடச்சியூர் | விசயமங்கலம் | கற்றான்காணி |
| கலிங்கயம் | நிரம்பையூர் | கொடுமணல் |
| ஆதியூர் | கூடலூர் | அமுக்கயம் |
| சிவலூர் | சிறுக்களிஞ்சி | தக்களூர் |
| குன்னத்தூர் | செங்கைப்பள்ளி | ஊற்றுக்குழி |
| அமுக்கொளி | | |

★★★★★